உ

சிவமயம்.

திருக்களர்

# வீரசேகர ஞாநதேசிக ஸ்வாமிகள்

# சரிதம்.



திருப்பூவணம்

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,



 1932. [விலை ரூபா ஒன்று.




உ

சிவமயம்.

ஓம் சத் குருப்யோ நம:



திருக்களர்

ஸ்ரீலஸ்ரீ

# வீரசேகர ஞாநதேசிக ஸ்வாமிகள்

# புராணம்.

(திருக்களர் ஆண்டவர் சரித்திர வசநம்.)



இது

மேற்படி சுவாமிகளவர்களின் மாணாக்கர் ஸ்ரீலஸ்ரீ

சிவாநந்த ஸ்வாமிகளவர்களால்

இயற்றப் பெற்று

மேற்படி, ஸ்ரீலஸ்ரீ

வீரசேகர ஞாநதேசிக ஸ்வாமிகளவர்கள்

மாணாக்கர்

திருப்பூவண மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்

வழுக் களைந்து, மிக விரித்து

பொருட் செலவு செய்து

மதுரை, ராஜேஸ்வரி பிரசில் அச்சியற்றப் பெற்றது.

1932.



24-1

# முன் னுரை.

—o—

"திருக் களர் ஆண்டவர்" என வழங்கும் வீர சேகர ஞான
தேசிக ஸ்வாமிகளின் சரித்திரத்தினைப் 'புராண ரூபமாய் வசநமாக
ஆக்குவிக்க வேண்டும்' என்று பல அன்பர்கள் கேட்டுக் கொள்ள,
வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர், காசி வாசி சிவா
நந்த ஸ்வாமிகள் இதனை வசநமாகச் செய்தனர். இதனையே ஆயிரத்
தைந் நூறு செய்யுள் வடிவமாகவும் செய்திருக்கின்றனர். இன்னும்
வீர சேகர ஞானதேசிக ஸ்வாமிகள் மீது பிள்ளைத் தமிழும், அநேக
தோத்திரப் பாட்டுகளும், செய்திருக்கின்றார்கள். 'கோயிலூர் நால்
வர் நான் மணி மாலை' என்று ஒன்று செய்து, கோட்டையூர், க. வீ.
சொ. வீ. அழகப் பையா' என்பவர்களால் அச்சியற்றப் பெற்றிருக்
கின்றது. இவ் வசந ரூப மான புராணத்தினைச், சிக்கல்-பொருள்
வைத்த சேரி, உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் மடத்தின்
அதிபதியாகிய ஸ்ரீ மெய்யப்ப ஞான தேசிக ஸ்வாமிகள் 'குரு கைங்
கர்யம் மிகு பல னுடைத்' தெனக் கருதி அச்சிட்டு வெளியிடக்
கருத்துட் கொண்டு எமக்கு அநுப்பி அச்சிடு மாறு முன் பணமாகச்
சில பொருளும் அநுப்ப, அதனை மெய் யுரையாக நம்பி யாம் புரா
ணத்தினைச் செவ்வனே ஆக்குவித்துக் கூட்ட வேண்டியவிடத்துக்
கூட்டியும், குறைக்க வேண்டிய விடத்துக் குறைத்தும், வழுஉக்
களைந்தும், 64-பக்கங்கள் அதிகமாக்கியும், 32-பவுண் உயர்ந்த கடி
தத்தில் கிரௌன் சைசில் 164-பக்கங்கள் உடையதாக அச்சிடு
வித்துக், கோவிலூர் ஆண்டவர் துற வாண்டவர் கருணை நிதி திருக்
களர் ஆண்டவர் முதலியோர்களுடைய படங்களும் துலங்கப் பிழை
அறப் பரிசோதித்து அச்சிடுவித்தனம்.

புத்தகம் முடிந்தவுடன் பாக்கித் தொகையினை மெய்யப்ப
சுவாமிகளிடம் கேட்க, ரூபாய் அதிக மாகி விட்டபடியால் ரூபாய்
கொடுக்க வியலா தென்றும், கொடுத்த தொகையினைத் திருப்பித்
தந்துவிட வேண்டு மென்றும், மாரி முத்துச் சாமிகளையும் உடன்
வைத்துக் கொண்டு கேட்டார்கள். "சாருட் குருபத் தியுமிலார்

தமையுந் தமரெனப் பழகவுந் தகுமே." என்று சாந்த லிங்க ஸ்வாமிகள் "வைராக்கிய தீபம்" என்னும் நூலில் கூறியாங்குக்கு முரணுற அவர்களுடன் சம்பந்தப்பட்ட நாம் பூராப் பொருளுங் கொடுத்துப் புத்தகத்தினை ஒப்புக் கொள்ள வேண்டிய தாயிற்று. "காலவேற் றுமையா லெல்லாப் பொருள்களுங் கலங்கி வேறும்" என்று வாசிட்ட நூலிற் கூறியபடி மந நிலை கலங்கிப் பொய்மையே பெருக்கிப் புகலும் மெய்யப்ப சுவாமிகளை என் னென்று கூறுவது?

இந்தச் சரிதம் 100-பக்க அளவுடையதாகச் சிவாநந்த சுவாமிகள் எழுதியிருந்தனர். யாம் 64-பக்கம் அதிகமாகச் சேர்த்து ஆறு படங்களும் மிகு பிரயாசைப்பட்டு எழுதி அச்சிட்டுச் சேர்த்திருக்கின்றமையின், இதற்கு விலை ரூபாய் ஒன்று வைத்திருக்கின்றோம். திருக் கள ராண்டவரின் சரித்திரத்தினை ஒவ் வொருவரும் வாங்கிப் படிக்க வேண்டிய அவசிய மாகலின் பொரு ளுடையோர் யாவரும் அன்போடு வாங்கிப் படித்தும், "மஹான்களின் சரிதமெழுதிய புத்தகங்களில் 100 புத்தகங்களை வாங்கிப் பொரு ளிலார்க்குத் தாநம் செய்தவர்கள் கைலாயத்தினை அடைந்து கற்ப பரியந்தம் சிவகணமாகவே யிருப்பர்" என்று புராணங்கள் முறையிடுகின்றபடியால் பொரு ளிலார்க்கு வாங்கிக் கொடுத்துப் படிக்கும்படி செய்தும் வரு மாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் பாலிப்பாராக.

திருக் களர் ஆண்டவர் மீது அன்பும் பக்தியு முடைய திரவியவந்தர்கள், காசி வாசி-சிவாநந்த ஸ்வாமிகள் இயற்றிய 1500 செய்யுள் ரூபமான திருக் களர் ஆண்டவர் புராணத்தினையும், பிள்ளைத் தமிழினையும் அச்சிடுவிக்கின் மிகுந்த புண்ணியமும், மநநஞ் செய்வோருக்குச் செய்யுள் ரூபமாக இருப்பது பெரும் பய னுடைய பே ருபகாரமுமாம்.

இந்த வசந ரூப சரித்திரத்தில் நடந்தவற்றை முழுதும் விரிவாக எழுதின் நலமாம். வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள், தமது பக்தர்கட்கும், மாணவர்கட்கும், மறு முறை அச்சிடும் போது இதனைச் செய்யு மாறு அருள் பாலிப்பாராக.

திருப் பூவண மடாதிபதி,

காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,

ஆங்கீரஸ வருஷம் ஆனி மாதம்.





| நெ. | பெயர். | கலி வருஷம் | தமிழ் வரு |
|---|---|---|---|
| 1 | றா தேவ ஸ்வாமிகள் | 4991 | விகிருதி |
| 2 | சிருங்க ஞய ஸ்வாமிகள் | 4992 | கா |
| 3 | திரு வெ லிங்க ஸ்வாமிகள் | 4994 | விஜய |
| 4 | இறும் பூ ஹ்மாநந்த ஸ்வாமிகள் | 4997 | துர்முகி |
| 5 | நேரூர் யம்பிரகாச ஸ்வாமிகள் | 4997 | துர்முகி |
| 6 | பட்டீச்சு டை யப்ப ஸ்வாமிகள் | 4998 | ஹேவிளம் |
| 7 | பேரூர் மு முக ஸ்வாமிகள் | 4999 | விளம்பி |
| 8 | விருத்தா தேவ ஸ்வாமிகள் | 4999 | விளம்பி |
| 9 | திருப் தைய ஸ்வாமிகள் | 4999 | விளம்பி |
| 10 | சிக்கல் லாநந்த ஸ்வாமிகள் | 5004 | சோபகிரு |
| 11 | திருவண் சிவாய ஸ்வாமிகள் | 5004 | சோபகிரு |
| 12 | திரு வா ன் னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் | 5005 | குரோதி |
| 13 | காசி, ப்ப ஸ்வாமிகள் | 5005 | குரோதி |
| 14 | கோவி ாணப்ப ஸ்வாமிகள் | 5007 | பராபவ |
| 15 | கோவி ாநந்த சுவாமிகள் | 5008 | பிலவங்க |
| 16 | கோவி த பிரஹ்மாநந்த ஸ்வாமிகள் | 5010 | சௌமிய |
| 17 | சிக்கல் ஞாநந்த ஸ்வாமிகள் | 5011 | சாதாரண |
| 18 | கோவி சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் | 5012 | விரோதிகி |
| 19 | சிக்கல் சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி | 5012 | விரோதிகி |
| 20 | மதுரை தாநந்த ஸ்வாமிகள் | 5018 | பிங்கள |
| 21 | மதுரைப் பிரகாச சுவாமிகள் | 5018 | பிங்கள |
| 22 | கோவி துக் கறுப்ப ஸ்வாமிகள் | 5019 | காளயுக்தி |
| 23 | கோவி ண்ணமலை ஞாநதேசிக ஸ்வாமிகள் | 5020 | சித்தார்த்தி |
| 24 | அரிமளா காநந்தேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் | 5020 | சித்தார்த்தி |
| 25 | கோவி ளாந ஸ்வாமிகள் | | |
| 26 | சென்னை தியாநந்த ஸ்வாமிகள் | | |
| 27 | கல்லல் மு முக ஸ்வாமிகள் | | |
| 28 | வளவ லைய ஸ்வாமிகள் | | |
| 29 | மாளு ளாந ஸ்வாமிகள் | | |

# மஹாத்மாக்கள் சித்தியான கால நிர்ணயம்.

| நெ. | ஊர். | பெயர். | கலி வருஷம் | தமிழ் வருஷம் | மாதம் | தேதி | கிழமை | திதி | நக்ஷத்திரம். | ஜாதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | வியாச பகவான் | | | ஆடி | | | பௌர்ணமை | | |
| 2 | சிருங்க கிரி | சங்கராசாரிய ஸ்வாமிகள் ஜநநம் | 3058 | ஈசுவர | வைகாசி | | | சுக்ல பஞ்சமி | | பிராமணர் |
| 3 | திரு வொற்றி யூர் | பட்டினத்து ஸ்வாமிகள் | | | ஆடி | | | | உத்திராடம் | தனவைசியர் |
| 4 | இறம் பூதூர் | தத்துவ ராய சுவாமிகள் | | | ஆடி | | | | சதயம் | பிராமணர் |
| 5 | நேரூர் | சதாசிவ பிரஹ்மேந்திர சரஸ்வதி | | | ஆனி | | | சுத்த தசமி | | பிராமணர் |
| 6 | பட்டீச்சுரம் | சிவப் பிரகாச ஸ்வாமிகள் | | | ஆனி | | | | பரணி | வேளாளர் |
| 7 | பேரூர் | சாந்த லிங்க ஸ்வாமிகள் | | | மாசி | | | | மகம் | வேளாளர் |
| 8 | விருத்தாசலம் | குமார தேவ ஸ்வாமிகள் | | | புரட்டாதி | | | சு சதுர்த்தசி | | வேளாளர் |
| 9 | திருப் போரூர் | சிதம்பர ஸ்வாமிகள் | | | வைகாசி | | | பௌர்ணமை | விசாகம் | வேளாளர் |
| 10 | சிக்கல் பொருள் வைத்த சேரி | உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் | 4919 | வெகுதாந்ய | பங்குனி | 26 | செவ்வாய் | ஏகாதசி | மகம் | நவ வீரர் |
| 11 | திருவண்ணாமலை ஈசாந்ய மடம் | கந்தப்ப ஞான தேசிக ஸ்வாமிகள் | 4930 | விரோதி | மார்கழி | 26 | வியாழன் | திரயோதசி | மிருகசீர்ஷம் | வேளாளர் |
| 12 | திரு வாரூர் மடப் புரம் | தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகள் | 4936 | மந்மத | ஆவணி | 12 | புதன் | சு திரிதியை | உத்திரம் | வேளாளர் |
| 13 | காசி, கோவி லூர் | சின்னத் துறவு அருணாசல ஸ்வாமிகள் | 4945 | குரோதி | ஆனி | 31 | வெள்ளி | கி துவாதசி | ரோஹிணி | வைசியர் |
| 14 | கோவி லூர் | முக்தி ராமலிங்க ஞானதேசிக ஸ்வாமிகள் | 4948 | பிலவங்க | பங்குனி | 8 | ஞாயிறு | பௌர்ணமை | உத்திரம் | வைசியர் |
| 15 | கோவி லூர் | துறவு அருணாசல ஞானதேசிக ஸ்வாமிகள் | 4950 | சௌமிய | ஆடி | 9 | ஞாயிறு | சு சதுர்த்தி | பூரம் | வைசியர் |
| 16 | கோவி லூர் கோட்டை யூர் | அண்ணாமலை சுவாமிகள் | 4960 | சித்தார்த்தி | பங்குனி | 26 | வெள்ளி | கி பிரதமை | சித்திரை | வைசியர் |
| 17 | சிக்கல் பொருள் வைத்த சேரி | வீர பத்திர ஸ்வாமிகள் | 4961 | ரௌத்திரி | வைகாசி | 7 | வெள்ளி | கி சதுர்த்தசி | பரணி | நவ வீரர் |
| 18 | கோவிலூர் நேமத்தான் பட்டி | பழநி யப்ப ஸ்வாமிகள் | 4961 | ரௌத்திரி | ஆடி | 8 | சனி | சு திரிதியை | மகம் | வைசியர் |
| 19 | சிக்கல் பொருள் வைத்த சேரி | சிங்கார வேலு ஸ்வாமிகள் | 4962 | துர்மதி | ஆவணி | 26 | திங்கள் | சு பஞ்சமி | விசாகம் | நவ வீரர் |
| 20 | மதுரை | குட் டைய ஸ்வாமிகள் | 4973 | ஆங்கிரச | ஆவணி | 5 | திங்கள் | கி பிரதமை | சதயம் | வைசியர் |
| 21 | மதுரை | அர சப்ப ஸ்வாமிகள் | 4975 | பவ | மார்கழி | 15 | திங்கள் | கி ஷஷ்டி | பூரம் | வைசியர் |
| 22 | கோவி லூர், பள்ளத்தூர் | முத்து வீரப்ப ஸ்வாமிகள் | 4976 | யுவ | தை | 26 | திங்கள் | சு திரயோதசி | புனர் பூசம் | வைசியர் |
| 23 | கோவி லூர் | சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகள் | 4977 | தாது | ஆடி | 4 | திங்கள் | கி ஏகாதசி | ரோஹிணி | வைசியர் |
| 24 | அரிமளம் | சுந்தர ஸ்வாமிகள் | 4979 | வெகுதாந்ய | ஐப்பசி | 6 | திங்கள் | கி தசமி | பூரம் | பிராமணர் |
| 25 | கோவி லூர் | ராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகள் | 4984 | சுபாநு | மார்கழி | 6 | புதன் | கி ஷஷ்டி | மகம் | வைசியர் |
| 26 | சென்னை, குயப்பேட்டை | சச்சிதாநந்த ஸ்வாமிகள் | 4986 | பார்த்திப | தை | 10 | வியாழன் | கி பிரதமை | ஆயில்யம் | |
| 27 | கல்லல் | வெள்ளை யப்ப ஸ்வாமிகள் | 4988 | சர்வஜித் | தை | 28 | வியாழன் | கி திரயோதசி | பூராடம் | வைசியர் |
| 28 | வளவ னூர் | ஷண்முக ஸ்வாமிகள் | 4990 | விரோதி | ஆனி | | வியாழன் | கி ஷஷ்டி | பூர(ாட)ம் | |
| 29 | மானா மதுரை | நாராயண ஸ்வாமிகள் | 4990 | விரோதி | பங்குனி | 18 | | பௌர்ணமை | அஸ்தம் | |

| கிர். | ஊர். | பெயர். | கலி வருஷம் | தமிழ் வருஷம் | மாதம் | தேதி | கிழமை | திதி | நக்ஷத்திரம். | ஜாதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 30 | ஆளுடையார் கோவில் | மஹா தேவ ஸ்வாமிகள் | 4991 | விகிருதி | ஆவணி | 18 | செவ்வாய் | கி சதுர்த்தசி | ரேவதி | வேளாளர் |
| 31 | மதுரை | சிந்நய ஸ்வாமிகள் | 4992 | கர | ஆனி | 21 | வெள்ளி | கி திரயோதசி | ரோஹிணி | வைசியர் |
| 32 | கண்ட னூர் | நாக லிங்க ஸ்வாமிகள் | 4994 | விஜய | சித்திரை | | | | | வைசியர் |
| 33 | மதுரை | பிரஹ்மாநந்த ஸ்வாமிகள் | 4997 | துர்முகி | சித்திரை | 14 | வெள்ளி | சு துவாதசி | உத்திரம் | பிராமணர் |
| 34 | மழு வாடி | ஸ்வயம்பிரகாச ஸ்வாமிகள் | 4997 | துர்முகி | தை | 12 | சனி | கி ஷஷ்டி | அஸ்தம் | வேளாளர் |
| 35 | சிக்கல் பொருள் வைத்த சேரி | சட்டை யப்ப ஸ்வாமிகள் | 4998 | ஹேவிளம்பி | கார்த்தி | 29 | திங்கள் | சு சதுர்த்தசி | பூசம் | நவ வீரர் |
| 36 | சிதம்பரம் மௌந சாமி மடம் | ஆறு முக ஸ்வாமிகள் | 4999 | விளம்பி | சித்திரை | 8 | செவ்வாய் | கி திரயோதசி | உத்திரட்டா | நவ வீரர் |
| 37 | திருவண்ணுமலை ஈசாந்ய மடம் | மஹா தேவ ஸ்வாமிகள் | 4999 | விளம்பி | சித்திரை | 15 | செவ்வாய் | சு பஞ்சமி | திரு வாதிரை | வேளாளர் |
| 38 | சிக்கல் பொருள் வைத்த சேரி | முத் தைய ஸ்வாமிகள் | 4999 | விளம்பி | வைகாசி | 25 | செவ்வாய் | கி துதியை | கிருத்திகை | நவ வீரர் |
| 39 | மதுரை | பாலாநந்த ஸ்வாமிகள் | 5004 | சோபகிருது | ஆனி | 3 | புதன் | கி சப்தமி | பூரட்டாதி | பிராமணர் |
| 40 | வளவ னூர் | நம சிவாய ஸ்வாமிகள் | 5004 | சோபகிருது | ஐப்பசி | 2 | ஞாயிறு | கி திரயோதசி | உத்திரம் | |
| 41 | சிதம்பரம் | பொன் னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் | 5005 | குரோதி | ஐப்பசி | 22 | ஞாயிறு | அமாவாசை | சித்திரை | அகமுடை |
| 42 | சாக் கோட்டை | வீரப்ப ஸ்வாமிகள் | 5005 | குரோதி | தை | 13 | புதன் | சு பஞ்சமி | உத்திரம் | வைசியர் |
| 43 | மதுரை | கண்ணப்ப ஸ்வாமிகள் | 5007 | பராபவ | ஐப்பசி | 25 | சனி | சு நவமி | மகம் | வைசியர் |
| 44 | திரு வாரூர் மடப் புரம் | சிவாநந்த சுவாமிகள் | 5008 | பிலவங்க | ஆடி | 27 | ஞாயிறு | சு துவிதியை | பூரம் | |
| 45 | மதுரை | சுத்த பிரஹ்மாநந்த ஸ்வாமிகள் | 5010 | சௌமிய | பங்குனி | 3 | புதன் | சு ஷஷ்டி | கிருத்திகை | பிராமணர் |
| 46 | மதுரை | சங்கராநந்த ஸ்வாமிகள் | 5011 | சாதாரண | வைகாசி | 7 | வெள்ளி | சு துவாதசி | சித்திரை | பிராமணர் |
| 47 | திருக் களர் | வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் | 5012 | விரோதிகிரு | வைகாசி | 27 | வெள்ளி | சு திரயோதசி | விசாகம் | வைசியர் |
| 48 | சிருங்க கிரி | சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி | 5012 | விரோதிகிரு | பங்குனி | 8 | புதன் | சு துவிதியை | ரேவதி | பிராமணர் |
| 49 | கோவிற் பட்டி | முத்தாநந்த ஸ்வாமிகள் | 5018 | பிங்கள | மார்கழி | 15 | சனி | கி பிரதமை | புனர் பூசம் | நாயகர் |
| 50 | சென்னை, வியாசர்பாடி | சிவப் பிரகாச சுவாமிகள் | 5018 | பிங்கள | பங்குனி | 22 | வியாழன் | கி அஷ்டமி | உத்திராடம் | வீர சைவர் |
| 51 | சாக் கோட்டை | முத்துக் கறுப்ப ஸ்வாமிகள் | 5019 | காளயுக்தி | ஆவணி | 19 | புதன் | கி சதுர்த்தசி | மகம் | வைசியர் |
| 52 | கோவி லூர் | அண்ணுமலை ஞாநதேசிக ஸ்வாமிகள் | 5020 | சித்தார்த்தி | வைகாசி | 8 | புதன் | கி ஷஷ்டி | திரு வோணம் | வைசியர் |
| 53 | கோட்டை யூர் | யோகாநந்தேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் | 5020 | சித்தார்த்தி | ஆடி | 21 | செவ்வாய் | சு நவமி | அநுஷம் | பிராமணர் |
| 54 | சிதம்பரம் | மௌந ஸ்வாமிகள் | | | வைகாசி | 10 | | | | |
| 55 | சிதம்பரம் | நித்தியாநந்த ஸ்வாமிகள் | | | புரட்டாதி | | | | ஆயில்யம் | |
| 56 | பசுபதி கோவில் | ஆறு முக ஸ்வாமிகள் | | | ஆவணி | | | | திரு வாதிரை | |
| 57 | தஞ்சாவூர் | பாலைய ஸ்வாமிகள் | | | மார்கழி | | | | திரு வோணம் | |
| 58 | கும்ப கோணம் | மௌந ஸ்வாமிகள் | | | சித்திரை | | | | உத்திரம் | |




श्री वीरशेखर ज्ञानदेशिक स्वामिनः कोविलूर, मठः

## வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

# ஜாதகக் குறிப்பு.

கலி யுக ஆதி 4949-க்குச் சரியான சாலி வாகந சகாப்தம் 1770 கீலக வருடம் தக்ஷிண அயநம் வருஷ ரிது ஆவணி மாதம் 12௳ வெள்ளிக் கிழமை, அமர பக்ஷம், துவாதசி திதி ௫௰௧இ நாளிகை, புநர் பூச நக்ஷத்திரம் ௪௰௪இ நாளிகை, சித்தி யோகம் முக்காலுக்கு மேல் வியதீபாத யோகம் ௫௰௪இ-க்கு அமிர்த கடிகை, இந்தச் சுப யோக சுப திநத்தில் உதித்தது நாளிகை ௭-க்குக் கந்நியா லக்நத்தில் தாமச வேளையில் சந்திரன் கால ஓரையில் அருணாசலம் செட்டியாருக்கு இஷ்ட தேவதாநுக்கிரகத்தினால் புண்ணிய குமாரர் ஜநநம்.

தற் கால கிரக நிலை அறியும்படி:—ஜந்ம லக்நம் கந்நி. அதிற் செல் நாளிகை மூன் றரையே வீசம். சந்திர லக்நம் மிதுநம். அம்ச லக்நம் கடகம். திரேக் காண லக்நம் கந்நி.

குரு தசை வருஷம் ௰௬-க்குக் கெர்ப்பத்தில் செல் நீக்கி வருஷம் ௰. மாதம் ௪. நாள் ௪. நாளிகை அவ.

| | | | |
|---|---|---|---|
| கே | | | ச |
| சநி | ராசிச் சக்கரம். | | வி |
| | | | சு. செ பு, சு |
| | | | ல, ரா |

| | | | |
|---|---|---|---|
| | பு, சநி | சு | சூ |
| | நவாம்சம். | | ல, கே |
| ரா | | | |
| செ வி | | | சு |

# அத்தியாய அட்டவணை.

## 1. பால காண்டம்.





## 2. சந் நியாச காண்டம்.

## 3. முக்தி காண்டம்.



## வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

# புராண சாரம்.

## சிக்கல்-பொருள் வைத்த சேரி, கோவிலூர்ப் பரம்பரை விளக்கம்.

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார், குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கி யிருப்பதுவு நன்று" என்று கூறி யிருக்கின்றமையின், 'பெரியாரைக் காண்டல், அவர் சொற் கேட்டல், அவர் குணங் கூறல், அவருடன் சேர்ந்திருத்தல்' என்னும் நான்கும் 'மோக்ஷ சாதநம்' எனக் கருதப்படுகின்றது. "ஞாநியின் புகழைக் கூறுவோர் புண்ணியத்தினை அடைகின்றனர்" எனக் கூறப்படுதலினானும், "தெரிந்திடின் சற் சீடன் அவன் அருளைத் தேசங் குலவ வளர்ப்போன்" எனக் கூறப்படுதலினானும், குருவின் பெருமையினை மாணாக்கன் கூற வேண்டுவது அவசியம் ஆகின்றது. ஆகலின் யாம் இப் புராணத்தின் முன் சாரமாகச் சிற் சில கூறுவாம்.

கலி யுக ஆதி இரண்டாயிரம் வருஷத்திற்குப் பின் சிவ பெருமான் அத்வைத மதத்தினைச் சீர் திருத்தம் செய்வதற்காக, மலையாள தேசத்தில் 'காலடி' என்னும் கிராமத்தில் 'சங்கரர்' என்னும் பெயருடன் கலி யுக ஆதி 3058-க்குச் சரியான ஈசுவர வருஷம் வைகாசி மாதம் சுக்கில பக்ஷ பஞ்சமியில் அவதரித்து முப்பத் திரண்டு வருடம் இவ் வுலகில் சஞ்சரித்துத் தாம் செய்யத்தக்க யாவற்றையும் செய்து, தமக்குப் பின் பரம்பரையாக இருந்து நடாத்தி வருவதற்கு 'பத்மபாதாசார்யர், சுரேசுவராசார்யர், தோடகாசார்யர், அஸ்தாமலகாசார்யர்' என்னும் சிஷ்யர்களையும், நான்கு திசைக்கும் இருக்குமாறு ஆஞ்ஞாபித்து அநேக கிரந்தங்களை யியற்றி வைத்துக் கைலாயத்திற் கெழுந்தருளினர்.

அவர்கள் பரம்பரையில், கலி யுக ஆதி 4860-க்குச் சரியான வெகுதாந்ய வருஷத்தில், சிக்கல் பொருள் வைத்த சேரியில், நவ வீரர் வம்சத்தில், அவதரித்த உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள், நீணாள் வேதாந்த போதகரா யிருந்து தமக்குப்பின் பிரஹ்ம வித்தியா பரம்பரையை அநுஷ்டிக்க, வடக்கே திரு வண்ணுமலையில், ஈசாந்ய மடத்தில், கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகளையும், தெற்கே கோவிலூரில் முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளையும் இருக்கு மாறு ஆஞ்ஞாபித்து, கலி யாதி 4919-க்குச் சரியான வெகு தாந்ய வருஷம் பங்குனி மாதம் 26-ஆம் தேதி செவ்வாய்க் கிழமை ஏகாதசி திதி மக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின்னர், குரவன் ஆணை பெற்று வடக்கே திரு வண்ணுமலையில் தியாநபரரா யிருந்து கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள், கலி ஆதி 4930-க்குச் சரியான விரோதி கிருது வருஷம் மார்கழி மாதம் 26-ஆம் தேதி வியாழக் கிழமை திரயோதசி திதி மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

தெற்கே கோவிலூரில் இருந்த, முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள், காரைக் குடியில் கலி ஆதி 4892-க்குச் சரியான விரோதிகிருது வருஷத்தில் ஜநித்துத் தமது பதின் மூன்ருவது வயதில் சிக்கல்-பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குரு வாக அடைந்து, தமது பதினைந்தே முக்கால் (அதாவது இரண்டே முக்கால்) வருஷத்தில் வாசிட்டம் வரைப் பாட சமாப்தி செய்து, தமது ௰௬இ வருஷத்தில் குரு பத்திநிக்குக் கோவிலூரி லிருந்து மயிற் குஞ்சுகள் அநுப்பி, தமது ௰௭ வயதில் கோவிலூர்த் திரு நெல்லை யம்பாள், தம் திருப் பணியை முடித்துக் கொள்ளக் காரைக் குடியில் ஆண்டவர் வீட்டுக்கு எழுந் தருளி வந்து ஆண்டவர் தாயார் வள்ளி யம்மையாருக்குத் தரிசநங் கொடுத்துத் திருப் பணியை முடிக்கச் சொல்லல், தமது ௰௭இ வயதில் கோவிலூர் அம்பாள் திருப் பணிக்குத் திரவியார்ச்சநம் செய்யத் தேவி கோட்டைக்குச் செல்லல், ௰௯வயது (அதாவது ௧இ வருஷம்)



வரைக் காரைக் குடியில் தம் கிரகத்திலும், திரு வாசல் மடத்திலும், அதளத் தோப்பிலும், வேதாந்த நூற் போதித்தல், பின் தமது 27 வயதில் தமது குருமூர்த்திகள் பரிபூர்ணம் அடைதலுக்குச் சென்றிருந்து குருவின் திருமேனியைச் சமாதிவைத்தல், தமது 28-வது வயது முதல் 30-வது வயது (அதாவது 2 வருஷம்) வரைக் கோவிலூரில் கோவிலுக்கு மேல் புரம் இருந்து சில காலம் வேதாந்த பாடம் போதித்தல், சிங்காரத் தோப்புப் போட்டிருக்கிற இடத்தில் இருந்து சில காலம் வேதாந்த பாடம் போதித்தல், தமது 31-வது வயதில் இப்போதிருக்கிற கல் மண்டப மடம் ஆரம்பிக்க, அதே சமயத்தில் திரு நெல்லை யம்பாள் பிராமணக் கந்நிகை ரூபமாய்த் தேங்காய் வாழைப் பழம் புஷ்பம் வெற்றிலை பாக்கு மஞ்சள் முதலியவற்றை ஒரு தாம்பாளத்தில் வைத்துக் கொண்டு வந்து ஆண்டவர் கரத்தில் கொடுக்க, அதனை வாங்கி அம்பாள் அநுக்கிரக மானதால் "இவ்விடத்தில் எப்பொழுதும் மாருத அந்நதாநம் நடக்க வேண்டும்" என்று சொல்லி, தேங்காயினை உடைத்துத் தச்சுச் செய்தல், தமது 31-வது வயது முதல் 56-வது வயது (அதாவது 26 வருஷம்) வரைக் கல் மண்டப மடத்தில் இருந்து வேதாந்த நூல்களையும், ஞாந வாசிட்டத்தினை ஏழு முறையும் பாடம் சொல்லல் முதலிய அநேக அற்புதத் திரு விளையாடல்களை 43 வருஷம் செய்து கொண்டு 'சத்ய சங்கற்பம்', 'ஜகத் துச்சம்' என்பவற்றை உலகத்தவர்கட்கு பிரத்தியக்ஷமாக அறிவித்து, கலி ஆதி 4948-க்குச் சரியான பிலவங்க வருஷம் பங்குநி மாதம் 8 தேதி ஞாயிற்றுக் கிழமை பௌர்ணமை திதி உத்திர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், 'துற வாண்டவர்' என்னும் அருணுசல ஞாந தேசிக ஸ்வாமிகள், தேவி கோட்டையில் கலியாதி 4916-க்குச் சரியான யுவ வருஷம் ஜநித்துத் தமது ௰௯-வது வயதாகிய விஜய வருஷத்தில் கோவிலூர் வந்து, முத்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து, பிரஹ்மவித்தாய்க் கௌபீந

தாரியாய்த் தமது நஉஇ வயது (அதாவது ௧நஉஇ வருஷம்) வரைப் பல விடங்களிலும் சஞ்சரித்துக் கொண்டு, திருப் பாதிரிப் புலியூரில் இருந்த வீர சைவ, முத்துச் சரவண சுவாமிகளிடம் 32000 வாசிட்டம் சிரவணித்துக் குரு ஆஞ்ஞையின்படி கலி சதுகாசமஅ-க்குச் சரியான பிலவங்க வருஷம் பங்குனி மாதம் அஉ ஞாயிற்றுக் கிழமை கோவிலூர் மடாதிபதியாகி தமது 34 வயது வரை ஒரு வருஷம் நான்கு மாதம் இருந்து, ‘சீடாசாரம்’ என 50 செய்யுளில் ஒரு நூல் திரட்டியும், ‘கைவல்ய நவநீதம்’ என்னு நூற்குப் ‘பத சாரம்’ என ஒரு உரை யியற்றியும், கலி 4950-க்குச் சரியான சௌமிய வருஷம் ஆடி மாதம் கூஉ ஞாயிற்றுக் கிழமை இரவு சுக்கில பக்ஷ சதுர்த்தி திதி பூர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், ‘நேமத்தான் பட்டி அய்யா’ என்றும், ‘பெரிய அய்யா’ என்றும் வழங்கும் பழநியப்ப சாமிகளும், (‘கோட்டை யூர் அய்யா’ என வழங்கும் அண்ணமலைச் சுவாமிகளும் சேர்ந்து) பதி ெனாரு வருஷம் வரை கோவிலூர் மடத்தில் வேதாந்த பாடம் இரவில் போதித்துக் கொண் டிருந்து, கலி 4961-க்குச் சரியான ரௌத்திரி வருஷம் தக்ஷிணயநம் ஆடி மாதம் 8உ சநிக் கிழமை சுக்கில பக்ஷ திரிதியை திதி மக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள் ‘தேவி கோட்டை’ என்னும் ஊரில் கலி சதுகா௨௧ச-க்குச் சரியான சுபாநு வருஷத்தில் ஜநித்து, தமது ௧ச-வது வயதாகிய ஹேவிளம்பி வருஷத்தில் கோவிலூரில் தமது தமையனாராகிய ‘துற வாண்டவர்’ என்னும் அருணசல ஞாந தேசிக ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்த சமயம், முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து, தமது உ௧சு-வது வயதாகிய சௌமிய (12) வருஷம் வரைக் குருவினிடம் சாத்திரங்களைக் கேட்டுப் போதித்துக் கொண்டு, நிஷ்டாபரரா யிருந்து, துற வாண்டவர் விதேஹ கைவல்



யத்தின் பின், தமது குருவின் ஆஞ்ஞைப்படியும், துற வாண்டவர் ஆஞ்ஞைப்படியும், நேமத்கான் பட்டி ‘அய்யா’ என்னும் பழநியப்ப ஸ்வாமிகள் விதேஹ கைவல்யம் வரை உடன் இருந்து மடத்துக் காரியங்கள் யாவையும் பார்த்துக் கொண்டு, பகலில் வேதாந்த சாஸ்திரங்களை உபதேசஞ் செய்து கொண்டு, தமது ந௧எ-வது வயதாகிய ரௌத்திரி வருஷம் முதல் தமது 53-வது வயதாகிய தாது (16) வருஷம் வரைத் தாமாகவே வேதாந்த சாஸ்திரங்களையும் வாசிஷ்டத்தினை எழு முறையும் உபதேசஞ் செய்து கொண்டு, சிதம்பரம் மூல ஸ்தாந ஈசுவரர் கோவிற் கும்பாபிஷேகம், கோவிலூர் ஆண்டவர் கோவிற் கற்றிருப்பணி செய்து கும்பாபிஷேகம், களத்தூர் சிவன் கோவில் கற்றிருப்பணி யாக்கிக் கும்பாபிஷேகம், மதுரை சொக்க லிங்கம் மீநாக்ஷி யம்மன் கோவிற் கும்பாபிஷேகம், சோமாஸ்கந்தருக்கு நீலநிறக் கல்லால் கோவிற் கட்டல், யாளி மண்டபம், திருக் குளம், மைய மண்டபம் செய்தல், காரைக் குடிக்கும், கோவிலூருக்கும் ரோட்டுப் போட்டு, இருமருங்கும் தென்னை விருக்ஷம் வைத்தல், முதலிய நற் கிருத்தியங்கள் பல வற்றை அநாயாசமாகச் செய்து, கண்டார் கா முறும் வண்ணம் கவி னுறு வாக் குடைமையாற் ‘கருணா நிதி’ எனக் காரணப் பெயர் வழங்கப் பெற்று, புருஷ லக்ஷண சிரேஷ்டராய்ப் பிரஹ்மாநந்தாநுபவியாய் யாவரும் வணங்கும்படியா யிருந்து, பிரஹ்ம நாமாவலி (லக்ஷணவிருத்தி) எனச் செய்யுள் ரூபமான ஒரு நூலும், ‘குரு ஸ்துதி குசுமாஞ்சலி’ என ஒரு நூலும் இயற்றி, கலி யாதி 4977-க்குச் சரியான தாது வருஷம் ஆடி மாதம் சஉ திங்கட் கிழமை கிருஷ்ண பக்ஷம் ஏகாதசி திதி ரோஹிணி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகள், ‘காரைக் குடி’ என்னும் ஊரில் விளம்பி வருஷத்தில் ஜநித்துத் தமது 16-வது வயதாகிய ஆநந்த வருஷத்தில் சிக்கல் பொருள் வைத்த சேரி வீரபத்திர சுவாமிகளைக் குருவாக அடைந்து, புலமை நூல் கற்றுத்

தமது 23-வது வயதாகிய துர்மதி (7) வருஷத்தில் கோவிலூர் சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து, வேதாந்த சாஸ்திர வேத்தாவாய், திரு நெல்லை யம்மையை உபாசநா மூர்த்த மாகக் கொண்டவராய், திட ஞாநியாய், அஞ்சா நெஞ்சராய் இருந்து தமது குருவின் விதேக கைவல்யத்தின் பின், தமது 33-வது வயதாகிய தாது வருஷம் ஆடி மாதத்தில் கோவிலூர் குரு ஸ்தாநத் தினை வஹித்து எ வருஷம் ரு மாதம் வரை வேதாந்த சாஸ்திரோப தேசஞ் செய்து கொண்டு, சாக்கோட்டை, வீரப்ப ஸ்வாமிகள், காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் முதலிய சிஷ்ய குளாங் களை உடையவராய் இருந்து, ஆண்டவர் கோவில் பிராகாரப் பத்தி மண்டபம், அரும் போசநச் சாலை மண்டபம், கோவிலில் அஷ்ட லக்ஷ்மி மண்டபம் முதலியன இயற்றித் தமது 45-வது வயதாகிய கலி யாதி 4984 சாலிவாகந சகாப்தம் 1805-க்குச் சரியான சுபாநு வருஷம் தக்ஷிணாயநம் ஏமந்த ரிது மார்கழி மாதம் ௬உ கிருஷ்ண பக்ஷம் ஷஷ்டி திதி புத வாரம் மகர லக்நம் மக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், புது வயலில் கலி 4949-க்குச் சரியான கீலக வருஷம் ஆவணி மாதம் 12உ வெள்ளிக் கிழமை வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகள், அவதரித்துத் தமது 16-வது வயதாகிய ரத்தாக்ஷி வருடம் கோவிலூரில் சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகளைக் குருவாக வடைந்து சாஸ்திராப்யாசம் செய்து, தமது 35-வது வயதாகிய சுபாநு (19) வருஷம் மார்கழி மாதம் வரை பல ஸ்தல யாத்திரை செய்து, தியாகபரராய்ச் சுகரைப் போன்ற வைராக முடையரா யிருந்து, கோவிலூர் முக்தி ராம லிங்க ஞான தேசிக ஸ்வாமிகளின் சத்ய வாக்கின் படியும், சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகளின் சங்கற்பப் படியும், இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகளின் அந்திய கால சங்கற்பப் படியும், சிதம்பரம், பொன்னம்பல ஞான தேசிக ஸ்வாமிகளின் விடா முயற்சிப் படியும், சாதுக்களுடைய நீண்ட சங்கற்பப் படியும், சுபாநு வருஷம் மார்கழி மாதம் ௬உ புதன்



கிழமை கோவிலூர் மடாலயத் தலைமை பூண்டு, தமது அறுபத்து இரண்டே முக்கால் வயதாகிய விரோதி கிருது (உ௰எ) வருஷம் (ரு மாதம்) வைகாசி மாதம் உ௰எஉ வெள்ளிக் கிழமை வரை இருந்து, கோவிலூரில் பல ஆலயங்களையும், திருக் களரில் பல ஆலயங்களையும் பணி செய்து, கோவிலூரில் சிவாலய கும்பாபி ஷேகம், ஆண்டவர் கருணாநிதி ஆலய கும்பாபிஷேகம், திருக் களர்க் கும்பாபிஷேகம், சிக்கல் பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞான தேசிகர் ஆலய கும்பாபிஷேகம், களத்தூர் ஆலய கும்பா பிஷேகம், 'ஓலைக்குடி' என்னும் கிராமத்தில் மடம், நெற்களஞ்சியம் முதலிய பலவற்றைச் செய்தும், பூலோகத்தில் உள்ள ஆலயங்கள் எல்லாவற்றிலும் நடக்கும் கும்பாபிஷேகங்களைத் தரிசித்தும், பல க்ஷேத்திரம் சென்று, நான்குவேத பாடசாலை, அறுபான் மூவர் மடம், பசுச்சாலை, அந்ந சத்திரம், நந்தந வநம், ஆலயப் பணி முதலியவற் றைப் பிற தநவந்தரைக் கொண்டு, எல்லையின்றி எண்ணிலாது செய் வித்தும், மாணாக்கர் பல்லாயிரவர்க்கும் வேதாந்த சாஸ்திர உப தேசம் பிரதி திநமும் செய்து, ஆறு முறை வாசிட்ட பாடம் உபதே சித்தும், கோவிலூர்த் திரு நெல்லை யம்பாள் ஆலயம் கருங் கல்லால் இயற்றுவதற்குப் பிரித் திருந்து வேலை நடவாது தயங்கும் சமயம் திரு நெல்லை யம்பாள் தியாநத்தில் வந்து, "எடுத்த காரியங்கள் யாவும் நினைப்பின் வண்ணம் தடை யின்றி முடிவு பெறும்; இனி எந்தக் காரியத்தினையும் ஆரம்பிக்கலாம்" என்று ஆசீர்வதித் தநுக் கிரகித்ததனைப் பெற்றும், நினைத்த வண்ணம் சத் காரியங்கள் யாவும் முட் டின்றி முடித்தும், இன்னும், அற்புதத் திரு விளையாடல் பல வற்றைச் செய்து, யாவரும் பின்னரும் உணரும்படி காட்டியும், கலி 5012-க்குச் சரியான விரோதிகிருது வருஷம் வைகாசி மாதம் உ௰எஉ வெள்ளிக் கிழமை சுக்ல பக்ஷம் திரயோதசி திதி விசாக நக்ஷத்திரத்தில் பகல் 11-மணிக்குத் தெற்கு வீதியில் தேரின் முன் பாகக் கடவுள் எழுந் தருளி யிருக்க, நட ராஜாவின் சந்நதியில் பிரா மணர்களால் தேஹத்தினைத் தாங்கப் பெற்று, 'மஹா தேவ' என் னும் மந்திர உச்சாரணத்தினோடு விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், 'ராயவரம்' என்னும் ஊரில் அண்ணாமலை ஞான தேசிக ஸ்வாமிகள் பிரமோதூத வருஷம் ஆடி மாதம் ஜநித்து, 'தேனி பட்டி' என்னும் 'கழநி வாசல்' என்னும் ஊருக்குச் சுவீகார புத்திரனாக வந்து இருந்து, தமது 16-வது வயதாகிய விய வருஷம் கோவிலூரில் வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளைச் சரணாகதியாக அடைந்து, வேதாந்த சாஸ்திர முணர்ந்து, காசி முதலிய பல ஸ்தல யாத்திரை சென்று, குரு குல வாசமாகத் தமது 41-வது வயதாகிய விரோதி கிருது (25) வருஷம் வரை இருந்து, தமது குருவின் விதேஹ கைவல்யத்தின் பின் குருவின் ஆஞ்ஞைப் படி விரோதி கிருது ௵ வைகாசி மீ ௨௰௭௳ முதல் கோவிலூர் மடாலயத் தலைமை பூண்டு, வேதாந்த சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டு, திருக் களரில், தமது குரு மூர்த்தியின் அதிஷ்டானத்திற்கு கருங் கல்லால் அழகுற 60,000ம் ரூபா வரைச் செலவு செய்து ஆலயம் ஆற்றியும், 25,000ம் ரூபா வரைச் செலவு செய்து திருக் களரில் மடம் ஒன்று இபற்றியும், பூஜைக்கும், சாதுக்கள் போஜநத்திற்கும் 50,000 ரூபா வரைச் செலவுசெய்து விளைநில முதலியன வாங்கியும், அதிஷ்டானத்திற்குக் கும்பாபிஷேகம் இயற்றியும், திட சித்தராய், பிரஹ்ம வித்யா பிரசாரண சபை ஏற்படுத்தி, வேதாந்த விஜயக் கொடியினை நாட்டும்படி செய்து, தமது 49-வது வயதாகிய சித்தார்த்தி (8) வருஷம் வரை இருந்து, கலி 5020-க்குச் சரியான சித்தார்த்தி வருஷம் வைகாசி மாதம் 8௳ புதன் கிழமை கிருஷ்ண பக்ஷம் ஷஷ்டி திதி சிம்ம லக்நம் திரு வோண நக்ஷத்திரத்தில் பகல் ஒரு மணிக்கு விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், தேவி கோட்டையில் ஜநித்த 'அண்ணாமலைச் சுவாமிகள்' என்னும் மஹா தேவ ஞான தேசிக ஸ்வாமிகள், கோவிலூரில் வீர சேகர ஞான தேசிக சுவாமிகளைக் குருவாக அடைந்து, வேதாந்த சாஸ்திரம் உணர்ந்து கொண் டிருந்து, தமது குருவின் விதேஹ கைவல்யத்தின் பின் கோவிலூரில் ஆசிரியரா யிருந்த அண்ணாமலை ஞான தேசிக ஸ்வாமிகளின் ஆஞ்ஞைப் படி திரு



வண்ணாமலை ஈசாந்ய மடத்தில் தலைமை பூண்டு, எழு வருஷம் வரை இருந்து, பின், அண்ணாமலை ஞான தேசிக ஸ்வாமிகள் விதேஹ கைவல்யத்தின் பின், அவரது ஆஞ்ஞைப் படி கோவிலூரில் சித்தார்த்தி ௵ வைகாசி மீ 9௳ வியாழக் கிழமை முதல் மடாலயத் தலைமை பூண்டு இருந்து, வேதாந்த சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டு, திருக் களரில் குருவின் அதிஷ்டானத்திற்கு 50,000 ரூபா வரைச் செலவு செய்து பிராகாரப் பத்தி, ராஜ கோபுரம், முன் வெளி மண்டபம் முதலியன செய்து கும்பாபிஷேக மியற்றியும், பூஜை போசநத்திற்கு விளை நிலங்கள் வாங்கியும், 'சாணான் ஏந்தல்' என்னும் கிராமத்தில் பத்தாயிரம் ரூபா வரைச் செலவு செய்து, மடம், நெற் களஞ்சியம் இயற்றியும், குரு கைங்கர்யங்களையும், குருவாற் செய்யப்பட்ட ஆலயாதிகளையும், செவ்வனே கவனித்து நடாத்தியும் வருகின்றனர்.

இவ்வாறு, சிக்கல் பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் காலம், ஆங்கிரச வருஷம் வைகாசி மாதம் வரை நூற்றுப் பதின் மூன்று வருஷங்கள் 2 மாதம் ஆயின.

முக்தி ராம லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள்

அதிபதியாக 29 வருஷம்

| | | | | |
|---|---|---|---|---|
| அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள் | ... | 1 | ... | 4 மாதம் |
| பழநி யப்ப சுவாமிகள் | ... | 11 | ... | |
| சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகள் | ... | 16 | ... | |
| இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகள் | ... | 7 | ... | 5 மாதம் |
| வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகள் | ... | 27 | ... | 5 மாதம் |
| அண்ணாமலை ஞான தேசிக ஸ்வாமிகள் | ... | 8 | ... | |
| மஹா தேவ ஞான தேசிக ஸ்வாமிகள் ஆங்கிரச வைகாசி வரை | ... | 13 | ... | |

ஆக 113 வருஷம் 2 மாதம்

இதுவரைக் கோவிலூர்ப் பரம்பரை விளக்கமாம்.

## சிக்கல் பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் பரம்பரை.

இது இங்ஙன நிற்க. சிக்கல், பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் விதேஹ கைவல்யம் அடைந்த பின், கலி 4919-க்குச் சரியான வெகுதாந்ய வருஷம் பங்குனிமீ முதல் வீரபத்திர ஸ்வாமிகள் 42 வருஷம் வரை இருந்து, கலி 4961-க்குச் சரியான ரௌத்திரி வருஷம் வைகாசி மாதம் எஉ வெள்ளிக் கிழமை கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி திதி பரணி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், சிங்கார வேலு சுவாமிகள், வீர பத்திர ஸ்வாமிகள் விதேஹ கைவல்யம் அடைந்த பின் மடாலயத் தலைமையினை ரௌத்திரி வருஷம் வைகாசி மாதம் எஉ முதல் துர்மதி வருஷம் ஆவணி மாதம் உ௰௬உ வரை ஒரு வருஷம் மூன்றரை மாதம் வஹித்து, கலி 4962-க்குச் சரியான துர்மதி வருஷம் ஆவணி மாதம் 26உ திங்கட் கிழமை சுக்கில பக்ஷம் பஞ்சமி திதி விசாக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள் மாணாக்கர் முத்தையா சுவாமிகள், துர்மதி வருஷம் மடாதிபதியாகவும், சட்டையப்ப சுவாமிகள் வேதாந்த உபதேசக ஆசாரியராகவும் விளங்கி 37 வருஷம் இருந்து முத்தையா சுவாமிகள், கலி 4999-க்குச் சரியான விளம்பி வருஷம் வைகாசி மாதம் 25உ செவ்வாய்க் கிழமை கிருஷ்ண பக்ஷம் திரிதீயை திதி கிர்த்திகை நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், விளம்பி வருஷம் முதல் பிரமாதீச வருஷம் வரை 16 வருஷம் சுப்பிரமணிய சுவாமிகளாலும், அநேகம் சாதுக்களாலும், மாரி முத்துச் சுவாமிகளாலும், காரைக் குடி லக்ஷ்மண அய்யாவாலும் அந்தக் குரு ஸ்தாநம் பரிபாலிக்கப் பட்டு வந்தன.



அதன் பின், கோவிலூர் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், மெய்யப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள், தமது குருவின் ஆஞ்ஞைப்படியும், அண்ணாமலை ஞாந தேசிக ஸ்வாமிகள் ஆஞ்ஞைப்படியும், ஆநந்த வருஷம் முதல் 19 வருஷமாக அந்த ஸ்தாநத்தில் மடாலயத் தலைமை பெற்று இருந்து, வேதாந்த உபதேசஞ் செய்து கொண்டு, சிங்கார வேலு சுவாமிகளின் உபாசநா மூர்த்தமாகிய சொர்ண புரீசுவரர் சௌந்தரிய நாயகி அம்பாள் ஆலயத்தினை ஒன்றே கால் லக்ஷ ரூபாய் செலவு செய்து புதி தாக்கி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் அதிஷ்டாநத்திற்குச் சுற்றுப் பிராகார மண்டபம் முதலியன பதி ஞாயிரம் ரூபா வரைச் செலவு செய்து கருங் கல்லா லியற்றி, சுக்கில வருஷம் வைகாசி மாதம் 6உ ஞாயிற்றுக் கிழமை ஏகாதசி திதி அஸ்த நக்ஷத்திரம் பத்திரா கரணம் கூடிய நற் றிநத்தில் சிவாலயத்திற்கும், குரு அதிஷ்டாநத்திற்கும், இருபதாயிரம் ரூபா வரைச் செலவு செய்து கும்பாபிஷேகம் இயற்றியும், ஐம்பதாயிரம் ரூபா வரைச் செலவு செய்து மடத்தினைப் புதுக்கியும், விளை நிலங்கள் வாங்கியும், ஆலயத்தில் பூசை முதலிய வற்றினையும், அதிஷ்டாநத்தின் பூஜை மடத்துக் காரியங்கள் யாவற்றையும் செவ்வனே கவனித்தும், இன்னும், செய்யத் தக்கவற்றைச் செய்து கொண்டும் வருகின்றனர்.

---

## 3. திருவண்ணாமலை, ஈசாந்ய மடம்.

திருவண்ணாமலை ஈசாந திசைக்கண் கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம் ஒன்று பத்தாயிரம் ரூபா வரைச் செலவு செய்து இயற்றி யிருந்து, கலி 4930-க்குச் சரியான விரோதி வருஷம் மார்கழி மாதம் 26 தேதி வியாழக் கிழமை திரயோதசி திதி மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், ராம லிங்க சுவாமிகள் அதிபதியாக இருந்து விதேஹ கைவல்யம் அடைந்தனர். அதன் பின், சச்சிதாநந்த

ஸ்வாமிகள் அதிபதியாக இருந்து விதேஹ கைவல்யம் அடைந்தனர். அதன் பின், ஸ்வரூபாநந்த ஸ்வாமிகள் அதிபதியாக இருந்து விதேஹ கைவல்யம் அடைந்தனர். அதன் பின், கோவிலூர் சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், மஹா தேவ சுவாமிகள் அதிபதியாக இருந்து, நீண்ட நாள் அந்நதாநமும், பிரஹ்ம வித்தியாதாநமும் செய்து கொண்டு, கலி 4999-க்குச் சரியான விளம்பி வருஷம் சித்திரை மாதம் 15 தேதி செவ்வாய்க் கிழமை சுக்ல பக்ஷம் பஞ்சமி திதி திருவாதிரை நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர். அதன் பின் சில காலம் சாதுக்கள் பரிபாலித்தனர். அதன் பின், கோவிலூர் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், சதாநந்த ஸ்வாமிகள் 10 வருஷம் வரை அதிபதியாக இருந்து, ஒரு லக்ஷ ரூபா வரைச் செலவு செய்து, கந்தப்ப ஞாந தேசிகர் ஆலயம், மடம், போசந மண்டபம், நடை கிணறு முதலியவற்றைக் கருங் கல்லாற் செய்து, விளை நிலம் முதலியன வாங்கிவைத்து, சாதுக்களிடத்தும், கடவுளிடத்தும் அன்புடையராய் இருந்து, கலி 5012-க்குச் சரியான விரோதி கிருது வருஷம் ஐப்பசி மாதம் உத்திராட நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர். அதன் பின், கோவிலூர் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், மஹா தேவ சுவாமிகள் 7 வருஷம் அதிபதியாக இருந்துவிட்டு, கோவிலூர் அண்ணாமலை ஞாந தேசிக ஸ்வாமிகளின் ஆஞ்ஞைப்படி சித்தார்த்தி வருஷம் வைகாசி மாத முதல் கோவிலூர் மடத்திற்கு அதிபதியா யிருந்து வருகின்றனர்.

அதன் பின் சில காலம் சாதுக்கள் பரிபாலித்தார்கள். அதன் பின், நடேச சுவாமி 10 வருஷமாக அதிபதியாக இருந்து வருகின்றனர்.

---



## 4. மதுரை, குட்டை யையா மடம்.

கோவிலூர், முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், குட்டைய ஞாந தேசிக ஸ்வாமிகள் கால யுக்தி வருஷ முதல் ஆங்கிரச வருஷம் வரை 25 வருஷம் மதுரை மாநகரில் இருந்து, மீநாக்ஷி யம்மன் சொக்க நாதர் ஆலயங்களைச் சீர்திருத்தி, தங்கப் பாளங்கள் கோபுரத்திற்கும், ஸ்துவஜத் தம்பத்திற்கும் சார்த்தி, அருமையும் உயர்வும் உடைய நந்தி மண்டபம் இயற்றி, வெள்ளி ரிஷப வாகநம் செய்து, ஆடி வீதியிற் கற் றள வரிசை செய்து, யாதும் தடை யின்றி வேண்டிய பொருளைச் செலவு செய்து கொண் டிருந்து, பிரஹ்ம வித்தாய் அநேகம் பக்குவிகட் குபதேசஞ் செய்து, கலி 4973-க்குச் சரியான ஆங்கிரச வருஷம் ஆவணி மாதம் 5 தேதி திங்கட் கிழமை கிருஷ்ண பக்ஷம் பிரதமை திதி சதய நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், குட்டைய ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், சிந்நய ஸ்வாமிகள் அதிபதியாக 19 வருஷம் வரை இருந்து, கலி 4992-க்குச் சரியான கர வருஷம் ஆனி மாதம் 21 தேதி வெள்ளிக் கிழமை கிருஷ்ண பக்ஷம் திரயோதசி திதி ரோஹிணி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், கண்ணப்ப ஸ்வாமிகள் அதிபதியாக 16 வருஷம் வரை இருந்து, ஒரு லக்ஷ ரூபா வரைச் செலவு செய்து, மடத்தினையும் அதிஷ்டாநத்தினையும் கற் றிருப் பணி யாக்கி, 'குருந்தனி, சம்பக் குளம்' என்னும் கிராமங்களையும், மடத்திற்குச் சாதுக்கள் போசநத்திற்காக வாங்கி வைத்து, பிரஹ்ம வித்தையினை உபதேசித்துக் கொண் டிருந்து, கலி 5007-க்குச சரியான பராபவ வருஷம் ஐப்பசி மாதம் 25 தேதி சநிக் கிழமை சுக்கில பக்ஷம் நவமி திதி மக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், செல்லப்ப ஸ்வாமிகள் 16 வருஷம் வரை அதிபதியாக இருந்து, பிரஹ்ம வித்தையினை உபதேசித்துக் கொண்டு, கலி 5024-க்குச் சரியான துந்துபி வருஷம் ஆடி மாதம் 29 தேதி ஞாயிற்றுக் கிழமை கிருஷ்ண பக்ஷம் பஞ்சமி திதி ரேவதி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் மஹாதேவ ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், சிவாநந்த ஸ்வாமிகள் 10 வருஷம் வரை அதிபதியாக இருந்து, கலியாதி 5033-க்குச் சரியான பிரசோத்பத்தி வருஷம் சித்திரை மாதம் 28 தேதி திங்கட் கிழமை கிருஷ்ண பக்ஷம் தசமி திதி சதய நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், காளையார் கோவில் செல்லப்ப ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், சிதம்பர சுவாமி அதிபதியாக இருந்து வருகின்றனர்.

———

## 5. மதுரை, அரசப்ப ஸ்வாமிகள் பிரஹ்மாநந்த ஸ்வாமிகள் மடம்.

கோவிலூர், முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் மாணாக்கர், அரசப்ப ஸ்வாமிகள் மதுரையில் தியாந பரராய் கான் மாறியாடிய கடவுளின் தெரிசந நிரதராய்ப் பக்குவிகட்குப் பிரஹ்ம வித்தையினை உபதேசித்துக் கொண்டு 27 வருஷம் வரை இருந்து கலி 4975-க்குச் சரியான பவ வருஷம் மார்கழி மாதம் 15 தேதி திங்கட் கிழமை கிருஷ்ண பக்ஷம் ஷஷ்டி திதி பூர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், அரசப்ப சுவாமிகளின் மாணாக்கர், பிரஹ்மாநந்த சுவாமிகள் 23 வருஷம் வரைப் பிரஹ்ம வித்தையினை அநேக மாணவர்கட்கு உபதேசித்துக் கொண்டிருந்து, பிரஹ்ம நாமாவலி



(லக்ஷணவிருத்தி) சுலோகம், பஞ்சதசி பத உரை, "பிரஹ்மாநந்தாநுசந்தாந யுக்தி ரத்நாகரம்" என்னும் யுக்தி, சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரகம் பதவுரை முதலியன இயற்றி, சாதுக்கள் போசநத்திற்கு விளை நிலங்கள் வாங்கி வைத்து, கலி 4997-க்குச் சரியான துன்முகி வருஷம் சித்திரை மாதம் 14 தேதி வெள்ளிக் கிழமை சுக்கில பக்ஷம் துவாதசி திதி உத்திர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், பிரஹ்மாநந்த சுவாமிகளின் மாணாக்கர், பாலாநந்த சுவாமிகள் அதிபதியாயிருந்து, பிரஹ்மாநந்த சுவாமிகளின் அதிஷ்டாநத்தினை கற்றிருப்பணியாகச் செய்து, வேதாந்த உபதேசஞ் செய்து கொண்டு எழு வருஷம் வரை இருந்து, கலி 5004-க்குச் சரியான சோபகிருது வருஷம் ஆனி மாதம் 3 தேதி புதன் கிழமை கிருஷ்ண பக்ஷம் சப்தமி திதி பூரட்டாதி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், பிரஹ்மாநந்த சுவாமிகளின் மாணாக்கர், சுத்த பிரஹ்மாநந்த சுவாமிகள் 6 வருஷம் வரை அதிபதியாக இருந்து, சாது சங்கப் பிரியராய், குருவின் அதிஷ்டாந பூஜா துரந்தரராய் விளங்கி, கலி 5010-க்குச் சரியான சௌமிய வருஷம் பங்குனி மாதம் 3 தேதி சுக்ல பக்ஷம் ஷஷ்டி திதி கிருத்திகை நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், பிரஹ்மாநந்த சுவாமிகளின் மாணாக்கர், சங்காநந்த ஸ்வாமிகள் அதிபதியாக இருந்து, கலி 5011-க்குச் சரியான சாதாரண வருஷம் வைகாசி மாதம் 7 தேதி வெள்ளிக் கிழமை சுக்கில பக்ஷம் துவாதசி திதி சித்திரை நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், பிரஹ்மாநந்த ஸ்வாமிகளின் மாணாக்கர், அத்வைதாநந்த ஸ்வாமிகள் 22 வருஷமாக அதிபதியாக இருந்து, ஐம்பதாயிரம் ரூபா வரைச் செலவு செய்து, அதிஷ்டாநத்தில் மண்டபம் ஆலயங்

கள் அமைத்தும், மடம் இயற்றியும், விளை நிலங்கள் மிகுதியாக வாங்கியும், குரு கைங்கரியங்களைச் சீருறச் செய்து கொண்டும், பிரஹ்ம வித்தையினைப் பக்குவிகட் குபதேசித்துக் கொண்டும் வருகின்றனர்.

---

## 6. வளவ னூர் மடம்.

கோவிலூர் அருணசல ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், ஷண்முக ஸ்வாமிகள் வளவ னூரில் மடம் ஒன்று இருபத்தையாயிரம் ரூபா வரைச் செலவு செய்து ஏற்படுத்தி, சாதுக்கள் போசநத்திற்கு விளை நிலங்கள் வாங்கி நடராஜ உபாசகராய்ப் பஜனைப் பிரியராய் பிரஹ்ம வித்தாய் 40 வருஷம் வரை இருந்து, கலி 4990-க்குச் சரியான விரோதி வருஷம் ஆனி மாதம் 8 தேதி வியாழக் கிழமை கிருஷ்ண பக்ஷம் ஷஷ்டி திதி பூராட நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், நம சிவாய ஸ்வாமிகள் அதிபதியாக 14 வருஷம் வரை இருந்து செவ்வனே பரிபாலித்து, கலி 5004-க்குச் சரியான சோபகிருது வருஷம் ஐப்பசி மாதம் 2 தேதி ஞாயிற்றுக் கிழமை கிருஷ்ண பக்ஷம் திரயோதசி திதி உத்திர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், சுந்தராநந்த ஸ்வாமிகள் அதிபதியாக 29 வருஷமாக இருந்து பரிபாலித்துக் கொண்டு வருகின்றனர்.

---

## 7. சிதம்பரம், பொன்னம்பல ஸ்வாமிகள் மடம்.

கோவிலூர், சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், பொன்னம்பல சுவாமிகள் சிதம்பரத்தில் ஐம்பதாயிரம் ரூபா வரைச் செலவு செய்து, சுபாநு வருஷத்தில் மடம் ஒன்று ஏற்படுத்தி



அதற்கு விளை நிலங்கள் வாங்கி, இறும் பூதூர் தத்துவ ராய ஸ்வாமிகளின் அதிஷ்டாநத்தினைக் கற் றிருப் பணி ஆக்கி பூஜை முதலியவற்றிற்கு விளை நிலம் வாங்கி, அங்கு மடம் ஒன்று ஆற்றி, குஞ்சித பாத சேவா பராய்ப் பிரஹ்ம வித்தியா உபதேச "பராய்க் கைவல்ய நவநீதம், பகவற் கீதை, வேதாந்த சூடாமணி" என்னும் நூல்சட்கு உரை யியற்றிக் கொண்டு, 30 வருஷம் வரை இருந்து, கலி 5005-க்குச் சரியான குரோதி வருஷம் ஐப்பசி மாதம் 22 தேதி ஞாயிற்றுக் கிழமை அமாவாசை சித்திரை நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், பொன்னம்பல சுவாமிகளின் மாணாக்கர், சிதம்பர சுவாமிகள் அதிபதியா யிருந்து ஒன்றரை லக்ஷம் ரூபா வரைச் செலவு செய்து, அதிஷ்டாநத்தினைக் கற் றிருப் பணி ஆக்கி, விளை நிலங்கள் வாங்கி, மடத்தினைச் சீருறச் செய்து, பிரஹ்ம வித்தையினைப் பக்குவிகட் குபதேசித்துக் கொண்டு, 20 வருஷம் வரை யிருந்து கலி 5028-க்குச் சரியான ரக்தாக்ஷி வருஷம் தை மாதம் தேதி கிழமை பக்ஷம் திதி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் மடாதிபதி மஹா தேவ ஞாந தேசிக ஸ்வாமிகளால் பரமசிவ சாமி முதலிய சில சாதுக்களை வைத்துப் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது.

---

## 8. சாக் கோட்டை மடம்.

கோவிலூர் இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணாக்கர், வீரப்ப ஸ்வாமிகள் சாக் கோட்டையில், ஒரு வேதாந்த மடம் ஒரு லக்ஷம் ரூபா வரைச் செலவு செய்து இயற்றி, விளை நிலம் வாங்கி, சாதுக்களை வைத்து சம்ரக்ஷணை செய்து, தமது குரு இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகளின் பாதுகையினை வைத்துப் பூஜித்துக்

கொண்டு, வேதாந்த போதகராய் 22 வருஷம் வரை இருந்து, கலி 5005-க்குச் சரியான குரோதி வருஷம் தை மாதம் 13 தேதி சுக்கில பக்ஷம் பஞ்சமி திதி உத்திர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர், முத்துக் கறுப்ப ஸ்வாமிகள் அதிபதியாக 15 வருஷம் வரை இருந்து வேதாந்த சாஸ்திர உபதேசஞ் செய்து கொண்டு, மடத்தினைப் புதிதாக நிர்மாணம் செய்து, சாது சங்கப் பிரியராய், நிஷ்டா பரராய் விளங்கி, கலி 5019-க்குச் சரியான காளயுக்தி வருஷம் ஆவணி மாதம் 19 தேதி புதன் கிழமை கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி திதி மக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் இராம சுவாமி ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர், செல்லப்ப ஸ்வாமிகள் அதிபதியா யிருந்து 3 வருஷம் வரை வேதாந்த உபதேசஞ் செய்து கொண்டு இருபத்தையாயிரம் ரூபா வரைச் செலவு செய்து, மடம் முதலியன இயற்றி, கலி 5024-க்குச் சரியான துந்துபி வருஷம் ஆடி மாதம் 29 தேதி ஞாயிற்றுக் கிழமை கிருஷ்ண பக்ஷம பஞ்சமி திதி ரேவதி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், சாக் கோட்டை வீரப்ப ஸ்வாமிகளின் மாணுக்கர், சங்கர சுவாமிகள் 4 வருஷம் வரை அதிபதியாக இருந்து, கலி 5028-க்குச் சரியான பிரபவ வருஷம் ஆவணி மாதம் 11 தேதி சனிக் கிழமை பூர்வ பக்ஷம் பிரதமை திதி பூர நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், அந்த மடத்தில் இருக்கும் சாதுக்கள் 5 வருஷமாகப் பார்த்து வருகின்றனர்.

---



## 9. காளையார் கோவில் மடம்.

கோவிலூர் இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர், செல்லப்ப சுவாமிகள் தமது குருவின் விதேஹ கைவல்யத்தின் பின் 24 வருஷம் வரைச் சாக் கோட்டை விருத்தாசலம் முதலிய இடங்களில் வசித்து, தஞ்சாவூர் கரந் தட்டான் குடி பாலைய சுவாமிகள் மடத்திற்கும், சங்கர ஸ்வாமிகள் மடத்திற்கும் அதிபதியாக இருந்து, பராபவ வருஷம் மதுரை குட்டைய ஸ்வாமிகள் மடத்திற்கு அதிபதியாக வந்து, 6 வருஷம் சென்று பரிதாபி வருஷத்தில் காளையார் கோவிலில், தேவி கோட்டை ஜமீந்தாரவர்களால் ஒரு வேதாந்த மடம் ஒரு லக்ஷம் ரூபா வரைச் செலவு செய்து பெரிதாக இயற்றப் பெற்று, சாதுக்கள் போசநத்திற்கு வேண்டிய பொருள் ஏற்படுத்தப் பெற்று, அதில் தாம் மேற்படியாருக்குக் குருவாக விருந்து, வேதாந்த உபதேசஞ் செய்து கொண்டு, 10 வருஷம் வரை இருந்து, கலி 5024-க்குச் சரியான துந்துபி வருஷம் ஆடி மாதம் 29 தேதி ஞாயிற்றுக் கிழமை கிருஷ்ண பக்ஷம் பஞ்சமி திதி ரேவதி நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் மடாதிபதி மஹா தேவ ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர் முத்தைய ஸ்வாமி சில காலம் அதிபதியாக இருந்து, குரோதன வருஷம் ஆவணி மாதம் 19 தேதி சதய நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், லக்ஷ்மண ஸ்வாமி சில காலம் அதிபதியாக இருந்தனர்.

அதன் பின், சிக்கல் பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகளின் மடாதிபதி மெய்யப்ப ஞான தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர் அருணுசல சாமி பிரமோதூத வருஷம் முதல் அதிபதியாக இருந்து வருகின்றனர்.

---

## 10. மாநுமதுரை நாராயண ஸ்வாமிகள் மடம்.

கோவிலூர் சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர் நாராயண ஸ்வாமிகள் மாநு மதுரையில் தியாக பராரய்ப் பிக்ஷை யேற் றுண்டு கொண்டு தமது குரு மூர்த்தியின் விதேஹ கைவல் யத்தின் பின் 14 வருஷம் வரை இருந்து, கலி 4991-க்குச் சரியான விரோதி வருஷம் பங்குனி மாதம் தேதி கிழமை பௌர்ணமை திதி அஸ்த நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், நாராயண ஸ்வாமிகள் மாணுக்கர் வேலாயுத சாமி அந்த இடத்தில் 22 வருஷம் வரை இருந்து மூவாயிரம் ரூபா வரைச் செலவு செய்து மடம் ஒன்று இயற்றி, பூசைக்கு விளை நிலம் வாங்கி வைத்துப் பூசை செய்து கொண்டு இருந்து, பரிதாபி வருஷத்தில் விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின், கோவிலூர் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர் சதாசிவ சாமி பரிதாபி வருஷ முதல் மடத்தில் அதிபதி யாக இருந்து, பதி ஞயிரம் ரூபா வரைச் செலவு செய்து, மடம் இயற்றி, விளை நிலம் வாங்கி வைத்து, 20 வருஷமாக பரிபாலித்துக் கொண்டு வருகின்றனர்.

---

## 11. திருப் பூவண மடம்.

கோவிலூர் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணுக்கர் காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் "மாணுன் முக்தி ஸ்தல மாய், அஸ்தி புஷ்ப மான திருப் பூவணத்தில் வைகை நதி தீரத்தில் சாதுக்களுக்கு வேதாந்த மடம் ஒன்று இருக்க வேண்டும்" என்று கருதித் தமது குருவின் விதேஹ கைவல்யத்தின் பின் 9 வருஷம் வரைக் காசி முதலிய பல ஸ்தலங்களில் வசித்து, சித்தார்த்தி வருஷத்தில் நாற்ப தாயிரம் ரூபா வரைச் செலவு செய்து திருப் பூவணத்தில், விசால மான இட முடை நிர்ஜநப் பிரதேசத்தில்



ஒரு மடம் ஏற்படுத்தி இற்றைக்கு 12 வருஷமாக வேதாந்த சாஸ் திரங்களை உபதேசித்துக் கொண்டும், வேதாந்த சாஸ்திரங்களை மொழி பெயர்த்துக் கொண்டும், அநேக நூல்களுக்கு உரை யெழுதிக் கொண்டும் வருகின்றனர்.

1 கோவிலூர் மடத்திற் குட்பட்டது, திருக் களர் மடம். 2 சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்திற் குட்பட்டது, இறும் பூதூர் தத்துவ ராய ஸ்வாமிகள் அதிஷ்டாநமும் மடமும், திரு வண்ணமலை பவழக் குன்று அழகாநந்த சாமிகள் மடமுமாம். கோவிலூர் மடத்தின் அதிகார வரம்பிற் குட்பட்டு வரவு செலவு கணக்குக் கொடுக்க வேண்டியன:—1 சிக்கல்-பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம். 2 சிதம்பரம் பொன்னம்பல ஸ்வாமிகள் மடம். 3 திரு வண்ணமலை ஈசாந திசைக்கண் ணுள்ள, கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம் என்னும் மூன்றுமாம். மற்றைய ஏழு மடங்களும் கோவிலூர் அதிகார வரம்பிற் குட்படாதன வாம்.

---

## 12. பல மடங்கள்.

1 திரு வாரூர் மடப்புரம், தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் மடம். 2 பசுபதி கோவில், ஆறு முக சுவாமிகள் மடம். 3 தஞ்சாவூர் கரந் தட்டான் குடி, பாலைய சுவாமிகள் மடம். 4 கோவிற் பட்டி, முக்தா நந்த சாமிகள் மடம். 5 குன்றக் குடி, மேல மடம். 6 திரு வண்ண மலை, பவழக் குன்று மடம். 7 சிதம்பரம், மௌந ஸ்வாமிகள் மடம் முதலிய இடங்களில், கோவி லூர் மடாலயத்தினைச் சேர்ந்த சாதுக் கள் அதிபதியாக இருந்தனர்; இருந்தும் வருகின்றனர்.

இங்ஙனம், 1 சிக்கல்-பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம். 2 திரு வண்ணமலை-ஈசாந திசை யில், கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம். 3 கோவி லூர், முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம். 4 வளவ னூர், ஷண்முக

ஸ்வாமிகள் மடம். 5 மதுரை, குட்டைய ஸ்வாமிகள் மடம். 6 மதுரை, அரசப்ப ஸ்வாமிகள்—பிரஹ்மானந்த ஸ்வாமிகள் மடம். 7 சிதம்பரம், பொன்னம்பல ஸ்வாமிகள் மடம். 8 மானு மதுரை, நாராயண ஸ்வாமிகள் மடம். 9 சாக் கோட்டை, வீரப்ப ஸ்வாமிகள் மடம். 10 திருக்களர். வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகள் மடம். 11 காளையார் கோவில், செல்லப்ப ஸ்வாமிகள் மடம். 12 திருப் பூவணம், காசிகானந்த ஞானாசார்ய ஸ்வாமிகள் மடம் என்பனவும், 1 இறம் பூதூர், தத்துவ ராய ஸ்வாமிகள் மடம். 2 சிதம்பரம், மௌன ஸ்வாமிகள் மடம். 3 திரு வாரூர்-மடப் புரம், தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகள் மடம். 4 பசுபதி கோவில், ஆறுமுக ஸ்வாமிகள் மடம். 5 திரு வண்ணா மலை பவழக் குன்று, அழகானந்த சாமிகள் மடம். 6 குன்றக்குடி, மேல மடம். 7 தஞ்சா வூர்-கரந்தட்டான் குடி, பால் சாமி மடம். 8 கோவிற் பட்டி, முக்தானந்த ஸ்வாமிகள் மடம் என்பனவும் சேர்ந்து இருபது மடங்களும் கோவி லூர் ஆதீனத் தினை சேர்ந்தன வாம்.

———

## முடி வுரை.

இவ்வாறான மஹிமை வாய்ந்த கோவிலூர்ப் பாம்பரையில் எழுந்த வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் சரித புராணம், 1-வது பால காண்டம் 15 அத்தியாய மாம். 16-வது வயதில் வெளிப் போந்து குருவை யடைந்தமையை விளக்க, அதனை 15 அத்தியாயத்தோடு முடித்தனர்.

2-வது சந்நியாச காண்டம் 34 அத்தியாய மாம். 35-வது வயதில் கோவிலூரில் தலைமை பூண்டதனை ஞாபகப்படுத்துதற்கு அதனை 34 அத்தியாயத்தோடு முடித்தனர்.

3-வது முக்தி காண்டம் 14 அத்தியாயமாம். தமது 49-வது வயதில் திரு நெல்லை யம்பாள் தியானத்தில் வந்து, நினைத்த காரி



யங்கள் யாவும் விக்கம் இன்றி நிறை வேறும்படி அநுக்கிரகித்தபின் 14 வருஷம் இருந்து சர்வ காரியங்களையும் செய்ததனை அறி வுறுத்துதற்கு அதனை பதி னான்கு அத்தியாயத்தோடு முடித்தனர்.

இவ்வாறு, சுவாமிகளின் அவஸ்தை மூன்றைப் ‘பால காண்டம் சந் நியாச காண்டம் முக்தி காண்டம்’ எனக் காண்டத் திரய ரூப மாகவும், சுவாமிகளின் வயது அறு பத்து மூன்றை அறு பத்து மூன் றத்தியாய மாகவும் வகுத்தனர்.

வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகள், கீலக வருஷம் ஆவணி மாதம் 12 தேதி வெள்ளிக் கிழமை புநர் பூச நக்ஷத்திரத்தில் ஜநநம். மறு கீலக வருஷம் சித்திரை மாதம் 11 தேதி குரு வாரம் கோவி லூர்க் கும்பாபிஷேகம் செய்தல். சுபாநு வருஷம் மார்கழி மாதம் 16௳ வெள்ளிக் கிழமை கோவிலூர் மடாதிபதியாதல். சௌமிய வருஷம் ஐப்பசி மாதம் 7 தேதி கிழமை திருக் களர் கோவில் தச்சு வேலை ஆரம்பம் செய்தல். விரோதி கிருது வருஷம் சித்திரை மாதம் 22 தேதி வியாழக் கிழமை புநர் பூச நக்ஷத்திரத்தில் திருக் களர் கும்பாபிஷேகஞ் செய்தல். வைகாசி மாதம் 13௳ வெள்ளிக் கிழமை திருக் களர் மண்டலாபிஷேகம் செய்தல். வைகாசி மாதம் 18 தேதி புதன் கிழமை புநர் பூச நக்ஷத்திரத்தில் திருக் களரில் உத்ஸவாரம்பம் செய்தல். 27 தேதி வெள்ளிக் கிழமை விசாக நக்ஷத்திரத்தில் விதேஹ கைவல்யம். இதனால் வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளுக்கு வெள்ளிக் கிழமையும், புநர் பூச நக்ஷத்திரமும் மிகுதியும் தொடர்ந்து வருகின்றன என்பதனை உணரவேண்டும்.

குருவின் பெருமை கூறற் கரிய வாகலின் ஒரு சிறிது கூறி முடித்தாம்.

திருப் பூவண மடாதிபதி
**காசிகா நந்த ஞா நாசார்ய ஸ்வாமிகள்**
ஆங்கிரச வருஷம் வைகாசி மாதம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

## அகாராதி அஷ்டோத்தர சத அர்ச்சந நாமாவலி.

1 ஓம் அவதார மூர்த்திநே நம:
2 ... அநந்த வைபவாய ...
3 ... அபரிமித சக்திநே ...
4 ... அத்வைதாநுபவிநே ...
5 ... அசஞ்சல சித்தாய ...
6 ... ஆஸ்திக மத பூஷணாய ...
7 ... ஆப்தாய ...
8 ... ஈசுவர சேவா பராயணாய ...
9 ... உத்சவப் பிரியாய ...
10 ... உத்தம ஸ்வரூபிணே ...
11 ... உபநிஷத் சாரக் கிரகிணே ...
12 ... ஊஹாபோக விசக்ஷணாய ...
13 ... ஏகாம்பர தாரிணே ...
14 ... ஏஷணாத் திரய வர்ஜ்ஜிதாய ...
15 ... ஓங்காரார்த்தாய ...
16 ... ஔதார்யாய ...
17 ஓம் கநகாஸ்பரிசாய நம:
18 ... கருணா நிதயே ...
19 ... காலஞ் ஞாய ...
20 ... காஷாயோபேதாய ...
21 ... குசல மதயே ...
22 ... குண பூஷணாய ...
23 ... குணிநே ...
24 ... கூட சித்தாய ...
25 ... கௌமார சந்யாசிநே ...
25 ... சங்கர தேஜசே ...
27 ... சங்கராசார்யாசீர்வாத விசிஷ்டாய ...
28 ... சத்ய முக்தாய ...
29 ... சதுர்த்த பூமி வாசிநே ...
30 ... சந் யாச சம் ரக்ஷகாய ...
31 ... சம திருஷ்டிநே ...
32 ... சம லோஷ்டாஸ்ம காஞ்சநாய ...



33 ஓம் சாசுவத கீர்த்திநே நம:
34 ... சாது கண பூஜிதாய ...
35 ... சாலிவாடி புர சம் ரக்ஷகாய ...
36 ... சாஸ்திரோபதேசகாய ...
37 ... சிவ பக்த சிகாமணயே ...
38 ... சிவாலய நிர்மாணாய ...
39 ... சிற்ப ஞாநிநே ...
40 ... சிஷ்ய கோடி சேவிதாய ...
41 ... ஜீவந் முக்தாய ...
42 ... சுத்த வபுஷே ...
43 ... சூக்ஷ்ம புத்திநே ...
44 ... சோக தாரகாய ...
45 ... சோதித திவம் பதார்த்தாய ...
46 ... சௌம்ய வக்த்ராய ...
47 ... தத்வ நிதயே ...
48 ... தத்வமசி தத்பராய: ...
49 ... தபஸ்விநே ...
50 ... தாபத் திரய ரஹிதாய ...
51 ... திராவிட தேச நிதயே ...
52 ஓம் தீர்க்க விசாராய நம:
53 ... துரிதாபஹர்த்திநே ...
54 ... தூஷணாநாஸ்பதாய ...
55 ... த்ரண துல்ய திரிலோக தரிசிநே ...
56 ... தேஜஸ்விநே ...
57 ... நவ துர்வாசாய ...
58 ... நடராஜோபாசகாய ...
59 ... நித்ய முத்திப் பிராப்திநே ...
60 ... நித்ய சிரவண நிரதாய ...
61 ... நிர்வாண பத ஞாத்ரே ...
62 ... நைமித்திக யாத்ராய ...
63 ... பகவதே ...
64 ... பக்தாநுசாரிணே ...
65 ... பக்தி பல சாலிநே ...
66 ... பந்த மோசகாய ...
67 ... பாச க்ஷேத்ரே ...
68 ... பாரி ஜாத வந சம் ரக்ஷகாய ...
69 ... பாவநாய ...
70 ... பிரஹ்சாரிணே ...

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 71 | ஓம் பிரஹ்மாநுபவிநே | நம: | 90 | ஓம் விதவேஷ | நம: |
| 72 | ... புத்திமதே | ... | 91 | ... விதேஹ கைவல்யாய | ... |
| 73 | ... பூர்ண தபஸ்விநே | ... | 92 | ... வித்யாபிவிர்த்திகராய | ... |
| 74 | ... போக வர்ஜ்ஜிதாய | ... | 93 | ... விரக்தப் பிரியாய | ... |
| 75 | ... மங்கல கதிநே | ... | 94 | ... வீர சேகராய | ... |
| 76 | ... மூக்தி ராம லிங்க ஸ்தாநேசாய | ... | 95 | ... வேதாந்த சேதவே | ... |
| 77 | ... மூநீசுவராய | ... | 96 | ... வைராக்ய சம்பதே | ... |
| 78 | ... மேதாவிநே | ... | 97 | ... ஹரப் பிரியாய | ... |
| 79 | ... மைத்ரியாதி குணோபேதாய | ... | 98 | ... ஹம்ச சர்யாசிநே | ... |
| 80 | ... மோஹாபஹர்த்திரே | ... | 99 | ... ஹித கர்மிணே | ... |
| 81 | ... மோக்ஷ தாயிநே | ... | 100 | ... ஹித காரிணே | ... |
| 82 | ... யத்ந சீலாய | ... | 101 | ... ஹித காமாய | ... |
| 83 | ... யதீந்திராய | ... | 102 | ... ஹிதோபதேசாய | ... |
| 84 | ... யோக மூர்த்திநே | ... | 103 | ... ஹ்ருதயாகாச ரூபிணே | ... |
| 85 | ... ரத சந்நிதௌ த்யக்த தநவே | ... | 104 | ... ஹ்ருதயக் கிரந்தி விச்சிந்நாய | ... |
| 86 | ... லக்ஷ்ய தர்சிநே | ... | 105 | ... ஹேம சபா வாசிநே | ... |
| 87 | ... லீலா விக்கிரக தாரிணே | ... | 106 | ... ஐஹிகாமுஷ்மிக பலாபேக்ஷா ரகிதாய | |
| 88 | ... வஸ்து திருஷ்டிநே | ... | 107 | ... ஹேம சபா நடப் பிரியாய | ... |
| 89 | ... விசித்ர சரித்ராய | ... | 108 | ... ஹேரம்ப சேவிதப் பிரியாய | ... |

॥ ॐ तत्सत् ॥

# ॥ आशीर्वाद पञ्चरत्नम् ॥



वीता विबुधसखीभिर्वीताखिलविषयतर्षजनलभ्या ।
वीणाशोभितकराब्जा वीरेशं पातु विमलधीदानात् ॥ १

दत्वा विरक्तिमचलां कृत्वा चित्तं परात्मगं सुदृढम् ।
वाणि कृपामृतजलधे वीरेशं पाहि शिवपदासक्तम् ॥ २

भक्तिं त्वत्पदपद्मे सुदृढां मुक्तिं च सुकृतकरलभ्याम् ।
देह्यासु विमलमतये वीरेशायांब वाणि करुणाब्धे ॥ ३

शक्तिं सतताक्षजये शिवविष्ण्वाद्यालयादिनिर्माणे ।
सक्तिं च साधुसङ्गे वीरेशायांब यच्छ करुणातः ॥ ४

एतन्मठोपि सुचिरं सद्वृत्तैस्त्वीदृशैस्सदा लसितः ।
जीयात्परशिवकृपया लोकानामुपकृतिं सदा कुर्वन् ॥ ५



शृंगगिरिस्थ श्रीसच्चिदानन्दशिवाभिनवनृसिंहभारती
स्वामिना विरचितं आशीर्वाद पञ्चरत्नं समाप्तम् ।

॥ ॐ तत्सत् ॥

# श्री वीरशेखर ज्ञानदेशिक
# ॥ चरितम् ॥

तुङ्गां गुणगणतुङ्गां शृङ्गगिरिं तीरजान् द्रुमान् सर्वान् ।
अद्वैतदेशिकेन्द्रान् वरदां श्रीशारदां सदा वन्दे ॥१
कैलासनाथश्रीनित्यकल्याणीभास्यषण्मुखान् ।
शालिवाटीश्वरीमम्बां राजखड्गेश्वरं भजे ॥२
अरुणाचलाख्यदेशिकरजतगिरिप्रमुखकामितामताम् ।
सुब्रह्मण्यविपश्चिद्विरचयते वीरशेखराभिख्याम् ॥३
वणिक्कुलैकतल्लजस्स्वदेशभाषयाबलात्
गृहीतशाश्वतोक्तिसुक्तिमौक्तिकोत्करः ।
सदालये सदालये पुरेव्यराजतोच्चकै—
स्समुत्तुरामलिङ्गनाम बोधदेशिकोत्तमः ॥४
तद्ब्रह्मवित्प्रतिष्ठितभाषावेदान्तपाठमठनिष्ठः ।
आज्ञां चिरात्तदीयां चिदम्बरज्ञानदेशिकोरक्षीत् ॥५



तदाप्तकामशिक्षितस्सदात्मशास्त्रतत्ववि—
त्सवैश्यवंशपावनो विरक्तवीरशेखरः ।
मठाधिपत्यमगृहीदहम्ममत्ववर्जीतो
मुमुक्षुभाग्यतःपरं गुरोर्गिरोऽपि पालयन् ॥६
गुरुदेवद्विजभक्तो विद्वान् विजितेन्द्रियो विरक्ताग्रयः।
सज्जनभाग्यविवर्तो वीरप्पज्ञानदेशिको वित्तः ॥७
श्रीसच्चिदानन्दशिवाभिनव्यनृसिंह्मभारत्यभिधाभिधेयाः
आचार्यवर्याजगतोभिनन्दन्त्युदारवैराग्यमुखैर्गुणैर्यम् ॥
दयायां जीमूतो युधिरघुपतिर्धर्मतनयः
परं धर्मैकर्णः प्रथितइहवीरो वितरणे ।
गुणस्तोमस्थैर्यात्समुदिततच्छेखरतया
तदाख्यो विख्यातो विरहितनिजाख्यांतरमसौ ॥९
जनिमृतिजरादुःखैः खिन्नाननन्यगतीन्जनान्
सरससरसैर्भाषासूक्तैरनादिवचो निभैः ।
विदितसहजाद्वैतानन्दामृताब्धिविहारिणो
विरचितवतो यस्यासाधारणी करुणा पुनः ॥१०

कामो नामैकशेषो ह्यजनिमहित यन्नाममात्रश्रवेण
क्रोधो विध्वस्तएव क्षणसमरतो हन्तलोभो भयार्तः।
दूरान्मोहो हतोभूदमदइहमदो मत्सराक्रान्तचेतो
मात्सर्यं वीर्यमीदृक्नुभुवनतले वीक्षितं प्रेक्षितं वा॥११

कैलासानूनदेवालयवरवलयान्वेदवेदाङ्गविद्या—
ह्यारशाला विशाला विमलजलसरो वापिकारामकूपान्।
अस्तोकास्ताभिमानो जगति निबिडयन्
भातिताभिस्तनूभि—
र्योलोकक्षेमदीक्षाक्षपितनिजवयास्तादृशः क्वास्ति धर्मे

वाञ्छाविस्मृतवाञ्छितार्थवहनादेहीति दैन्यं विना
कृत्वा किञ्चन दीनपामरतमानप्यैन्द्रभोगालसान् ।
ज्ञानाद्यासशुकादिसम्मतमतीनत्यादरात्तन्वतो
यस्यौदार्यविजृम्भितव्यवहतौ ब्रह्माऽपि जिह्मायते ॥१३

रथोपरिविराजितः पुररिपोर्नटाधीशितुः
पुरो नटनकृद्वदन्निति मुदा महादेव भोः ।



सविस्मयमहोवहन् द्विजकरादृतश्शाश्वतं
विदेहपदमाविशत्प्रथितपारिजातस्थले ॥ १४

विरोधिकृतिवत्सरे वृषभमासि पक्षे सिते
त्रयोदशिकया युते भृगुदिने विशाखर्क्षगे ।
सदेह इव देहतो विरहितोपि वीरोत्तमः
विशेषमिहपोषयन्वसाति पारिजातस्थले ॥ १५ ॥

एकादशोपरञ्जितकालेयसहस्रपञ्चके पूर्णे ।
वीरस्त्रिषष्टिवर्षः पूर्णोभूत् त्रिंशदब्दमठपालः ॥ १६ ॥

तच्छासनाभिषिक्तस्तत्कारुण्यादवाप्तपुरुषार्थः ।
तादृग्गुणो मठेस्मिन्नरुणाचलदेशिकश्चिरं जीयात् ॥ १७

तिरुनेल्वेलिजिल्ला अरवंगुलनिवासि ब्रह्मश्री शमरपुंगव-शास्त्रि शिष्य श्री सुब्रह्मण्यशास्त्रि विरचितम् श्री वीरशेखर-ज्ञानदेशिक स्वामि जीवन चरित्रम् समाप्तम् ।



# ஆசிர்வாத பஞ்ச ரத்நம்.

தேவ ஸ்திரீகளோடு கூடியவளே! சர்வ விஷயங்களையும் விட்டவர்களால் அடையப்பட்டவளே! வீணையினால் சோபிக்கப் பட்ட தாமரைப் பூப்போன்ற கையினையுடையவளே! நிர்மல மான புத்தியினைக் கொடுத்தலினால் வீரேசனை இரக்ஷிக்குக. 1

வாணி! கிருபா சமுத்திரமே! சலநமற்ற வைராக்கியத்தினைக் கொடுத்து, பரமாத்ம சம்பந்தமான நல்ல திடச் சித்தத்தினைச் செய்து சிவ பதத்தில் ஆசக்தியினை யுடைய வீரேசனை இரக்ஷிக்குக. 2

அம்ப! வாணி! கருணா சமுத்திரமே! உனது பாத தாம ரையில் நற்றிட பக்தியினையும், புண்ணியவான்களால் அடை யத் தகுந்த மோக்ஷத்தினையும், நிர்மலமான புத்தியினையுடைய வீரேசன் பொருட்டுச் சீக்கிரம் கொடுப்பாயாக. 3

அம்ப! இந்திரிய நிக்கிரகத்தில் சதா சாமர்த்தியத்தினை யும், சிவ விஷ்ணு முதலியோர்களின் ஆலயாதிகளின் நிர்மா ணத்தில் சாமர்த்தியத்தினையும், சாது சங்கத்தில் விருப்பத்தி னையும், கருணையினால் வீரேசன் பொருட்டுக் கொடுப்பாயாக. 4

இந்த மடமும் இவ்வாறான நற்சரித முடையோரால் நீண்ட காலம் எப்பொழுதும் விளங்க, லோகத்தவர்கட்குச் சதா உபகாரத்தினைச் செய்து கொண்டு பரம சிவ கிருபையினால் ஜீவிக்குக. 5

சிருங்க கிரி ஸ்ரீசச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள் இயற்றிய ஆசிர்வாத பஞ்ச ரத்நம் முற்றிற்று.

# வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம்.

குணக் கூட்டங்களோடு பரிசுத்தமான துங்கையையும், சிருங்க கிரியையும் அதன் கரையில் உண்டான எல்லா விரு க்ஷங்களையும், அத்வைத தேசிகேந்திரர்களையும், வரங்களைக் கொடுக்கின்ற ஸ்ரீ சாரதா தேவியையும் சதா நமஸ்கரிக் கிறேன். 1

கைலாச நாதர் ஸ்ரீ நித்யகல்யாணி கணேசர் ஷண்முகர் சாலிவாடீசுவரி அம்பிகை ராஜகட்கேசுவரர்களை பஜிக்கின் றேன். 2

அண்ணாமலை ஞாந தேசிக ஸ்வாமிகள் வெள்ளியங்கிரிச் சாமி முதலியவர்களால் விரும்பப்பட்ட இந்த வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் சரிதத்தினைச் சுப்பிரமணிய சாஸ்திரி செய்தனர். 3

வைசிய குலத் திலகராய், சுவதேச பாஷா பலத்தால் கிரகிக்கப்பட்ட சாசுவதச் சொல்லாகிற சிப்பியினின்றும் உண்டான முத்திற்குச் சமாநமாய், முத்து ராம லிங்க ஞாந தேசிக உத்தமர் நல் லிடமாகிய கோவிலூரில் உயர்வுடன் விளங்கினர். 4

அந்தப் பிரஹ்மவித்தால் ஸ்தாபிக்கப்பட்ட மடத்தில் தமிழ்ப் பாஷையில் வேதாந்த பாடஞ் சொல்லிக் கொண்டிரு ந்தார். அவரது ஆஞ்ஞையினைச் சிதம்பர ஞாந தேசிகர் நீணாள் இரக்ஷித்து வந்தனர். 5

அந்த ஆப்தகாமரால் சிக்ஷிக்கப்பட்டவராய். சதா ஆத்ம சாஸ்த்ர தத்துவத்தினை அறிந்தவராய், வைசிய வம்சத்தினைப் பாவநம் செய்பவரா யுள்ள, வைராக்கிய முடைய வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகள், குரு வாக்கியத்தினை நன்றாகப் பரிபாலித்துக் கொண்டு முமுக்ஷுக்களின் பாக்கியத்தினால் 'யான் எனது'' என்னும் தன்மையினை விட்டு மடாதிபதியாயினர். 6

குரு தேவதை துவிஜர்களிடத்துப் பக்தி யுடைவராய், வித்வானாய், ஜிதேந்திரியராய், விரக்தர்களுள் அக்ர கண்யராய், சஜ்ஜநங்களது பாக்கியத்தினால் உண்டானவராய், வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் இருந்தார்கள். 7

ஸ்ரீசச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளாகிய ஆசாரிய சிரேஷ்டர், ஜகத்தில் யாரை (வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகளை) உதார வைராக்கிய குணங்களால் துதிக்கின்றனரோ. 8

தயையில் ஜீமூதம், யுத்தத்தில் ரகுபதி, மேலான தர்மத்தில் தர்ம புத்திரர்கள், தாநத்தில் ஈண்டு பிரசித்த கர்ணன் வீரராம். (இந்த நான்கு) குணங்களும் சேர்ந்து ஸ்திரமாய்ச் சமமாய் உண்டாயிருத்தலின் அதனை யுடைமையான் தமக்கு வேறு பெயர் இன்றி அந்தப் (வீர சேகரர் என்னும்) பெயரே பிரசித்த மாயிற்று. 9

ஜநந மரண ஜரை துக்கங்களால் பீடிக்கப்பட்ட வேறு கதி யின்றிய ஜநங்களை, வேத வாக்குக்குச் சமானமான அதிசரல தமிழ்ப் பாஷைச் சூத்திரங்களால் அறியப்பட்ட சஹஜ



அத்வைதாநந்தாமிருத சமுத்திரத்தில் நீந்தும்படியாகச் செய்தனரோ, அவரது கருணை அசாதாரணமாம். 10

எவரது பெயரைக் கேட்ட மாத்திரத்தில் ''காமம்'' என்னும் பெயரே எஞ்சிற்றன்றோ? குரோதம், க்ஷணம் யுத்தம் செய்து நாசமே யடைந்ததோ? லோப பய துக்கங்கள் நாசம் உற்றனவோ? மோஹம் தூரத்தே நாச மாயிற்றன்றோ? ஈண்டு மதம் மதம் இன்றிய தாயிற்றன்றோ? மாத்சரியம் மத்சரத்தோடு கூடிய சித்தம் உடைய தாயிற்றன்றோ? இவ்வாறான வீரியத்தினைப் புவநத்தில் யாண்டாயினும் கண்ட துண்டா? அல்லது கேட்ட துண்டா? 11

கைலாசத்தினைத் தாழ்த்தும்படியான தேவாலயங்கள், பிராகாரங்கள், வேத வேதாங்க வித்தைகளுக்குரிய விசாலம் பொருந்திய பாடசாலைகள், நிர்மல ஊருணிகள், நடை கிணறுகள், தோட்டங்கள், கிணறுகள் ஆகியவற்றை ''நாம் செய்தோம்'' என்னும் அபிமாந மின்றிச் செய்து, ஜகத்தில் நிறைத்து, அவைகளையே சரீரங்களாகக் கொண்டு விளங்கிக் கொண்டு 'லோகத்திற்கு க்ஷேமம் உண்டாக வேண்டும்' என்று தீக்ஷை செய்து கொண்டு தமது வயதை யெல்லாம் கழித்த வீரேசரைப் போன்று தர்மத்தில் யார் எங் கிருக்கின்றனர்? (ஒருவரும் ஓரிடத்தும் இலர் என்பது கருத்தாம்.) 12

''கொடுங்கள்'' என்னும் தைந்யம் இன்றி ஆசையினால் மறந்த இச்சிக்கப்பட்ட பொருளைக் கொடுத்தலினாலும், மற்றும், தீந பாமர சிரேஷ்டர்களை இந்திர போக சமாநர்களாகச் செய்தலினாலும், ஞாநத்தினால் வியாச சுகாதி சம்மத

மதியை மிக ஆதரவோடு விளக்குதலினுலும், எந்த வீரசேகர ரது உதாரத்தினுல் வெளிப்பட்ட வியவகாரத்தில் பிரஹ்மா வும் லச்சை அடைகின்றனர். 13

பிரசித்தமான பாரிஜாத ஸ்தலத்தில், முப்புரங்களையும் தகனம் செய்த கடவுள் ரதத்தின் மீது விளங்க, நடராஜாவின் சந்நதியில் "மஹாதேவ" என்று சந்தோஷத்தோடு சொல்லி நடநம் செய்து கொண்டு, ஆச்சரியமான விஸ்மயத்தினை உண்டு பண்ணி, பிராமணர்களால் தாங்கப் பெற்றுச் சாசுவதமான விதேஹ பதத்தினை அடைந்தார்கள். 14

விரோதி கிருதி வருஷம், வைகாசி மாதம், சுக்கில பக்ஷம், திரயோதசி திதி, வெள்ளிக் கிழமை, விசாக நக்ஷத்திரத் தில் வீரசேகரர், தேஹத்தினை விட்டும் தேஹத்தோடு கூடியவர் போன்றே ஈண்டுத் தாம் செய்த விசேஷங்களைப் போஷித்துக்கொண்டு பாரிஜாத ஸ்தலத்தி (திருக் களரி)ல் வசிக்கின்றனர். 15

கலி 5011 வருஷம், பூர்ணமாகும்போது வீரசேகரருக்கு 63 வருஷம பூர்ணம் ஆயிற்று. மடத்தினைப் பாலித்தது 30 வருஷமாம். 16

அவர்களது ஆஞ்ஞையினல் அபிஷேகம் செய்யப்பட்டு, அவர்களது கருணையினல் புருஷார்த்தத்தினை அடைந்து, அவர்களுக்குச் சமானமான குண முடைய அண்ணுமலை ஞாந தேசிகர் இந்த மடத்தில் நீணுள் ஜீவித்திருக்குக. 17

திருநெல்வேலி ஜில்லா, அரவன் குளம் சமர புங்கவ சாஸ்திரிகள் சிஷ்யர், சுப்பிரமணிய சாஸ்திரிகளியற்றிய ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம் சமாப்தம்.

---



ஓம்.

குருப்யோ நம:



திருக்களர்

ஸ்ரீ

# வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்

# புராணம்.

(திருக் களர் ஆண்டவர் சரித்திர வசநம்.)



## பாயிரம்.

### வலம்புரி விநாயகர் துதி.

கோவளி தீகீர் பூமி குலவுயி ரிரவி சோமன்
மூவறு மீது மாகித் தனித்துறு மரற்கு மூறு
வீவதி லேர்த லாகி யெழிற்றிருக் களரில் வாழு
மாவதி ஞா நத்தார் வலம்புரிக் களிறென் வீடே.

### பாரிஜாத வநேசர் துதி.

நேரி னன்மறை முடிவது நிகழ்த்துதற் கரிதாய்
மாரி போன்மநங் கசிபவர் மநத்தினுக் கெளிதா
யாரி யர்தொரு வன்பினி லடைந்தவர்க் கருளும்
பாரி சாதவ நேசனின் பதமலர் பணிவாம்.

### சுப்பிரமணியர் துதி.

சிவமெனுஞ் சத்தினுந் தேவியாஞ் சித்தினும்
பவமுறப் புத்திரப் பான்மையி லுதித்திடுந்
தவமலி தத்துவத் தனிமுதல் வத்துவா
மவமறு கந்தனி னடிமலர்ப் போற்றுவாம்.

### அமுதவல்லி யம்மை துதி.

தனையுணர்ந் தமிர்த மான தலைவருந் தாணி யாவும்
முனையுதித் துதித்துத் தேயு முத்தொழி லதுவு மற்றுந்
தினையள வதுஞ்ச லிக்கா திவள்பிரிந் திடினென் றேத்து
மனையெனு மமுத வல்லி யடியிணை யகத்துள் வைப்பாம்.

### துர்வாச முநிவர் துதி.

பத்துரு வெடுத்துக் காக்கும் பரமற்கும் பவித்துப் பாரில்
வித்தக ரன்றி யாரும் விலக்கினும் விடாத பத்தின்
மெத்துறு மனையின் கர்ப்ப மேவுதுர் வாச மின்றிச்
சுத்தநன் மலரில் வந்த துர்வாசன் றுணைத்தாள் போற்றி.

### வீர சேகர ஞாந தேசிகர் துதி.

பார மாகிய பவக்கடற் புணையெனப் பணிவார்க்
கீர மார்பனி யிருவினைக் கிரவியா யெவர்க்குந்
தூர மாமெனு முத்தியின் சொருபமு மாகும்
வீர சேகரன் விரைமலர்ப் பாதமென் வீடே.

### அவை யடக்கம்.

குற்ற மற்றவர் குற்ற மேகொள்ளார்
குற்ற முற்றவர் குற்ற மேகொள்வார்
பெற்ற சற்குருப் பெருமை யாமிதிற்
சுற்ற பெற்றியைக் கருத லேதுக்கே.

---

ஓம்.
பரம குருப்யோ நம:

# திருக் கள ராண்டவர் என்னும்
# வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்
# புராணம்.

## முதலாவது—பால காண்டம்.

---

### 1-வது அத்தியாயம் — நாட்டு விசேஷம்.

இந்திரனு லேவப்பட்ட மேகங்கள் சென்று தண் கட னீரை மொண்டு மாயோன் வடிவாகிய வையகத்தினது உந்திக் கமலம் போன்ற தென் னுடாகிய மேற் பொகுட்டின் மேல் வசிக்கும் நான் முக னென்னும் அகத்திய மா முநிவர் தமி ழாகிய வேத வாணியுடன் வாழும் பொதிகாசலத்தின்கண் சூழ்ந்து படிந்து, ஆகாயக் கங்கை யால் அமரர்க ளாட்டு மா னபிடேக மொப்ப மழையைப் பொழிய அப் பொதிகை மலையி னுச்சியினின்று மிழிதரு மருவி நீரானது பரமசிவனது சடாமகுடத்தினின்று மிழிதருங் கங்கையை யொத்து வழிந்து வந்து ஆருய்ப் பெருகி நாட்டின்கணுள்ள ஏரி குளம் வாய்க்கால்களி னிறைந்து அதன் கரைகளி லுள்ள தெங்கு கமுகு வாழை கரும்பு முதலியவற்றைச் செவிலித் தாய் போன்று சிறிதும் வாடாது வளர்த்து விளை நிலங்களிற் பாய, உழவர்கள் அன்பு நீர் பாய்ச்சி யரு ளாநந்தம் விளைவிக்கு மடியவர்களைப் போன்று தருணம் பார்த்துத் தண் டரை திருத்திக் கவிகட் கொப்பக் கவித்திறப் பண் களைப் பாடிக் கொண்டு உழுது நெற் பயிர் நட்டு முற்றிய தருணம் உலகத்தை யாக்கிக் காத் தழிக்கும் ஒருவனைப் போன்று அறுத்துக்

களத்திட் டடித்துப் பல வகை நெற்களை மலை மலையாகக் குவிக்
கவும், உளுந்து துவரை பயிறு தினை சோளம் முதலிய நவ தானி
யங்களையும் குவியல் குவியலாகக் குவித்து வைக்கவும், நாட்டி லுள்ள
நன் னடைச் சீல மிகுந்த வின்னருளாளர்கள் அவைகளை அதிதி
கட்கும், அருந் துறவிகட்கும், தொண்டர்கட்கும், வறியார்க்கும்,
உண்டியும், உடையும், உறை விடமும், அளிப்பது முதலிய அற
நெறியிற் செல விட்டு, அர னெறியை வளர்ப்பதுடன் அரச நெறியை
யுந் தழுவி, இல்லற நெறியை நடாத்தி நல் லறம் வளர்க்கும் நன்மை
யும், எவ்வகை யிடையூறுக ளெய்தினும் சிவ பக்தி முதலிய சைவப்
பொலிவும், வைதிகப் பொலிவுஞ் சிறிதேனுங் குன்றாது காப்பவர்களை
யுடைய தாய்ப் பாண்டி நா டெனப் பெரியோர் புகழும் நா டொன்று
பூவுலகில் இருக்கின்றது. அந் நாடானது பண்டைய வட மொழிக்
கும், தண் டமிழ்க்கும் நிலைக் களமாம். அப் பாண்டி நாடே பரசிவ
னுக் கோர் பழம் பதியாம். அந் நாட்டின் சிறப்பைப் பொன் னாட்டி
லுள்ள பிருகற் பதியாலு மொரு சிறிதுஞ் சொல்ல முடியாது.

---

## 2-வது அத்தியாயம்— நகர விசேஷம்.

மங்கல மென்னும் பிணி யின்மை, செல்வம், இன்பம், ஏமம்,
விளைவு ஆகிய வைந் தணிகளு மகலாது தழைத்து வளர்வதும், திரு
வாலவாயிலைச் சிரசாகவும், தேவி கோட்டை கானாடு காத்தான்
என்னும் பதிகளைத் திருக் கரங்களாகவும், கோவிலூரை யிதயமாக
வும், காரைப் பதியை வயிறாகவும், சாக்கிக் கோட்டையை மூலாதார
மாகவும், பள்ளத்தூரைப் பாதமாகவும் உடையதாம் நகரமாகிய
காமதேநு.

1 அமராவதி புதூர். 2 அரண் மனை சிறு வயல். 3 அரி மளம்.
4 அரியக் குடி. 5 அலவாக் கோட்டை. 6 (கோட்டை யூர்) அழகா
புரி. 7 (கொல்லன் குடி) அழகா புரி. 8 ஆத்தன் குடி. 9 (ஆத்
திக் காடு) தெற் கூர். 10 ஆவினிப் பட்டி. 11 உய்யக் கொண்



டான் சிறு வயல். 12 உலகன் பட்டி. 13 ஒக் கூர். 14 கடியா
பட்டி. 15 கண்டர் மாணிக்கம். 16 கண்டவ ராயன் பட்டி. 17
கண்ட னூர். 18 கருங் குளம். 19 கல்லல். 20 கல்லுப் பட்டி.
21 காரைக் குடி. 22 காளையார் மங்கலம். 23 கானாடு காத்தான்.
24 கீழச் சிவற் பட்டி. 25 குருவி கொண்டான் பட்டி. 26 கூழி
பிறை. 27 கொத்த மங்கலம். 28 கொப்பனா பட்டி. 29 கோட்
டை யூர். 30 கோனா பட்டு. 31 சக்கந்தி. 32 சண்முக நாத
புரம். (ஆரா வயல்) 33 சிறார் வயல். 34 சிறு கூடற் பட்டி. 35
செம்பொ னூர். 36 செயங் கொண்ட புரம். 37 செவ் வூர். 38
சொக்க நாத புரம். 39 சொக்க லிங்க புரம். 40 சொர்ண நாத
புரம். 41 சோழ புரம். 42 தேவி கோட்டை. 43 (தேனி பட்டி)
கழனி வாசல். 44 நச்சாந்து பட்டி. 45 நட ராஜ புரம். 46 நாச்சி
யார் புரம். 47 நாட்டரசன் கோட்டை. 48 நெற் குப்பை. 49
நேமத்தான் பட்டி. 50 பட்ட மங்கலம். 51 பரியாமிருத பட்டி.
52 பலவான் குடி. 53 பள்ளத் தூர். 54 பனங் குடி. 55 பனை
யப் பட்டி. 56 பாக னேரி. 57 பிள்ளையார் பட்டி. 58 புதுப்
பட்டி. 59 புது வயல். 60 சொக்க லிங்கம் புத்தூர். 61 பூங் குடி.
62 பூலாங் குரிச்சி. 63 பொன் னமராவதி. 64 மகிபாலன் பட்டி.
65 மா நகரி. 66 மிதிலைப் பட்டி. 67 (ஆத்தன் குடி) முத்துப்
பட்டணம். 68 மேலைச் சிவப் பட்டி. 69 ராங்கியம். 70 ராய
வரம். 71 (கொத்த மங்கலம்) லக்ஷ்மி புரம். 72 (நெய்க் கோணம்)
லக்ஷ்மி புரம். 73 வெற்றி யூர். 74 வேந்தன் பட்டி. 75 வேகுப்
பட்டி. (76 முதல் 96 வரை 21 ஊர்ப் பெயர் தெரிய வில்லை.) என்
னும் தொண்ணூற் றாறு சிற் றூர்களைத் தத்துவமாகவு முடையது.

இலக்குமிக் கொரு வெழிற் றாமரை மலராகவும், வித்தை
வாணிக் கொரு வெண் டாமரைப் பூவாகவும், ஞான மாதிற் கோர் நல்
லியோக பீடமாகவும், தரும மெலாம் விளையுந் தண் பூமியாகவும், அரு
ளுதிப்பதற் கோ ரன்னையாகவும், அன் புதிப்பதற் கோ ராதாரமா
கவும், நல மெல்லாவற்றிற்கு முறை விடமாகவும் விளங்குவதாம்,

மற்றுந் தநதன் தநிகன் என்னும் குபேரனை யொத்த கோடி மா தந வைசிய குலங்கள் குலவி வாழுங் குபேர பட்டணம் போன்றது மாயுள்ள வைசிய மா நகரமோ ஒன்பது வகைக் குல மரபுக் கோவில் களையும் கோட்டை குடி வயல் என்பது முதலிய அரசர்களின் அங் கங்களையு முடையதாம். இத்தகைப் பெருமை வாய்ந்த பொது நகரத்தின்கண் மதுரை மா நகருக்குக் கீழ்பாலும், திருப் பெருந் துறைக்கு மேல்பாலும், திரு மெய்யத்திற்குத் தென்பாலும், கண்ட தேவிக்கு வடபாலும், சாக்கிக் கோட்டை யென்னும் அளகை க்ஷேத் திரத்திற் கருகி லுள்ளது மாய புது வயல் என்னும் ஒரு வைசிய நகர முண்டு. அங் குள்ள வயல்கள் அவ்வூர் வைசியர்களின் அந்ந தாந பலத்தால் திரு வள்ளுவர் திரு வாக்கின் படி வித் தில்லாமலே விளையுந் தன்மையனவா மாதலின், புதுமையை யுடைய வயல் புது வயல் என அவ்வூர்க்குச் சிறப்புப் பெய ராயிற்று. அங் குள்ள நெற் பயிர்களோ கரும்பை யொத்த, கரும்புகளோ தெங்கை யொத்த, பூஞ் சோலைகளோ மெய்ஞ் ஞாநி போன்று மிகுந்த தன்மையை யுண் டாக்கு வனவாம். விதியிற் கற்ற கவியின் கல்வியைப் போல் ஊரார்க் குதவும் நற் றண்ணீர் நிறைந்த வூருணிகள் பல நற் கவியின் நூல் போல் பற் பல துறைகளுடன் விளங்கும். வீதிகளில் மெய்யடியார் கூட்டத்தின் உய்யு நெறி யுபதேச முழக்கும், அருந் தாந மேற்று வக மிகக் களித்ததனால் அன்போடு சொல்லும் அந்தணர்களின் ஆசீர் வாத முழக்கும், பசியான் மெலிந்த பலவகைச் சநங்கள் அறு சுவை யுடன் நால் வகை யுண்டி யுண்டு அங்கம் பூரித்துப் பொங்கு மாநந் தத்துடன் அந்ந மிட்டாரை வாழ்த்துஞ் சொன் னய முழக்கும், வறுமையாற் பலர்கள் வாயினின் றேற்கும் இரக்க விரத வின்னிசை முழக்கும், தந வைசியச் செல்வர்கள் முத்துக்கள் நவ ரத்திந முதலியவற்றைக் குவியற் குவியலாய் வைத்துக் கொண்டு கொடுத்து வாங்குவதா லுண்டாகும் விலகார பத முழக்கும் கட லொலியினு மிகுதியாய் முழங்கும்.



இப் புது வயல் நகரத்தின்கண் இரத்திநத் தூண்க ணிறுத்திப் பொற் போதிகை யேற்றி, வெள்ளிப் பலகைகள் சாத்திச், செப்போடு களான் மூடி, மரகத வாயில் வைத்து, நவரத்திநப் பலகணிக ளமைத் துப் படிகப் புறந் திண்ணை முதலிய கட்டித் தநதன் மாளிகையினும் அணிகண் மிகுந்த தந வைசியர்களின் மாளிகைகள் பற் பல விளங்கும்.

அம் மாளிகைகளில் வெள்ளிக் கலங்களும், தங்கக் கிண்ணங் களும், வயிரப் பேலாக்களும் நிறைந்து மங்கலம் பொங்கி யிலகும்.

அதி லுள்ள வைசிய மாதர்கள் வைரப் பூண்க ணிறைய வணிந் ததால் வைரம்மா ளென்றும், முத்துப் பூண்கண் முழுது மணிந்த தால் முத்தம்மாள் என்றுஞ் சிறப்புப் பெயர்கள் பெற்றவர்கள்.

வைசியச் செல்வர்கள், அணிவன வெல்லாம் நவரத்ந மிழைத்த பொற் பூண்கள், புனைவன வெல்லாம் புனுகு சவ்வாது கலந்த நறுஞ் சந்தநாதிகள், உடுப்பன வெல்லாம் பீதாம்பர வுடைகள், இத்தன்மை வாய்ந்த அவ் வைசியர்க ளியாவரும் சிவ னடியார் திரு நோக் கறிந்து சேவை செய்யுந் திற முடையார்கள்; தவ வேடங் கண்டு தாழ்ந்து வணங்குந் தன்மை யுடையார்கள்; அறங்களைக் கொண்டு வாவி போற் போற்று மறிவாளிகள்; சிவ பக்தியதனிற் றிண்ணிய மந துடையார்கள்; ஆலய வழிபாட்டி லளவிலா வன் புடையார்கள்; சிவ புராணங் கேட்பதிற் றெவிட்டாதவர்கள்; சைவப் பொலிவோடு தழைத்து வாழ்பவர்கள்.

மற்றும், முன் பணிவார்க் கிரங்கி முன் வினை தீர்த்துக் கைலாச மளிக்குங் கணேசப் பெருமா னாலயமுங் கண் மணி போல் விளங்கப் பெற்றது. வேத பாட சாலைகளும், ஆகம பாட சாலைகளும், தமிழ் மறைப் பாட சாலைகளும், கல்விச் சாலைகளும், சத்திரங்களும், திரு வாசல்களும், வீதி வீதிக டோறும் விளங்கப் பெற்றது. அற முப்பத் திரண்டும் அணு வளவுங் குறையாது அநுதிநமு நடந் தேறிவாய்

பெற்றது. இப் புதுவயல் நகரம் இந்திர னகரினு மிகு சுந்தர முடையதாம். இதன் சிறப்பை எக் கவிகளானுந் தொக் கேது மின்றி வியந் தோதுவதூஉம் எளி தாங் கொல்லோ?

---

## 3-வது அத்தியாயம்.

### அருணாசலஞ் செட்டியார் திரு மணமும் இல்லற வாழ்க்கையும்.

இத் தன்மைய வான வெண் ணிலாச் சிறப்பு வாய்ந்த அந்தப் புது வயல் என்னுந் தந வைசிய நகரின்கண் நற் குண நன் னடை சிவ பக்தி அடியார் பக்திகளிற் சிறந்தவரும், இலுப்பைக் குடிக் கோவிலைச் சேர்ந்தவரும் ஆகிய வெள்ளையன் செட்டியார் என்னும் ஒரு தந வைசிய ரிருந்தார். அவர் வள்ளி யம்மை என்னுந் தமது நன் மனையாளோடு இல்லற தருமத்தை யினிது நடத்தி யின்புற்று வாழ்ந்து வந்தனர். அவர்க்கு முற் பல பிறப்பிற் செய்த நற் பயனாக உத்தம தினத்தில் அவரது பத்தினியின் வயிற்றினின்றும் மேனி யழகும், விளங்கிய நிறமும் உள்ள அரிய தோ ராண் மக வுதித்தது. அக் குழந்தையினுடைய சிறப்பைக் கண்ட தந்தை தாய் முதலிய பலர்களும் அருணாசலம் எனத் திரு நாமஞ் சூட்டினர். அக் குழந் தையு மந் நாமத்திற் கியையக் கல்வி யறி வொழுக்கங்களிற் சிறந்து நாட்கு நாள் இளம் பிறை போல் வளர்ந்து வந்தது. பின்னர், தன் குல மரபுப்படி பொருடேடும் வழியிற் புத்தி மிக்குளனாய் மிகு பொருட் டேடிச் சுக முட னிருக்கும் போது அவர்க்குத் தருணப் பருவம் வந்தது கண்ட தாய் தந்தையர்களுஞ், சுற்றத்தார்களும், திரு மணஞ் செய்விக்கச் சிந்தையி லுன்னி, இலக்குமியைப் போன்ற பொலிவும், இந்திராணியைப் போன்ற சுந்தரமும், அருந்ததியைப் போன்ற திருந்திய கற்பும், அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு முதலிய பெண்களின் நற் குணங்களும் நல் லொழுக்கங்களும் அமைந் துள்ள உமையாள் என்னுந் திரு நாம முடைய ஒரு வைசியக் கந்நிகையைத் தேடித் தன் குல மரபுப் படி விவாகத்தின் முன் செய்ய வேண்டிய



கிரியைகளையுஞ் செய்து, அந்தணர் வணிகர்கள் ஆற்றுங் கர்மங் களையு முடித்துக், கார்த்திகைப் புதுமை முதலிய மரபு வழக் கங்களையு நடாத்தி, அந்ந தாநம் சொர்ண தாநம் வஸ்திர தாந முதலிய பலவகைத் தாநங்களையும் வழங்கி, பல வாத்தியங்களு முழங்கக், காந்தனுக்கு மகட்குங் கணக்கிலாப் பொற் பூண்க ளணிந்து, பட் டாடைக ளுடுத்தி, முத்து மாலை முதலியன விட்டு, பல வித வலங்காரத்துட னலங்கரித்து, மண வரையில் தம்பதிகளை யுட்காருவித்துப் பஞ்ச கவ்வியத்தால் அங்க முதலியன சுத்தி செய்து, ஹோமஞ் செய்து, காந்தன் கையில் கந்நிகையை யீந்து, நீர் வார்த்து, நெற் பொரி வீசி, பற் பலர் அட்சதையைப் பாங்குடன் போட, நல்ல முகூர்த்தத்தில் கந்நிகைக்கு மாங்கல்ய தாரணஞ் செய்து, ஆன்றோர்க ளனைவரு மாசி மொழி கூறித் தம்பதிகளை வாழ்த்தி மகிழத் திருமண முடித்துவித்தனர்.

இவ் வணம் மண முடித்துக் கொண்டு அவ் வருணாசலஞ் செட்டியார் என்னும் வைசிய குலத் திலகரும், தாமு மனைவியுந் தக்க தோ ருயிர் போல் காத லிருவர் கருத் தொத்து வாதரவுட்பட்டு வின்பந் துய்த்து, இல் லறமதனையே நல் லறமாக வெண்ணி, அறு வகைக் கடனையும் அன்போடு கழித்து, உதார முதலிய சற் குணங் களும், சம தமாதி நற் குணங்களும், சிவாலய வழிபாடு முதலிய சிவ பக்தியும், அடியார் பக்தியும், பரோபகாரமும், சீவ காருண்யமும், மற்றும், பல குணங்களு நிறையப் பெற்று, வசிட்ட ரருந்ததி போல் வளம்பட வாழ்ந்து வந்தனர்.

---

## 4-வது அத்தியாயம்.

### மகப் பேறு கருதி வேண்டல்.

இங்ஙனம் பலவகைச் சிறப்புடன் அவ் வருணாசலஞ் செட்டி யாரும் உமை யம்மையாரும் வாழ்ந்து வரு நாள், "நாம் அடைய

வேண்டிய பதி ஞறு வகைப் பேற்றை யடைந்திருந்தும், அப் பேறுக ளெல்லாவற்றினு மேலானதும், புத் என்ற நரகத்தினின்றுங் காப்பதாயு மிருக்கின்ற புத்திரப் பேறென் றின்மையால், எல்லா வித மான நன்மைகளைப் பெற்றும் பெருதவர்களைப் போன்றவர்க ளாயினேம்'' என்று சிந்தித்துக் கொண்டு, காசி முதலிய பல புண் ணிய க்ஷேத்திரங்களை யடைந்து சேவித்தும், கங்கை முதலிய தீர்த் தங்களி லாடியும், தாந வோமாதி கருமங்களைச் செய்தும், பெரியார் வழிபாடு முதலிய தவங்களைச் செய்தும், பல வகை விரதங்களை யநுட்டித்தும் வருவதுடன் அந்தப் புது வயல் என்னும் நகரத்திற் கருகிலுள்ள சாக்கிக் கோட்டை (அழகை) க்ஷேத்திரத்திற்கு நா டோறுந் தம்பதிகளாய்ச் சென்று, அவ் வாலயத்தின்க ணெழுந் தருளி யிருக்கும் வீர சேகரேசப் பெருமானையும், உமையவ ளென்னு மம்பிகையையும், வலம் வரல், அர்ச்சனை செய்வித்தல், அபிடேகஞ் செய்வித்தல், நைவேத்தியத்திற் கீதல், ஆராதனை செய் வித்தன் முதலிய பல வகையாக வழிபட்டுக் கொண்டு ஏற்றிப் போற்றிப் பணிந்து, ''எம் பெருமானே! அகில வுயிர்கட்கு மோர் தந்தையே! ஆக்கி யளித்துத் துடைக்கும் அண்ணலே! அறிவிலா மக்கள் பலர்களை யீவதினும், அறிவு சால் புத்திர ெனருவன் எங்கட் களித்து, எங்கள் பிதிர்க்களையும் குலங்களையும் ஈடேற்றல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டு வந்தனர்.

---

## 5-வது அத்தியாயம்.

### உமை அம்மையார் கருப்பவதி யாதல்.

இவ் வண்ண மாக்த் தம்பதிகள் நாடோறும் அந்த அளகை க்ஷேத்திரத்தின் சுவாமியையும், அம்பாளையும், நியதத்துடனுஞ் சுத்தி யுடனும் பிரார்த்தித்துக் கொண்டு வருங்கால், அகிலத்தை யீன்ற வுமாபதியானவர், சகல தமிழ் மக்கட்கும் வேத நெறியையும், சைவத் துறையையும் எளிதி லுணர்த்தி, வேதாந்த முடிவாகிய அத் வைத



அமல ஞாநத்தை யடையச் செய்து, பந்த நீக்கிப், பரமாநுக்கிரகஞ் செய்தற் பொருட்டுப், பரம கருணை சுரந்து, ''அருண் மேனி கொண்டு அகிலத்தை யடைதல் இக் காலம் பொருந்தா'' தென்று கருதியும், ''வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும், நூறுநூ றுயிர மியல்பின தாகி, யேறுடை யீசனிப் புவனியை யுய்யக், கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி'' என்னுந் திரு மறை வாக் கிற் கியையவும், ''அவனே யுண்டாக்கி யவனே புகுந்தனன், மாயை களினுற் பல வடி வெடுப்பன்'' என்பது முதலிய அநாதி மறையி னருமை யுரையை யொத்தும், கருவாயும், கருவி னுருவாயும், உரு வின்றியவாயும், அறிவி னெளியாயும், மற்று, மெல்லாமா யாகிய பர மேசுரனே வைசிய நாடு செய்த பெருந் தவத்தானும், தமி ழுலகஞ் செய்த இதப் பெருக்கானும், கருவாகி வந் தருளி யுலகக் கருவை யொழித் தருளவும், உருவாகி வந் தருளி யுருவிலாப் பரமாந்மாவை யுலகத்தார்கட் கறிவுறுத்தி யருளவும், அவ்வவ் வுருவத்தார்க்கு அவ் வவ் வுருவத்துடனே வந் தருள் செய்யின், அவரவர்க ளுட்படுவார்க ளென்னும் பெருங் கருணைத் திறத்தானும், மானைக் காட்டி மானைப் பிடிப்பது போன்று மாநுடச் சட்டை சாத்தி மாநுடர்களை யுய்வித் தற்குத் திருவுள மிரங்கி, யருள் வலியதனல், உல கெலா மீன்ற வுண்மைத் தாயாகிய வுமை யம்மையார் போன்ற, ''உமையாள்'' என்னும் அந்த அருணசலஞ் செட்டியாரின் மனைவியாரின் திரு வயிற்றில், சிப்பியி னீர்த் துளி போன்றும், சரவணப் பொய்கையிற் றீப் பொறி போன்றும், பிலவங்க வருடம் கார்த்திகைத் திங்களில் அருட் கலா வடிவத்தால் கருப் பையிற் றங்கி யருளினர். அவ் வம்மையாரும் நீர்த் துளியையுந் தீப் பொறியையுங் கருவாகக் கொண்ட சிப்பியையுஞ், சரவணப் பொய்கையையும் போன்று, தெய் வப் பொலிவுடன் மெய் வருத்த மின்றிப் பற் பல நற் சகுநங்களுடன் அக் கருவைப் பெற்று, ஆரியாம்பாள் சங்கா கருவைப் பெற்று விளங் கிய தொப்ப விளங்கி வந்தனர். அது முதற் கொண்டு வந் நாட்டிற் கெல்லாம் மங்கல மிருந்தது. மாத மும் மாரி பொழிந்தது. பசுக்கள்

பெருகின. அந்தணர்க டழைத்தனர். சைவஞ் செழித்தது. வைதிகம் வளர்ந்தது. அரசன் செங்கோ லாட்சியானது. பாவங் குறைந்து புண்ணிய மேலிட்டது. அக விலை குறைந்து பொரு ணனி மலிந்தது. மற்றும், பல வளங்கள் இப் புவிக்க ணுண்டாயின. எல்லாம் வல்ல விறைவனே அல்லன் மா ஞாலங் காக்கக், கரு வுருவாயின் உண்டாகா நலமு மொன் றுண்டாமோ? தன் னருள் வெளிக் குள்ளே யகிலாண்ட கோடி யெல்லாந் தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத் திருக்குந் தனிப் பெருங் கருணை யருட் பெரும் வலியை யின்ன தென்று கூறற் காமோ?

---

## 6-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் அவதாரம்.

இவ் வணம் அவ் வம்மையாரின் திவ்ய கர்ப்பம் எவ் வித விடையூறு மின்றிப், பத்துத் திங்களும் அத்தனின் னருளால் வளர்ந்து பத்தாந் திங்கள் முற்றிய போது பகவதி யம்மையார் வயிற்றில் திரு ஞாந சம்பந்தர் திரு வவதாரம் போலும், செகமது போற்றும் கோசலை வயிற்றில் இராம பிரா னவதரித்தது போலும், ஆரியாம் பாள் வயிற்றில் சங்கர பகவன் அவதரித்தாற் போலும், கலி யப்தம் நா லாயிரத்துத் தொள் ளாயிரத்து நாற்பத் தொன்பதுக்குச் (௪௲௯௱௪௰௯) சரியான கீலக வருடம் ஆவணி மாதம் பன்னிரண்டாந் தேதி அமர பக்ஷம் வெள்ளி வாரம் புநர் பூச நக்ஷத்திரம் சித்த யோகம் தெக்ஷண அயநம் கூடிய சுப திநத்தில் ஆண் குழந்தை வடிவமாய் அருட் டிரு மேனி கொண்டு வம்பிகாபதி யாகிய அளகை வீர சேக ரேசப் பெருமானே, உமையாள் என்னும் அவ் வைசிய மாதின் வயிற்றினின்றும் அவதார மாகி யருளினர். அத்தகைய வரு ளவதார விசேடத்தால் அவ் வம்மையார்க்குப் புத்திரோத்பத்தியா லுண்டாகும் பெருந் துன்பங்க ளணுகாததுடன், உள்ளக் களிப்புட னுணர்வு மயங்காது, முக மலர்ச்சியு மிருந்தது. உலக வேதனை மாற்ற வந்த



வுத்தமாவதாரத்திற்கு, அன்னை வேதனையை யகற்ற லரியதாமோ? மற்றும், தமது அன்னைக்குக் கருப்பாசயப் பையிற் கட் டுண்டன் முதலிய பிறவி வேதனை நீக்க வந்த தத்துவ ஞாநச் செல்வன், தமது பிறப்பால் பீடை யுண்டாக்குவன் கொல்லோ? "பெண் பிறவி மாறி யீடேறுவது மக்களின் தத்துவ ஞாந பதத்தானே" என்பது பெரு மறை யுரையா மாதலின், மற்றும், "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்" என்றமையின் சான்றோ னாகிய மகவைப் பெறுங் கால் தாய்க்குச் சிறிது வுவத்தலு மிருக்கு மென்பதும் கொள்ளற்பாலதே.

இங்ஙனம் நமது இறைவன் அவதார காலத்தில் ஆன்றோர்களகக் கமல மலர்ந்தன; சான்றோர்கள் தத்துவ ஞாநங்கள் தழைத்தன; அடியார் கணங்களி னந்தக் கரணங்க ளமல மாயின; அந்நாட்டி லுள்ளார்க்கு வடங்காக் களிப் புண்டாயின; அத்வைத மரபார்க்கு மெய்ப் பதம் விளங்கியது; சைவ சமயந் தழைத்து நின்றது. மற்றும், பகை யுயிர்க ளெலாந் தம்முட் பகை யொழிந்து குலாவின; மக்கட் கெல்லாந் துக்க மில்லா திருந்தது; கோக் குலங்க ளெல்லாம் நீக்க மறப் பால் பொழிந்தன. மற்றும், பல மங்கலச் செயல்கள் ஆங் காங்கு உண்டாயின. அரு ளவதார காலத்தி லித் தோற்றங்க ளருமைத் தாமோ? மற்று, மத்தருண முண்டான, மங்கல முண்டாக்கும் நன்மைத் தோற்றங்களை யளவிட முடியா தென்ப.

---

## 7-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளின்
### சாதகக் குறிப்பும், சாத சருமமும்.

இத் தன்மையாக பல வைபவங்களின் நிமித்த மாகிய நமது இறையின் மெய் யவதாரங் கேட்ட தந்தையார், கேட்ட மாத்திரத் தானே முக மலர்ந்து, அகங் குளிர்ந்து, அடங்கா வாநந்தக் கடலி லாழ்ந்து, பரம தயாளு வென்னும் உமாபதி யாகிய பரமேசுரனது காருண்யத்தை யெண்ணிச் சிவனைப் போற்றிச் சிந்தையி னுள்ளே

திரு வருளைப் பேணி, "சிவ பெருமானே! என்னையும் என் குலத்தை யும் எனது நாட்டையும் இன்று தான் ஈடேற்றி யாண்டருளினீர். தேவரீரது கருணை யிருந்தவா றென்னே? என்னே?" என்று வியப் புற்றுப் பரமேசுரனை வாழ்த்தி வணங்கிப் புண்ணிய தீர்த்த மாடிப் பூசனை புரிந்து விதிப்படி சாத கருமங்களை முடித்து, விதை வழங் கல், சர்க்கரை வழங்கன் முதலிய பல வகைத் தாநங்க ளீந்து, ஆன்ேறர் பலர்களி ஞசீர்வாதம் பெற்றுத் திருப்தி யடைந்து, தமது சுற்றத்தார்க ளுடன் சோதிட வல்லுநர்களைக் கொண்டு சாதகங் கணித்துக் கந்நியா லக்கிநத்தில், லக்கிநத்தில் இராகு விருக்க, ஏழா மிடத்தி லிருந்து கேது நோக்க, ஆறா மிடத்திற் சநி யிருக்க, பத்தா மிடத்திற் சந்திரனும், பதி ஞென்ற மிடத்திற் குருவும், பன்னிரண் டா மிடத்திற் சூரியன் செவ்வாய் புதன் சுக்கிரன் இருக்க,அமைந்து தவ ராஜ ஞாந மோக்ஷ சம்பத்தை யுடைய தெனக் கேட்டு இத் தகைய தமது அவதார மகவின் சாதக மானது அளவிலாப் பெரு மை வாய்ந்த மகா புருஷ சாதக மென் றுணர்ந்து "யான் முன்னைப் பிறவிகளிற் செய்த புண்ணிய பரிபாக விசேடத்தாலும், சாக்கிக் கோட்டை வீரேசனது அருளினலும், எமது பாரியாளின் அதிஷ்ட வசத்தானும் இத்தகைய மகற்குத் தந்தை யானேன்" என்று தம்மை யறியாது பெருமிதங் கொண்டு, அடங்காத வாநந்தக் கடலி லாழ்ந்தனர். மற்றையோர்களும், பேராநந்தத்துடன் பெரு மகிழ்ச்சி யுற்று, வியப் படைந்து, அவ் வருணைசலஞ் செட்டியா ரையும், உமையா ளம்மையாரையும், "நீங்களே தந்தியர்கள், நீங்களே பாக்கியவான்கள்" என வாழ்த்தினர்கள்.

---

## 8-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் வடிவ வியப்பு.

இவ் வணம் ஈசுர கலாவதார மாகிய அம் மகவிற்கு, சிவ லிங்கம் போன்ற சிரசும், உரோம நிமிர்ந் துள்ள வுந்தப் புருவங்களும்,



இன்ன நீர்த் தருளுஞ் செந் நிற விழிகளும், குவிந்து மலர்ந்த மடற் போன்ற செவிகளும், கூரிய நீண்ட மூக்கும், பவளக் கொடி போன்ற அதரமும், புன் னகை வாயும்,உருண்டையா யழகிய மலர்ந்த முகமும், திரண் டெழுந்து கதலிப் பூவை யொத்த கழுத்தும், படர்ந் தகன்ற மார்பும், திரண்டு நீண்ட கரங்களும், அங்கத்திற் கொத்த வயிறும், அழகா யமைந்த கால்களும், இராமன் பாதம் போன்ற விங்கிதப் பாதங்களும், நீ ருண்ட மேக மொத்த நீ ளுடற் காந்தியும், மற்றும், சிவ கலை தாங்கி யவதரித்த உத்தம புருடர்க் குள்ள குறிக ளனைத்தும் பொருந்திச் செயற் கரிய திவ்யச் செயல் களில் மிகுந்த வீரத் தன்மை யிருக்குந் திருக் குறிப்பைக் காட்டிக் கொண்டு விளங்குதலினனும், வீர சேகரப் பெருமா னுகிய சிவ பெருமானின் மெய் யரு ளுருவ மேம்பாட்டுப் பொலிவு விளங்கிக் கிடத்தலினனும், தந்தை தாய் முதலிய பல்லோர்களுங் கூடி யூகித்து, "வீர சேகரன்" எனக் காரணத் திரு நாம மிட்டனர். உலக பாலநம், சமய பாலநம், லௌகிக வைதிக நன் னெறிப் பாலந முதலியவைகளைப் பாலநஞ் செய்ய வவதரித்த வப் பாலகனும், இள மதி போன்று வளர்ந்து வந்து, சிவன் சிவை யொத்த திருப் பெயர்த் தரித்த தந்தை தாயர்க ளிடத்தில் சிவ கலையாய்த் தோன்றின மையின் தெய்வ சேனா வீர னுகிய முருகன் போன்று அரு ளறிவு விளங்கப் பொலி வோங்கி வந்தனன்.

---

## 9-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளின் சௌள கருமமும், தந்தையார் வியோகமும்.

இங்ஙனம் முக்க ணிறைவனே இக் கலியுகத்தில் தக்க நன்மை கள் செய்து, துக்க சீவர்களைக் காக்க வவதாரமாகிய அக் குழந் தைக்குச் சிவ னுடைய வருள் தெளிவா யிருத்தலின், அங்க வளர்ச்சியுடன் அறிவு வழகு முதலிய வரிய குணங்களும், அதி

னின்று மதிக மாகவே வளர்ந்து வந்தன. அது பற்றியே அதற்கு முதலாவ தாண்டு நிறையவும், அகர முதலிய வெழுத்துக்களை யுச்சரிப்பதோடு தமிழ் மொழிகளையும் நன்கு பேசத் தொடங்கு மாற்றலும் வந்துவிட்டது. அதைக் கண்ட பலர்களும் அதி வியப்புற்று "இக் குழந்தை முக்கண னவதாரமே யன்றி வே றில்லை" என்று நிச்சயித்துப் பய பக்தியுடன் அருமை பாராட்டி வருவதோடு, அவ் வூரி லுள்ள பலர்கட்கு மிவ்வுண்மையை யுணர்த்திக் கொண்டாடச் செய்தனர்.

பின்னர், அச் சிவாவதாரச் செல்வ ஞகிய அந்த வீரக் குழந்தைக்கு மூன்ருவ தாண்டு முற்றியவுடன், தந்தை தாய் முதலிய பந்து ஜநங்கள் கூடித் தந வைசிய குல மரபுப்படி சுப முகூர்த்தத்தில் காப்புக் கட்டுப் புதுமை (சௌள கரும) முதலியவைகளை விதிப்படி செய்து விழா பல கொண் டாடினர்கள். பிறகு, அக் குழந்தையைப் பெற்ற பெருந் தகையா ராகிய அருணசலஞ் செட்டியார் என்னும் வைசியோத்தமர் சில நாள் வாழ்ந் திருந்து சிவ கதி யடைந்தனர்.

---

## 10-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் வித்யாரம்பம்.

அதன் பின்னர், சர்வக்ஞ ஞகிய பரமேசுர னருட் கலா வவதாரமாகிய வக் குழந்தைக்கு, ஐந்தாவ தாண்டு வணுகிய போதே "உமையாள்" என்னு முத்தமத் தாயார் "இளமையிற் கல்" என்னு மினிய வுரையைக் கருதி, எழுத் தோதுவிப்பதற் கெண்ணிப் பந்து வர்க்கங்களைப் பரிவுடன் கூட்டித் தமது மரபுப்படி பல வைபவங்களுடன் விழாக் கொண்டாடிச் சுப மாகிய வாரம் யோகம் கரணம் திதி முதலிய கூடிய நற் பொழுதில் சேது உபாத்தியாயரைக் கொண்டு விதிப்படி அக்ஷராப்பியாசஞ் செய்வித்து ஆசிரியர் முதலிய பல பெரியோர்க்கும், அந்தணர்க்கும், மற்றும், பலர்க்கும், தட்சணை



வஸ்திரம் தாம்பூலம் பழ முதலிய தாநங்க ளீந்து, அவர்களால் அக் குழந்தைக்கு ஆசீர்வாதஞ் செய்வித்துத் தாமும் பெற்றுச் சந்தோஷத்துடன் சுற்றத்தார்க்கு விருந்து முதலிய செய்து மகிழ்ந் திருந்தனர். அக் குழந்தையும் தாம் சர்வக்ஞ ஞகிய பரமேசுர அவதாரமாதலின், எல்லா முணருஞ் சத்தியானது உள்ளத்தின்க ணிருந்தும் அத்தகைய பரசிவற்கே முருகப் பெருமான் உபதேசித்ததையுங் கண்டு, ஆசிரியர்பா லப்பியாசிப்பது போற் கற்று, உலகத்தார்க்குங் குரு சீட பாவ முணர்த்தி யருளித் தம துண்மை யறிவை வெளிப்படுத்தத் திரு வுளங் கொண்டு, இங்ஙனஞ் செய்விப்பதற் கிசைந்து, உலகத்தி லுள்ள இளையோர்கள் உணர் வுதிக்கக் கற்கு மாறு கற்று, ஆசிரியர் கூறிய வாறு நடந்து கொண்டு, மாணுக்கர்க் குரிய மரபையுந் தழுவிக் கல்வி கற்று வந்தனர். இங்ஙனங் கற்று வரும்போது சிறிதும் வருத்த மின்றிப் பெரிது முயற்சி யின்றி, ஆசிரியர் ஒரு முறை யுரைக்கின் அதை மறவாது மநதுட் கொண்டு, அவர் போதிப்பது ஒரு பங்காகவும், தாம் கற்று வருவது இரண்டு பங்காகவும், கல்வி கற்று வளர்ந்து வரும் புதுமையைக் கண்ட ஆசிரியர் முதலிய பலர்களும், "இக் குழந்தையோ தெய்வக் கூறே! கற்றதை மறு நாள் கருத்துட் கொள்ளு மாறு கல்வி கற்று வருகிறது" என்று வியப்புற்றுக் கல்விச் சாலைச் சிறுவர்கட் கெல்லாந் தலைமைய ளுக்கிக் களிப்பு மிகுந்து, அக் குழந்தையிடத்தில் யாவரும் பக்தி யன்புடன் தெய்வத் தன்மை பாராட்டி வந்தனர்.

---

## 11-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளின் தமிழ்க் கல்வி விருத்தி அடைதல்.

இவ் வண்ண மாக ஆசிரியர் போதிப்பதை அருச்சுநனை நிமித்த மாக வைத்துக் கொண்டு, அம ரொலா மாற்றி வந்த கண்ணபிரானைப் போல நிமித்த மாத்திரமாய்க் கொண்டு, தம தருட் சத்தியால் சர்வ

கலைகளையு முணர்ந்து, சம்பந்தப் பெருமான் போன்று விளங்கும் வீர சேகர மூர்த்தி உலகெலாம் போற்றும் ஒப்பற்ற பரமாத்ம ரூபமா யிருந்தும், ஆராதனையும், அதற் குரிய பொருள்களும், ஆராதிப்பவனும், அதன் பயனை யீவோனும் அப் பலவடிவமா யிருப்பதும், அப் பரமாத்மாவே யென் றுள்ளி லுணர்ந் திருந்தும், உலகோபகார மாய் எடுத்த திரு மேனிக் கொப்பச் சிவ பெருமான் சேவையைச் செக மெல்லா முணர்த்த அவ் விளமைப் பருவத்திலேயே, தம தூர்க் கருகி லுள்ள சாக்கிக் கோட்டை (அழகை) யென்னுஞ் சிவ க்ஷேத்திரத்தி லுள்ள வீர சேகரேசரையும், உமை யம்மையையும், தமது அருட் டிரு மேனிக்கு ஆதி காரண மென் றுணர்ந்து, நா டோறுஞ் சென்று, உட் புறம் பொத்துத் தீர்த்த மாடி, வலம் வரல் முதலிய பணிகளைச் செய்வதுடன், ஆண் டுள்ள நட ராசப் பெருமானுக்கு வியாக்கிர பாதரை யொப்ப, மர மேறிப் பூக்கள் கொய்து, திரு மாலை தொடுத்துக் காலை மாலை ஒரு நாளும் வழாத வண்ணஞ் சாத்துவித்துப் பணிந்து போற்றித் திருத் தொண்டு செய்து வந்தனர். மற்றும், சிவ னடியாரிடத்தும், பெரியாரிடத்தும், அதிதிகண் முதலிய பலர்களிடத்தும், பே ரன்பு கொண்டு, தெய்வமாய்ப் பாவித்து, அவ ரவர்கள் திருக் குறிப் புணர்ந்து, அவ ரவர்க ளுள்ளங் களிக்க, அவ ரவர்கட் கொத்த பணிவிடைகளையுஞ் சிரத்தையுடன் சலியாது செய்து, அவர்களுடைய வாசீர்வாதங்களையும் பெற்றுக் கொண்டு, தம தன்னையார் முதலிய பந்துக்க ளிடத்தும் மிகுந்த வன்புடன் வழிபாடு செய்து வாழ்த்துப் பெற்றுக் கொண்டும், வைசிய நாட்டுச் சிறியார்கள் பல ருள்ளும் மேலான நடை கல்வி பெருந் தன்மை அறிவு தெய்வப் பொலிவு சைவப் பொலிவு முதலியவைகளை யுடையவராய் விளங்கி வந்தனர்.

அங் குள்ள யாவர்களும் தெய்வப் பிறப் பாகிய இவ் வீரேசச் சிறுவரைப் பார்த்து, "இவர் இத்தகைய விளைமைப் பருவத்திலேயே பல விதமான விளக்கமும், பெருமித மான குணங்கள் செய்கைகளும், கற் றுணர்ந்த பெரியாரினு மிக்க சொற் றிறங்களும், சிவத்



தொண்டரினுஞ் சிறந்த, ஆலய தெய்வ அடியவர் முதலியவற்றிற் செய்து வருந் திருத் தொண்டின் றெளிவும், மற்றும், பல தெய்வீகச் செயல்களு நிறைந் துடையா ராதலின், ஈசுராவதார மன்று, மற்றோ ஈசுரனே யென்று சொல்ல வேண்டும்" என, ஏற்றிப் போற்றிப் பெருமை பாராட்டி வழிபட்டு வந்தார்கள்.

---

## 12-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் திரவிய ஆர்ச்சநம் செய்தல்.

இவ்வித மாக அரு ளவதார மாகிய இவ் வீரேசச் சிறுவர்க்குப் பத்தா மாண்டு நிறைந்தது. சகல வைசுவரிய நிறைந்த தாணுவாயும், தமது திருக் கடைக் கண் ணோக்கால், எல்லாச் செல்வத்தையு மெளிதி லீயும் இறைவனாயு முள்ள ஈசுராவதாரத் தன்மை யிருந்தும், மன் னுல கெல்லாம் பொன்னைக் கொண்டே வாழ வேண்டு மாதலின், அது தேடும் வழியை அகிலத்தார்க் குணர்த்தி யருளவும், தா மவதரித்த தந வைசிய மரபிற் கிணங்கியும், திரை கடற் றாண்டித் திரவியந் தேடுதற் பொருட்டுச் சென்று, அங்குத் திரவியந் தேடு மார்க்கம் எளிதாய்க் கற்றுக் கொண்டு, மிகுதியான திரவியந் தேடிக் கொண் டிருக்கும் போது, "தா மவதரித்த காரணம் தியாக மார்க்கத்தானே சிவ பதம் பெறுதல் கூடும்" என, உலகத்தவர்க்கு வொழுகிக் காட்டி யுரைத்து, "அழியா முத்தி யுய்விக்க" என்று அருளா லுணர்ந்து, அப் பொருளி னிடத்தும், அஃதுடையா ரிடத்தும், அதைத் தேடும் வழியிலுந் திடீ ரென வருவருப் புற்று, அந் நாட்டவர் செய்த புண்ணியக் காற் றுந்த, அதை விட்டு விட்டுத் திரும்பித் தமது நகரையே யடைந்தனர். அவதார வருட் செல்வ முடையாரைப் பவ மூல வர்த்த வேடனையும் பிணிக்குங் கொல்லோ? ஏனைய வவதார மூர்த்திகள் போன்று இவ் வீரேச ராவதார மானது அருட் சத்தியாதி தெய்வீக குணங்கள் மறைபட்ட தன்றோ மென்க

அது பற்றியே, இவரது திரு மேனி மறையுங் காறும் அஞ்ஞாந காரியங்கள் இவர்பா லெள் ளளவேனு மிலங்கா திருந்தது. பூர்வ ஞாநமாதி பொலி வின்றிய வவதாரஞ் சிறப்புடைத் தன்றென்பது மிவரால் விளங்கும். ஆதலின், இவர் சிவாவதாரச் சிறப் புடையராமென்று கடைப் பிடித் தொழுக.

---

## 13-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் பெரியாரைத் துணைக் கோடல்.

இங்ஙனம் வந்து அவ் வீரேசரது அவதார பதியாகிய புது வயலென்னு மப் புண்ணிய நகரத்தின்கண் தந வைசியர்களின் தநத்தைப் போன்றும், குல முழுதும் விளக்குந் திந மணி போன்றும் வந் தவதரித்த அவ் வீரசேகரச் சிறியார் இருந்து வருங் கால், அவ் வூரிலுள்ள அவ் வைசிய மரபினரும், அக் குலமணிகளுக் கோ ராபரணம் போன்றவரும் நற் குணங்க ளோர் குன் றுகி யெழுந்தாற் போன்றவரும், கோவிலூர் மடாலயத்தி லுள்ள வேதாந்த தேசிகர்பால் வேதாந்த நூற்களை யோது முறைப்படி கேட்டுத் தெளிந்து சிந்தித்து அநுட்டிப்பவரும், திரு வாலவாயான் றிருக் கோவிலின்கண் நந்தி மண்டபத் திருப் பணியைச் சிந்தையோடு விந்தையாகச் செய்தவரும், சைவப் பொலிவை யுடையவரும் ஆகிய "வீரப் பையா" என்னும் சாந்தாநந்தக் கட லாகிய தண் ணளியா ரிடத்து அடிக் கடி சென்று. தாம் இயற்கையில் நுண் ணறிவு முதலிய வெண் ணிலா வுணர்ச்சிகள் ஆலம் விதையில் ஆலமா மொடுங்கிக் கிடக்கு மாறு, உள்ளத்தி லடங்கிக் கிடக்கப் பெற்ற சிவாவதாரச் சிறுவரா யிருந்தும், மண் ணுலகத்திற்கு நன் னெறி யுணர்த்துதற் பொருட்டு, அந்த வீரப் பையா அவர்களை வழிபட்டு, அறிவின் வேட்கை யுடையார் போன்று, அவர்க ளிடத்து, பொன் செய் வணிகர் பொன் னீட்டு மாறு, நல் லுணர்வு நல் லொழுக்க முதலியவைகளை யீட்டி வந்தனர்,

---



## 14-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் கிரகத்தில் ஞாந சாஸ்திர அப்யாசம் செய்தல்.

இவ்வித மாக நல் லுணர்வு நல் லொழுக்கங்களை நாளுக்கு நாள் அன்பு சிரத்தையுடன் தேடி அநுட்டித்துக் கொண்டு வந்து மோக்ஷ வேட்கை யுடையராய் இருந்து வருங்கால், அந்தப் புது வயல் நகரத்தின்கண் வைசிய மரபினரும், கல்வி யுணர்ச்சி யுடையாரும், விதிப்படி வேதாந்த நூற் பயின்றவரும் ஆகிய, "அழகப் பையா" என்னும் ஒரு வறிஞர் சிரோமணியாய்ச் சிறந்தவ ரிருந்தனர். அவர் இவ் வீரேசச் சிறியாரின் நல் லொழுக்க, நல் லுணர்வு முதலியவைகளை யொரு நாட் கண்டு, இவ ரோர் மாட்சிமை தங்கிய மகா புருட ரென மநதிற் கொண்டு, இவர்பாற் சிறிது இயற்கைத் துறவின் குறிக ளிருக்கின்றதையுங் கருதி, ஒரு நாள், இவ் வீரேசச் சிறுவரை யருகி லழைத்து, "அன்ப! யான் சொல்வதைக் கேட்பையேல் நீ மேம்பாடுடையவ னாகுவை" என்று அன்போடு சொல்லினர். அதைக் கேட்ட விச் சிறுவர், "ஐய! அடியேன் பெரியா ருரையைச் சிரசிற் கொண்டு போற்றுங் கருத்துடையே னன்றோ? ஐயப்பா டெற்றுக்கு? உரைப்பிரேல் அவ்வா றொழுகி வருவேன்" என்று நய வுரை யுரைக்க, அதைக் கேட்ட வவ் வறிஞர், அரிய பெரிய வறிஞரும் போற்றும், பெரும் பற்று விடுத்த, வருந் துறவின் வேந்த னாகிய, பட்டினத் தடிகளின் திருப் பாடலை யெடுத்து, இவர் கையிற் கொடுத்து, "முன்னர் இவ் வரிய நூலைக் கற்று வருவையேல், பின்னர் நுமது நிலைமையை யுணர்ந்து, புலமை நூற் றருவம்" எனப் புகன்றனர். இவ் வீரேசச் சிறுவர், அந் நூலை யன்போ டேற்றுத் துன் போர் சிறிது மின்றி, விளையாட்டாகப் பிழையறக் கற்பதோடு, அதனுடைய வழகிய பொருளையு முணர்ந்து தெளிந்தனர். அவதாரச் சிறுவர்க்கு இத்தகைய நூல் கற்றலு மரிதாமோ? எம்மனோர்களை யுய்விக்க வெழுந்த விறைவனா மென்பதும் மாறுபடுமோ? இவ்

வணம், பெரியாரை யடுத்து, உரிய கேட் டுணர்தல் உலக வழக்கின் நலங் கருதி யன்றோ? இவை யனைத்தையு மருள் விளையாட் டென்றே கொள்ளற்பாலதா மென்ப.

அதன் பின்னர், அவ் வழகப் பையா என்னு மறிஞர், இவ் வீரேசச் சிறுவர்பால், "யான் கொடுத்த நூலைக் கற்றனையோ?" என வினவ, "அறிவிற் சிறந்த வைய! அக்கணமே கற் றுணர்ந்தனனே; அப் பாடலி லொன்று கூறுகின்றேன்" என்று முக மலர்ச்சியுடன் கூறிய வினிய வுரையைக் கேட்டு, மகிழ் வுற்று, மந மிகக் குளிர்ந்து, இவர்பால், "அறிவின் மிக்க நன்னடைச் சிறுவ! மற்று மொரு நூற் றினுங் கற்பையோ?" என வினவ, "எந்தாய்! இஃ தென்னை வியப்பு? பெரியா ருரைப்படியே நடக்க வேண்டிய தல்லவா சிறியார் கடமை; சிறியார்க்குத் தெரிவிக்க வேண்டிய தன்றோ பெரியார் கடமைப்பாடு. தமக்கு யா மறிவிப்பது மொன் றுண்டோ? முன் போலவே இன்னு மெத்தனை நூற்களை யீயினும், அன்புடன் கற்க அவா மிக்குடையே மன்றோ அடியேன்" என்றனர். அதைக் கேட்ட அவ் வழகப் பையா அவர்கள், வியப்புற்று, "இத் தன்மைய தன்றோ முடிந்த பிரப்பாய் வந்த வுத்தமர்களின் தன்மை" என்று மநதிற் கொண்டு, வித்தகர்க் கெல்லாம் மேலாய்த் தத்துவ வாராய்ச் சிச் சீலராகிய தத்துவ ராயர்,அடங்கன் முறையின் ஒரு பகுதியாகிய, "அஞ்ஞ வதைப் பரணி" என்னு நூலை யீந்து, கற்று வரு மாறு கூறினர். அவ் வணமே, யிவ் வீரேசச் சிறுவர் அந் நூலை யேற்று மிக வெளிதாய், அதி விளையாட் டாக அது கற்கு முறையிற் பிழை யறக் கற்றனர். இவ் வண மாகச் சில ஞாந நூற்களைப் பயின்று கொண்டு, அந்தப் பெரியா ராகிய வீரப் பையா அவர்களிடத்தில் பழகிக் கொண் டிருந்து வந்தனர்.

---



## 15-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் சந் நியாச விருப்பங் கோளல்.

இவ் வண மிருந்து வருங்கால், இவ் வீரேசச் சிறுவர்க்கு நல் லுணர்வு முதலிய நற் குணங்களும், மோக்ஷ வேட்கையின் மிகுதிப் பாடும் நிரம்பி யிருந்தமையைக் கண்ட முற் கூறிய அவ் வீரப் பையா வவர்கள், ஒரு நாள், இவர்பால், "அன்ப நினது கருத்திற் கியைய யா மொன்று சொல்லுவோம் கேண்மின்? அஃதோ யா னடிமை புகுந்த கோவிலூரி லுள்ள பரமாதி பரம்பரைக் கோர் நிலைக் களமாகிய வேதாந்த மடாலயத்திற்கு நீ செல்வையேல் எல்லா நன்மையு மடைந்து, எளிதி லுய்வாய் என்பதே" என்றனர். அதைக் கேட்ட, இவ் வீரேசச் சிறுவர், அவ் வுரையை யொரு வரிய வுபதேசம் போலக் கொண்டு, இருதயத்திற் பதித்துச் சங்கர பகவன் துறவு பூண நிமித்தம் பார்த்துக் கொண் டிருந்ததைப் போல, அதற் குரிய நிமித்த காலத்தையே யெதிர் பார்த்துக் கொண் டிருந்து வந்தனர். "வேண்டாமை வந்த காலத்திலேயே வெளியிற் செல்க" என்னும், வேத வுரையை யறிந் திருந்தும், உலக வழக்கிற் கட் டுண்டு, பல வுயிர்கட் கறி வுறுத்தற் பொருட்டே கால நோக்கி யருளினர். உலக வழக் கறிந் தொழுகலும், உத்தம புருடர்க் கோர் உந்தப் பூ ணன்றோ? உலகத்தை யீடேற்றுவார் உலக வழக்கைக் கடவா திருத் தலே நலம். இங்ஙனம் இருப்பதுடன் எட்டு வகைச் சம்பந்தமு மின்றிய பிரமசரிய விரதத்தைக் கைக் கொண் டொழுகியும் வந்தனர். இதனால், "பிரம சாரியை அக்கினி" யென்றது மிவர்பால் உபசார மின்றிய தாயிற்று.

## 1-வது பால காண்டம் முற்றிற்று.

---

# 2-வது—சந் நியாச காண்டம்.

## 1-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மனையை விட் டகலலும், கோவிலூர் மடத்தினை நோக்கிச் செல்லலும்.

அகண்ட பரிபூரண பரமாத்மப் பொருளானது, தமக்கென வோர் தநு வுடைய தன்றாயினும், "அருவ னாயினு மன்பர்க் குருவ னாய் வருவன்" என்னு மா மறை வாக்கியத்திற் கொத்தும், "எனது பிரகிருதியாகிய மாயையைக் கொண்டு யுகந் தோறு யுகந் தோறு முதிப்பேன்" என்னும் பகவா னருளியதற் கேற்பவும், தமது அருட் சத்தியால், துர்வாச ரிஷி யென் றவதரித்த அவ் வீரேசப் பெருந்தகை யார், தமது அவதார விசேஷத்திற் கிசைந்த திவ்யப் பொலிவுடன் இருந்து வருங்கால், மார்க்கண்டரின் நித்தியப் பே றாயுளும், சங்கர பகவ னாயுளும், மற்றும், பல வெண்ணுக்களினும் பெருமை யுள்ளது மாகிய பதி னாறுவ தாண்டு அவர்க்கு நிறைந்தது. இவ் வணந் தருணப் பருவந் தனைத் தோங்கியதையும், ஞாநிகட் கொத்த நற் குணங்களை யுடையதையும், இல் லறத்தி லெள் ளளவேனு மிச்சை யில்லா திருப்பதையும், இளமையி னின்றே மங்கையர்கண் மீது கண் ணோட்டமுமே யற்ற திட மநத் தெளிவையுந் தமது புத்திரன் பாற் கண்ட அன்னையார் முதலிய யாவரும் வீர சேகரேசாவதார மாகிய விமல மாதவரை, "மைந்த! நங் குலந் தழைக்கவும், மைந் தனைப் பெற் றெடுக்கவும், மற்றும், 'இல்லா ளகத் திருக்க வில்லாத தொன் றில்லை' யென்றபடி, இல்லா ளிருக்கி னல்லவோ நமது கடமையாகிய வில்லறம் பய னுடைத்தாகும், நின்னை யன்றி வேறு தலைமை பெற்றவர் இல்லாமையால், நீ மணஞ் செய்து கொள்வதற் கிசைவையேல் மணத்திற் கான காரியங்களைத் தொடங்கலாம்" என்று வினவினர். அதற்கு வீர சேகரனார், "கல்லா லடிக் குரவன்



சொல்லா திருந்தபடி" மௌந மாகவே யிருந்து இல் லறத்தினு மேலாகிய நல் லறமானது துற வறமேயாம். மற்றும். தார தந மிருமாகிற் றளையாகும்; அத் தளையை யகற்று மாற்ற லுடையாரு முளரோ? அது பற்றி யன்றோ, சுகர் சங்கரர் சதா சிவப் பிரமம் முதலிய பெரியோர்கள் அத் தளையிற் சிக்காது விலகிக் கொண் டனர். அதைக் கருதி யன்றோ, "திரு நாவலூர்ப் பெருமானைச் சிவ பெருமானே வந்து தடுத் தாட் கொண்டதும், ஏனையவர்களால் மேரு வொத்த சுந்தரர் தீரர் வீரர் முதலியோரையும், சிவ விஷ்ணு வாதி களையும், துரும் பென வலைக்கும் காமக் கடலைக் கடத்தற் கெளி தாமோ" என்று மௌநோத்தர மளித்தனர். அதைக் கண் டறியாத வபக்குவிக ளொத்த தாய் முதலியோர்கள், நமது புத்திரன் நன் மணத்திற் கிசைந்தன னென்று, சொல் லொணுப் பொருளைப் பன் மதத்தவர்கள் தத் தமது மநதிற் கேற்பக் கொள்ளு மாறு போன்று மநத்திற் கொண்டு, இவரது அழகு அறிவு வொழுக்க முதலிய வற்றிற் கேற்ப, அழகிற் சிறந்தவளும், அறிவின் மிகுந்தவளும், நடையிற் குவிந்தவளு மாகிய வைசிய குல கந்நிகை யொருத்தியை மணஞ் செய்விக்கப் பார்த்துக் கேட்டு முடிவு செய்தனர். அதைக் கண்ட நமது வீர சேகர வித்தகனார் தெய்வீகத்தால் உபதேச மொழி கொள்ளுந் திறமைச் சீடன் போல் அந்தத் திரு மண மொழி கள் செவிப் புகுந்த வுடன் அதி தீவிர பக்குவிக்கு மகாவாக்கிய மானது செவியிற் பட்ட மாத்திரத்தானே தத்துவ ஞாந முதிக்குந் தன்மையைப் போல், வைராக ஞாநந் தோன்றிய பொழுது, முன்ன ரே தமது நன் னெறிப் போதகராகிய வீரப் பையா அவர்கள் கூறி யுள்ள செந் நெறி யுணர்த்து மின் னுரையானதும், முன்னின் றுணர்த்த, அடியவர்கட் கெல்லாம் படியின்கண் ணுள்ள மிடியை யகற்றுவிக்கும் அதிர்ஷ்டமானதும் பிரேரிப்பிக்க, உலகத்தார் செய்த பெருந் தவமானது மருந்தாக நின்று மூ வேடணை வியாதி யானது முன்னேறு தழிக்கக், "கோவிலூர் ஞாந தேசிகரின் வீரன் வந்து வேதாந்த மடாலயத்தை விளக்குவான்" என்னும் உண்மை

மொழியானது உணர்வின்க ணின்று நிலையைக் காட்டி, எம்மனோர் களை யீ டேற்றுவா னெழுந்த நல் லதிர்ஷ்டம் நல் வழியைக் காட்ட, இவ் வுயிர்க்கு ஒதுக்குக் குடியாயும், முந்நாடிகளின் முரண்பாட்டா லுண்டாகும் பலவித துன்பங்கட்கு விடமாயு முள்ள, இவ் வுடலாகிய வநித்திய வில்லமானது தங்குதற் கோர் வெளி யில்லமாகிய வீட்டை விட்டு வெளியிற் போந்து, வேதாந்த நூற்களின் சிரவண முழக்கும், மநந முழக்கும், போதக முழக்கும், சாதக வழக்கும், நீதியி னொழுக்கும், நிட்டைப் பழக்கும், மற்றும், பல வடியர் கணங்களின் கலந் துரை யொலியும், புகழ்ந் துரைப் பொலிவும், இன் னடை மலிவும் நிறைந்தும், மற்றும், பல அடியார்கட்கும், அன்பர்கட்கும், அறிஞர் கட்கும், ஜிக்ஞாசுக்கட்கும், முமுட்சுக்கட்கும் தாயகம் போன்று, தழைத் தோங்கி விளங்கும் கோயிலூர் வேதாந்த மடாலயத்தை யடைந்தனர். சிவாவதாரமாய்ச் சிவ மணம் விளங்கித் தவ மணந் துலங்கிப் பவ மணங் கலந்து, குணக் கடலாகிக் குலவும் நமது வீரேசப் பெருமானார்க்குத் திரு மணமு முண்டாங் கொல்லோ? உலக மெல்லா மருண் மண மணந்து, இருண் மல மொழிந்து, குரு குலம் விளங்கிப் பெருமணப் புகழ் பெற வந்த வீரேசப் பிள்ளையார் திரு மணத்திற்கு மிசைவார் கொல்லோ? "இல்லறத்தா ரிடத்து ஞாந மிருக்கினும் இரும்பிற் புல்லிய மா ரத்ந"மென வொளி குறையு மென்பதும், "துறவறத்தாரிடத்தி லிருக்கும் ஞாநம், நற் றங்கத்திற் பதித்த உய ரிரத்திந" மென வொளி மிகு மென்பதும், நமது முற் றுணர்ந்தோ னவதாரமாகிய முநிவனுக்குத் தெரியாத தாமோ? "வீட்டை விட்டா லன்றி வீடு பேறு கிட்டாது" என்னும் விமல நெறியை விய னுலகத்திற்கு விளக்குவான் விரைந்து வெளி யேறின ரே யன்றி, யாண் டிருப்பினும், சம்பந்த ரஹித சைதந்ய வடிவ சதா நந்த வுருவினர்க்குச் சிறி தளவேனுங் குற்ற மின்று மென்று கொள்க.

---



## 2-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் கோவிலூரில் ஆசிரியரை யடைதல்.

இங்ஙன மாக, இராம பிரான் வசிஷ்ட ராசிரமத்தை யடைந்தது போன்றும், கோவிந்த பகவத் பாதர் குகை மண்டபாலயத்தைச் சங்கர பகவன் அடைந்தாற் போலும். கோவிலூரி லுள்ள அவ் வேதாந்த மடாலயத்தை யடைந்து, அங்கு, பரமாதி பரம்பரைக்குப் பரம காரணமா யிருந்தவரும், வசிஷ்ட முநி போல் இல் லற ஞாநியா யிருந்தவரும், ஆந்ம போதந் தழைக்க, மேன்மை வாய்ந்த தென்னாட் டில், நான்கு வேத முடிவாகிய தமிழ் வேதாந்த நூற்கள் வளர, வேதாந்த வித்தை விதைத்தவரும், குரவர் வேந்தனாகிச் சர வண பவ னாகிய மங்காத வாற்றல் கொண்ட சிங்கார வேலன் வாழுஞ் சிக்கலில் விளங்கினமையின், "சிக்க லாண்டவ" ரென்னுஞ் சிறப்புத் திரு நாமம் பெற்றவரு மாகிய * உகந்த லிங்க ஞாந தேசிகரது பாத சேகரரும், தக்ஷிணா மூர்த்தியின் றிரு வவதாரரும், வைசிய குலப் பயிர் தழைக்க வந் தெழுந்த கொண்டல் போன்றவரும், பாண்டி நாட்டுப் பதியில் பழைய வேதாந்த மடாலயத்தைப் பதியச் செய்த வரும், கல்வியும், பரம நிஷ்டையுங் கைவந்தவரும், பல் லாயிரம் பக்கு வர்க்குப் பரம ஞாநத்தைப் போதித்தவரும், கோவிலூரை யாண்ட குணக் கடலானதால், "கோவிலூ ராண்டவர்" என்னும் திரு நாமம் வாய்ந்தவரு மாகிய மூல குரு மூர்த்தியை வலம் வந்து, பணிந்து வணங்கித் துதிக்கொண்டு, அப்போது, அம் மடாலயத் தலைமை வாய்ந்தவரும், அம் மூல குருவின் மாணாக்கர்க ளாகிய துற வாண்டவர் முதலிய பல பெரியார்களு ளொருவராயும், முழந் தாள் வரை நீண்ட

---

* உகந்த லிங்க ஞாந தேசிகருக்குத் திரு வண்ணாமலை ஈசாநிய மடாலயத்திற்கு மூல காரணமான கந்தப்ப ஞாந தேசிகர் என்னும் ஈசாந்ய தேசிகரும் மாணாக்கரா யிருந்தனர் என உணர்க.

இருக் காங்களும், நீண்டு காந்தியு முடைய அரச ரங்கக் குறிப் புடை யவரும், கருணைக் கோர் இருப் பிடமா யிருந்தமையின், "கருணை நிதி" என்னுந் திரு நாமம் பூண்டவரும், வேதாந்த மாகிய பாத பத்தை வளர்ந்து தழைத்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பல னீயு மாறு தண் டமிழ் நாட்டில் எண் டிசை பரவ விளக்கினவரும், துறவிகட் கோர் துணை யாகி, யற முதற் பல வளர்த்துப் பெறு முறை வகுத்து நிறுவி யிருக்க வைத்த வலி யுடையவரும், வெள் ளாடை யணிந்து, கள்ள வஞ்ச மற்றப் பல்லோரும் வணங்கப் பெற்றவ ராதலின், 'ஐயா வாள்" என்னும் காரணப் பெயர் கொண்ட வரும், வீட்டை யடைதற்கு விராகங் காரண மன்றி, வேடங் காரண மாகா தெனக் காட்டி யருளினவரு மாகிய, சிதம்பர ஞான தேசிக ரவர்களைச் சர ணடையச் சித்தத்துட் கொண்டு,

"காணி யரைக் காணி, மூந்திரியுங் கீழரைக்கா ணி."

என்னு மூதோர் மொழிப்படி, முன்னர் அத் தகைய கருணைநிதி யவர்களின் திரு வருட் டிறம் பெற்றவரும், மற்றும், அவரது சீட கோடிகளுள் தலைவரும், இரண்டா முறைப் பாட மோதுவிப்பவரும், வட மொழி தென் மொழி வல்லுநரும், திரு வாவடு துறைச் சுப்ர மண்ய தேசிகரால் புகழப் பெற்றவரும், பாட மோதுவிக்கு முறை யில் மிகச் சிறந்தவரும், ஆசிரியர் பக்தியி லமிழ்ந்தவரும், காசி அந்ந பூரணி யம்மையின் புருவத்தில், வெளியே நின்றே கையி லுள்ள சந்தந வுருண்டையை யெறிந்து, அது தமது லக்ஷியத்திற் றிலகமா யமா, அதனால், அவ் வம்மையின் றிரு வரு ளைக் குற்ற வருட் சத்தி யாளரும், சீவந் முத்தரும், மைத்திரி யாதி குணங்க ணிறைந்தவரும், பின்னர், பெரிய சுவாமிக ளென்று வழங்கப்படுபவரும், "கைவல்ய நவநீதம் என்னும் ஞான நூற்குத் தத்வார்த்த தீபம் என்னும் உரை யும், பகவற் கீதைக்குக் கூடார்த்த தீபிகை என்னும் உரையும், வேகாந்த சூடாமணி என்னும் நூற்கு மறை பொருள் விளக்க உரை யும்" எழுதியவரும், ஆகிய, அங்குள்ள அப் பொன்னம்பல ஞான தேசிகரை அம் மடாலயு மரபைத் தழுவித் தரிசித்து வணங்கி



நின்றனர். அதைக் கண்ட அப் பெருந்தகையார், இவ் வீரேசச் சிறியாரை நோக்கி, "நீர் யார்" என்று வினவ, அதற் கிவர், "சுவாமி! யானே புது வயல் என்னு மூரிற் றோன்றிய வைசியச் சிறுவன்" என மிகுந்த வணக்க விநயத்துடன் பதிற் கூறினர். அதைக் கேட்ட, அப் பெரியார், "இங்கு யாது கருதி வந்தனை" என, அதற்கு இவர், "பெரியாரை வழிபட் டுய்ய வந்தனன்" என்று அரிய பெரிய பொருளையுட் கொண்ட சிறிய வின் சொல்லை மறு மொழி யாகக் கூறினர். அதைக் கேட்ட, அந்தத் தத்துவ ஞானத் தண்ணளி யார், "இவ் வீரேசாது அறி வடக்க வணக்க முதலிய நற் குறிகளைக் கண்டு, இச் சிறுவ னோர் உச்ச பத மடைவன்" என்று திரு வுளத் திற் கொண்டு, அம் மடாலயத்தில் சிறியாரைச் சேர்க்கிற தில்லை என் றுள்ள நியமத்தைத் தழுவாமலே, இவரையும் அவ் வடியர் கணங்களுட் சேர்த்துத் தமது ஆசிரியரின் திரு வுளப் பாங் குடைய ஞய்ச் செய்யக் கருதினர். வேண்டுவார் வேண்டியதை யீயும் விடையோ னருளும் வீணுமோ? "உள்ளத் திருந்து மொழித்தான் பரன்" என்றபடி, முன்னரே, ஏகலவனுடைய பாவனைக்கண் ணிருந் தே வர்ணனைக் கடங்கா வகை வில் வித்தை போதித்த பரமாந்மா வாகிய பாவனை யாசிரியரைப் போன்று, நமது வீர சேகரனரின் உள்ளத்தின்கண்ணே பாவனை மயமா யிருந்த பரமாந்மாவே இது போது உருவு கொண் டெழுந்தருளிச் சுந்தாரையும் வாத வூராரையும் உய்விக்க முன்னர் நின்ற இவரது புண்ணியப் பெருக்க அரு ளவ தாரம் பய னுடைய தாகாதோ? மற்றும், அப் பெரியார் இவ் வீரேச ரை, 'கருணை நிதி' என்னும், தமது குரவ ராகிய, சிதம்பா ஞான தேசி கரின் றிருச் சந்நிதாநத்திற்குக் கையடையோடு வழைத்துக் கொண்டு போய், அவருடைய அரிஞ ருண்ணுந் தத்துவ ஞானத் தே னெழுகும் பத்ம பாதங்களிற் சா ணடையச் செய்தருளினர். அஃ தன்றியும், இவருடைய, அரிய பெரிய உரிய மோக்ஷ வேட்கை முதலிய அதிதீவிர மாணக்கர்க் குள்ள நற் குணங்க ளனைத்தையும், அக் கருணை நிதி யவர்கட்கு மறிவுறுத்தி, "எந்தையே! தேவரீர், திரு

யுள மிரங்கி, இச் சிறுவரையும் அடிமைகொண் டாள வேண்டும்” என, அன்போடு தம தாசிரியரைப் பல வாறு பிரார்த்தித்தனர்.

இவ்வாறு பிரார்த்தித்தற் கிரங்கியும், இயற்கையிலேயே வந் தடைந்தவர்களின் பந்தத்தைத் துடைக்குஞ் சிந்தனை யுடைய, எந்தை யவர்களின், இபற்கையாகிய. காருண்ய வெழிற்சியைத் தழுவியும், ‘கருணா நிதி’ என்னுந் தமது காரணத் திரு நாமத்திற் கியையவும், ஆமையைப் போல் அகத்திற் கருதி, மீநம் போன்று மிளிர் கணல் நோக்கி, பார்ப் பீன்ற பறவை போற் சீர்க் கரத்தாற் றடவிச் சத்தி நிபாதஞ் செய்து, சுத்த வான்மா வாக்கி, அபயங் கொடுத்துச் சமய முன்னி, அடிமை கொண் டருளினர். பல் லாயிரம் பக்குவிகளை யொரு சொல்லா லடிமை கொள்ள வந்த நமது வீரசேகரனாரை அடிமை கொள்வது மரிய தாமோ? வாதவூ ரடிகளை யடிமை கொண்ட திரு வார் பெருந் துறைக் குருந்தடிப் பெருமான் போன்று, அணைந்தாரை யடிமை கொண் டாள்வதே இத்தகைய வாசிரியரின் செயற் கரிய செய லன்றோ? அத்தகையாரை யடைவ தன்றோ பக்குவிகட்டு உய்தற்கரிய வுய்வு மாகும்.

---

## 3-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் ஆசிரியர்பால் வேதாந்த நூ லோதல்.

இங்ஙன மாக, நமது வீர சேகரப் பெருமா னாகிய எந்தையார் யாவர்க்கு முதற் குரு வாகிய சேவூரும் பெருமா னவதாரமா யிருந்து இவ் வுலகத்திற்கு ஆன்றோர்க ளொழுகி வந்தது வேதாகமங்களில் விதந் தோதியதும், உண்மை ஞானத்தை யுதிக்கச் செய்வது மாகிய சற் குரு சற் சீடர் மரபு இத் தன்மைத் தெனத் தெரிக்கு மாறு செய்தருளவும், வந்த திரு மேனிய ராதலின், தாஞ் சா ணடைந்த



வாசிரியரையே தெய்வ மெனக் கொண்டு, உடற் குயிர் போலும், கட் கிமை போலும், அவரது திருப் பாதச் சேவை யாகிய, ஆப்தம், அங்கம், தாநம், சத் பாவம் என்னும் பணிகளைத் தங் கடனாக வெண்ணி, யன்புடன் செய்து கொண்டு, மற்று, மவருடைய திரு வுளப் பாங்கிற் கொத்து உள்ளத்தி லெண்ணுவதைச் செய்யும் உத்த மோத்தம பக்குவியாய் அரிய சேவைகளைச் செய்து வந்தனர். அதைக் கண்ட தமது ஞாநாசிரியர், இவரது உத்தமோத்தம வதி காரத் தன்மையை யுணர்ந்து, “உபநிடத சாரமாகிய தத்துவங்களைக் கூறும், நாநா ஜீவ வாதக் கட்டளை” என்னும் அம் மடாலய மரபின் தொடக்க நூலை நூ லுணர்த்து முறையானே, நுண்ணிய பொருள் வெளியாம் வண்ணம் போதித் தருளினர். இவ் வீரசேகரரும் அதைக் கற்கு மாறு கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளியும் வகைகளா லுணர்ந்துகொண்டு தியாநாப்பியாச பராய்த் திருக் கூட்டத்தார்க்கு மன்புடையராய்க் காம தேநுவின் கன் றெனக் கண்டார்க்குங் காத லுதிக்கு மாறு பணி இன் சொற்களையே யணி யெனப் பூண்டு விளங்கி வந்தனர்.

---

## 4-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் தமது பந்துக்களை விலக்குதல்.

இவ்வாறு, இவ் வீரசேகரத் தீரச் சிறியார், இளமையிலேயே குரு லிங்க சங்கமங்களைப் பெற்று, அவர்களி னருளைப் பெற்று, இருளை யொதுக்கித் தெருளை விளக்கி, மநுடற் கரிய மாண்புடைச் செய லுடையராய்க் குரு குல வாசஞ் செய்யுங்கால், இவரது அன்னை யார் முதலிய பந்துக்கள் வந்து, “மைந்த! இத் தருணப் பருவத்தி லேயே இத்தகைய துறவு மார்க்க மெற்றுக்கு? நங் குடும்பத்திற்கு நீயே தலைமைப் பிள்ளை யன்றோ? நீயும் விவாகஞ் செய்து கொண்டு குடும்பத்தை விருத்தி பண்ணாது, இல் வனஞ் செய்தல் தகுமா?

சில நாட் சென்ற பின்னர் இங்ஙனமே செய்குதி. ‘அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்’ என்னு மருமைத் திரு வாக்கையு மறிய வில்லையோ? பெற்ற வுட லெரியிற் பிழையா மன்றோ?’’ என்னப் பல வாறு வேண்டி வற்புறுத்தி, ‘தமது மனைக்கு வர வேண்டு’ மென வழைத்தனர். அது கண்ட வீர சேகரனார், ‘‘யாவர்க்கும் தாய் தகப்ப னாகிய விடைய தா ரிரையையும், அவ ரிடப் பாகத் தமரு மம்பிகை யையும், பேணா தொழித்து, எமது கருவுடற்கு நிமித்த மாத்திர மாகி யதைக் கொண்டு தா யென்றும் பந்து வென்றும் எண்ணிக் கொண்டு, எமது மெய்த் தாய் தந்தையாகிய விறைவனையு மிறைவியையும் தே டிக் கொண் டிருக்கும் எம்மையும் அத்தகைய உண்மைத் தாய் தந்தை களை யிழக்கும்படி செய்ய வன்றோ இவர்கள் இங்ஙனந் தடுத் தழைக் கின்றனர்’’ என்று மநதி லுன்னிக் கொண்டு, ‘‘கோயிலூரை யடுத் தவர் கூடத் திரும்புவரோ? நீவிர் உம தூர்க்குச் செல்லுமின்’’ என வேண்டாமைக்க ணிலைத்த விமல மநதுடன், மீண்டு ஒரு முறையும் வாராதபடி உறுதிக் குறிப்புரையைச் சொல்லி அவர்களைத் தம தூர்க்கு அனுப்பிவிட்டனர். சந்நியாசி யாயினுந் தாயைப் பேணல் தக்கதா மென்னும் நூல் வழக் கிருப்பினும் அரு ளவதார வற்புத மூர்த்தி யாதலின், அதையுந் தழுவா தகற்றி யருளினர். இயற்கைத் துறவி யாகிய வெந்தையார்க்கு இல் லறந் துறத்தலும், ஏனையோர்கட்கு இஃ தோ ரிழிவிலாத பெரு மார்க்க மென் றுணர்த்த வழிகாட்ட லாகு மன்றோ? இதுவே துற வெனின் இளமைக்கண்ணேயே மூ வேடனை முடிந்தது என்றது பூரண மன்றோ? ஆதலின் துற வற நெறியி லுள்ள நியமங்கள் பெரும்பாலும் கருமத் துறவிக ளிடத்தே காணு மா மென்க.

---



## 5-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் சிக்கலுக்குச் சென்று சந்நியாசம் பெறுதல்.

அதன் பின்னர், கல் லாடை பூண்டு சுடுந் துறவியாகிய, காள கண்டப் பெருமானின் காருண்ய வடிவ ராகிய நமது வீர சேகர வித்தகனார், உட் டுறவிற்குக் காவல் வெளித் துற வென்றும், வெளித் துறவிற்குக் காவல் வேடமா மென் றுணர்ந்தும், இம் முறை யை விவ் வுலகத்திற்கு வொழுகிக் காட்டவும், இதுவே ஆன்றோர்க் கும், அரு மறை யாகமத்திற்கும் ஒப்ப முடிந்ததா மென்று நிலை நாட்டவும், தமது சுற்றத்தார்களுடன் கூடா திருப்பதற்கு, விரதக் கொடி, யென் றுணர்த்தவும், ‘‘கோங்கமுலை மாதரொடு கூடுவதன் முன்னம், ஒங்கியசந் நியாசயென வுற்றிடலு மாமால்’’ என்றற் றொடக்கத்துப் பெரு நூல்க ளாணை தந்தமையானும், ஆன்றோ ரொழுக்க மாக வந்தமையாதலானும், வருணங்களை நோக்கினும், மூன்றாவது வருணத்த னாகிய நமக்குங் கூடு மென்னுந் துணிவா னும், நான் மறை முதலிய நூன் முறைகளுக் கெல்லா முடி வாகிய சித்தாந்தப் பயனாகிய சுத்தாத்வைதக் கோவிலூ ராதீந வேதாந்த மரபிற்கு மூல காரணராயும், தமது பரமாசாரியர்க்கு மாசிரிய ராகிய வரும் ஆகிய, ‘சிக்கல்’ என்னும் க்ஷேத்திரத்தி லுள்ளதும், திரு மங்கை ஆழ்வார் பொரு ளீட்டிப் புதைத்து வைத்தமையின், பொருள்வை நக ரெனப் பெயர் பெற்றதும், சுவர்ண புரி யீசுரர் சௌந்தர நாயகி யம்மையார் ஆலயம் விளங்கப் பெற்றது மாகிய, ‘பொருள் வைத்த சேரி’ என்னு மிடத்தி லுள்ள உகந்த லிங்க ஞான தேசிகர் திருச் சந்நிதாநத்தை யடைந்து, அங்குத் தலைமை பெற் றுள்ள, ‘சட்டையப்ப சுவாமிகள்’ என்னும் பெரியாரிடத்து, துறவு நூன் முறைப்படி பிதிர்க் கடன் முதலியவற்றைக் கழித்து, மந்தி ரோபதேசத்துடன் சுபதிநத்தில் காவி யாடை யேற்ற லாகிய இலிங்க சந்யாசஞ் செய்து கொண்டனர். பல செந்மப் புண்ணியப்

பெருக்கானும், உபாசநா பலத்தானும், அதிதீவிர பக்குவ முடைய பூத பாவநர்க் கன்றே சாதி வருணம் ஆசிரமம் முதலிய மரபுக் கட்டுப்பாடுகளும், வேட முதலிய சமயக் கட்டுப்பாடுகளும், கையேற் றுண்ணல் முதலிய நூல் வழக்குகளும் பய னற்றதாம்; ஏனையோர்க் கும் பய னியாதன வாமோ? ஈண்டு நமது வீரசேகரனர் உலகிற்கு வேண்டிய ஒழுக்க முறைகளைத் தழுவி யீ டேற்றுவான் வந்த உத்த மாவதார மானதால், இத்தகைய ஒழுக்க முறைகளைத் தழுவிய தன்றி முக் காலத்தினும் மும் மலங்களும் மூ வேடணைகளும் முப் பகைகளும் முழுது மற்ற முதல்வ னவதார மாகிய நமது பெருமா ஞர்க்கும் ஒருதலையா வேண்டற்பாலதாங் கொல்லோ? "உலகுப காரம் ஞாநிகள் விவகாரம்" என்பதே போன்ற தென் றுணர்க.

---

## 6-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சந்யாசம் பெற்றுக் கொண்டு கோவிலூர் வந்து ஆசிரியர்பால் வாசிட்டம் வரை வேதாந்த பாடம் கேட்டல்.

இவ் வாறுக, இவ் வீரேசப் பெருமானர் காவி யாடை யேற்று, இலிங்க சந்நியாசி யாகி, நீல மேனியும், சாலச் சிவந்த வாடையும் பெற்றது, மால் சிவ வடிவமும், * நூல் முறைப்படி ஒன்று மென் பதற் கொத்து விளங்கிக் கொண்டு, சிக்கல் மடாலயத்தில் மிக்க தோர் பொலிவாய் இருந்து வருங்கால், இவரது தாயாதிய ராகிய, 'நல்ல தம்பி செட்டியார்' என்னும் வைசியர் ஒருவர், 'நமது குலத்திற் கோர் நன்மை விளைக்க வந்த நமது வீரசேகரனர், நமது பற்றுக்கண் முதலியன அறுத்தற் பொருட்டே யன்றே, பிறப்பானுங் கருமத் தானும் இரு பிறப்பாளர் போன்று, ஒழுக்கத்தான் மறு பிறப்பாகும் சந்நியாசத்தைப் பெற்றுக் கொண்டனர். நமது குடும்பத்தைக் காவாது விடினும், எடுத்துக் கொண்ட துற வறத்தைக் காத்துக் கொண்டன ரன்றே? நலம் நலம்' என ஒருவாறு மகிழ்ச்சிப் புண் டாகிச் சிக்கலுக்குச் சென்று, இவ் வீர சேகரனுரைப் பார்த்து, "இப்படியா உமது கரும மிருந்தது? இது எங்கட்கும் மேம்பா டுடையதே; ஆனல், இப்போது நம தூர்க்கு வரவேண்டும்" என, இவர், "சுட்ட மண்ணும் பச்சை மண்ணும் பொருந்துமோ? சுடு காடு போன பிணந் திரும்புமோ?" என்று விரைந்து போக, அங்ஙன மின்றேல், "வியாபாரஞ் செய்யு மிட மாகிய மனை யொன்று இதற் கருகி லுள்ள, 'குற நாடு' என்னு மூரில் இருக்கிறது; அங்காவது வர வேண்டும்; அதற் கிணங்குவீ ரென எண்ணி வந்தேன்; உம்மை யான் இளமையி லிருந்து இத்தகைய நன் னடைக்கண்ணேயே சிறிதும் மாறுபா டின்றி யிருந்து வருவதைப் பார்க்கின்றேன்; உமது புண்ணிய மிருந்த வா றென்னே? எங்கள் பாக்கியங் குறைந்த வாறு மென்னே?" என்று பல வகையாகப் பிரார்த்தித்து வேண்டின மையின், சிவ னடியார்களையே நெருங்கிய சுற்றத்தாராகக் கொண்ட நமது வீரசேகரனர் அவரது வேண்டுகோ ளொன்றை மாத்திரங் குறியாகக் கொண்டு, ஏனைய வன்பரைப் போன்றே இவரையு முள் ளிற் கொண்டு, அந்த நல்ல தம்பிச் செட்டியாருடன் சென்று, அவருடைய வன்பு மிகுந்த வுபசாரத்தினுல், அங்குச் சில நாட் டங்கி, அதினின்றும் வெளி யேறி, தென் றிசை நோக்கிக் கொண்டு, கால் தரை தேய நடந்து, மால் தரும் பசி தாகாதிகளைப் பொறுத்துக் கொண்டு, பல நாடு கடந்து வருங்கால், இடைக்க ணுள்ள வோர் கிராமத்தில் பசி மிகுதியால், உழவர்க ளிட்ட கூ

---

* ஈசுவர கீதை. 1—19. "துதித்தமா முனிவர் தலைகளால் வணங்கித் தொழுதகை யினர்களாய் நிற்பக், கொதித்தவான் புலத் துக் கொண்டல்வந் துதவிற் றெய்பவே கொடியவெங் கூற்றை, யுதைத்ததா ளுடையா னுலகமுண் டுமிழ்ந்த வொருவனைத் தழுவி யிங் கிவர்கள், பதைத்தகா ரணமென் செய்யவேண் டுவதென் பகரெ ன்ப் பவள்வாய் மலர்ந்தான்" என்ற செய்யுளையும் நினைக்குக.

முருந்திக் கொண்டும், மர்றுஞ், சில வூர்களில் அங் கை யேற்றுப் பொங்கு மா பசி தணித்து, எரியாதிகளி னீ ரருந்திக் கொண்டு, மெய் வருத்தம் பாராது வந்து, தந வைசிய நகரத்தை யடைந்து, ஆங் குள்ள, 'நேமத்தான் பட்டி' என்னும் வைசிய நகரின்கண் ஓர் போது தங்கி, தெருவிற் சென்று, அங் கையா லைய மேற் றுண்டு, தமது ஞாநாசிரிய ராகிய கருணாநிதி மூர்த்தி எழுந்தருளி யிருக்குங் கோயிலூரை யடைந்து, ஆவைப் பிரிந்து வருங் கன்று போன் றும், இராமனைப் பிரிந்த விலக்குமணனைப் போன்றும், அப்பரைப் பிரிந்த சம்பந்தரைப் போன்றும், பதியைப் பிரிந்த பத்மினியைப் போன்றும், தம்மை யறியாத் தண்ணளி பெருகிக் கண்ணின் மிக்க கரை யிலா நீ ரொழுக தழு தழுத்த வாழ்த்துடன், தமது ஆசிரியரை, குருந்தை மரத் தடியிற் குலவிய கோமானைத் திருந்திய வாதவூ ரடிகள் தெரிசித்தாற் போன்றும், கல்லா லடிக்க ணமர்ந்த எல்லா மறை புகழும் தக்கிணா மூர்த்தியை மிக்க சீர் நால்வர்கள் அக்காற் கண்டதைப் போன்றும், தரிசித்து வணங்கி வாய் பொத்தி நின்று, "எம்மை யாள வந்த வெந்தையே! மும்மை மல மறுக்க வந்த முத்தனே! கைமா றிலா தாண்ட கருணா நிதியே! செய் மா றறியாச் சிறுவனாகிய யான் தமது திரு வுள்ளக் குறிப்புப்படி சந்நியாசம் பண்ணிக் கொண்டு வந்தேன்" என்று இரக்கக் குறிப் புள்ள வின் சொல் லுடன் விண்ணப்பித்தனர். அந்த பக்தி ரசங் கலந் தெழும்பிய அமுத மொத்த மொழியைத் தந்தையர் தமது மகவின் மழலைச் சொல்லைக் கநல் மெழுகாய் மநங் கசிந்து கேட்கு மாறும், விடர் இளம் பாவைய ருரையைக் கேட்கு மாறும் பிரிந்த கன்றைக் கண்ட கோவின் மநம் போல் மந மிகக் களித்துச் செவி மடுத்து, "மைந்த! நினக்குப் பிரபஞ்சத்தைத் துரும் பெனும் பெரும் வீரமும், பிரமத்தை யுணர்வதில் ஞாந வீரமும் விரிக" என்று ஆசீர்வதித் தருளினர். இவ் வீரேசர் அதைப் பெற்றுக் கொண்டு, ஊசியி னூல் போலொத்து, இடையறாத திருப் பணியை அவ ரடிக் கமலத்திற்குச் செய்து வந்தனர். பின்னர், அவர்பால் மந முவந்து ஆங் குள்ள



மரபுக் கொத்த வேதாந்த நூல்க ளாகிய, 1. நாநா ஜீவ வாதக் கட்டளை. 2. கீதாசாரத் தாலாட்டு. 3. சசி வன்ன போதம். 4. மஹா ராஜா துறவு. 5. பக்தி (வைராக்ய) சதகம், 6. வைராக்ய தீபம். 7. பிரஹ்ம நாமாவலி. (லக்ஷணாவிருத்தி) 8. அஞ்ஞ வதைப் பரணி. 9. விவேக சூடாமணி. 10. வேதாந்த சூடாமணி. 11. கைவல்ய நவநீதம். 12. பஞ்ச தசி. 13. ஈசுவர கீதை. 14. பகவற் கீதை. 15. பிரஹ்ம கீதை. 16. லகு யோக (ஞாந) வாசிஷ்ட முடிவா யுள்ள பதினாறு நூற்களையும், இனிய கருணை யுடன் முறையாகப் போதித்தருளினர். இவரும் அவைகளைக் கேட்டுத் தெளிந்து சிந்தித்து நிட்டை கூடி முநிவராய் விளங்கிப் பல காலம் அங்கு அவ் வடியார் கணங்களுக் கெலாங் கண் மணி போன்று, ஆசிரிய சேவை செய்து கொண்டு, அவைகளை யொழுகி, யவ் வநுபவங் கைக்கு வரும்படி தீர்க்க காலம் நைரந்தர்ய சத் காரத் துடன் பழகிக் கொண்டு வந்தனர்.

---

## 7-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் யாத்திரை சென்று சிதம்பரத்தை யடைதல்.

இவ் வாறு, வீரசேகர முநிவர் கோவிலூரின்கண் குரு குல வாசஞ் செய்து கொண் டிருக்கும் போது, எல்லா க்ஷேத்திரங்களி லும் எங்கும் நிறைந்து நிற்கும் பரிபூரண பரமாத்ம வடிவா யிருந் தும், மந்தாதிகாரிகளுக்குப் புண்ணிய க்ஷேத்திர யாத்திரையானே மநத் தூய்மை யுண்டாக வேண்டு மென்னும் நூல் வழக்கையும், அன்னோ ரொழுக்கத்தையும், உலகிற்கு முணர்த்து மாறு, க்ஷேத்திர யாத்திரை செய்யக் கருதி ஞாநாசிரியர்பால் நல் லாஞ்ஞை பெற்றுக் கொண்டு, பிரயாணப்பட்டு, கால் தரை தோயக் கடு நடை நடந்து, தென் றிசைக் கேகி, இடைசளி லுள்ள, காளையார் கோவில் திருப் பூவண முதலிய பல தலங்களிற் சென்று, தீர்த்த மாடி, திருக்

கோவில் வலம் வந்து, சிவ பெருமானைத் தரிசித்து, இரு கரங்களை
யுஞ் சிர மேற் கூப்பி, அன்பு மேலீட்டால் ஆறுகக் கண்ணீ ரொழுக,
அன்புடன் கருங் கன் மநமுங் கரைந் துருகக் கண்க ளொடு மணற்
கேணியிற் சுரந்து நீர் பாயச் செய்யும் திரு வாசக தேவாரங்களைத்
துதித்துக் கொண்டு, தெருவில் கைப் பிச்சை யேற் றுண்டு பல
தலங்களையுங் கடந்து செல்லுங்கால், வீர சேகரனார் விரை மலர்ப்
பாதத்தில் கூர் முட் டைத்துக் குழிப் புண் ணுண்டாக அதைச்
சிறிதும் பாராட்டாது, கழி மல வாக்கையி னிழிவை யுணர்ந்து
தள்ளி, அழிவிலா வரசின் அரு ளடைய வுன்னி இராமேசுர க்ஷேத்தி
ரத்தை யடைந்து. சேது தீர்த்த முதலிய பல தீர்த்தங்களையு மாடி,
இராம லிங்கத்தைத் தரிசித்து வராம லின்னு மொரு பவம் வாழ்த்தி
வணங்கி வலம் வந்து போற்றி, அங்கு மங் கை யேற் றுண்டு
கொண்டு, இரண் டொரு நாள் தல வாசம் பண்ணிக் கொண்டு, அங்
கிருந்து திரும்பிப் பாத சாரியாகவே பல நாடு கழித்து, ஆங் காங்குத்
தெருவி லைய மேற் றுண்டு பசி தாகம் பொறுத்து, நிசி பக லின்றி
நடந்து, தமது ஆசிரியாற் செய்யப் பட்ட மூலட்டாநத் திருப்
பணியை யுடையதும், தமது ஆசிரியரின் றிரு நாமங் கொண்டதும்,
சநகாதிகளை யீடேற்றுதற்கு சிவ பெருமான் ஆடிய ஆநந்தத் தாண்
டவ சிற் சபை பொற் சபை முதலிய பஞ்ச சபை வாய்ந்ததும்,
வேதாக மங்களால் விதந் தோதப் பெற்றதும், திரு நாவலூர்ப்
பெருந்தகையார் தமது திருத் தொண்டத் தொகையில், "தில்லைவா
ழந்தணர்த மடியார்க்கும்" எனத் தொடக்கத்தில் திரு வாய் மலர்ந்
தருளப் பெற்ற தில்லை மூவாயிரவரின் நல்ல வம் பதியு மாகியதும்,
மற்றும், பல சிறப்புக்களை வாய்ந்தது மாகிய சிதம்பர க்ஷேத்திரத்தை
யடைந்தனர். அடைந்து அங்குள்ள புண்ணிய தீர்த்த மாடி, பொற்
சபையை யடைந்து, சிற் சபையைக் கண்டு, அற்புதத் தாண்டவ
வாநந்தக் கூத்தனைத் தரிசித்து. யேற்றிப் போற்றிக் கொண்டு, அங்
குள்ள அடியார்கட் கோ ரன்னை யக மாகிய மௌந ஞாந தேசிகர்
மடாலயஞ் சென்று, அதி லோர்பா லொரு சிற் றறையிற் றங்கித்





ஸ்ரீ ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள் கோவிலூர் மடம்

தெருவிற் சென்று, திருக் கரங்களி லேய மேற் றுண்டு கொண்டு, இடையரு நிட்டை யுடையவராய், முநிவரனுய்த் தனி நனி முயன்று, பிரமாநுசந்தாந விருத்திப் பிரவாகத்தைப் பே ருய்ப் பெருகப் பேணிக் கொண்டும், உல கெலா மாட்டுவிக்க, இலகு நீர் மதி சூட்டி, அம்பலத்தி லாடும் பொன் பதத்தானே நா டோறுந் தரிசித்துக் கொண்டும், பன் னிரண்டு வருட கால மாக ஒருவராலுங் கொள்ள முடியாத பெரிய வைராகத்தைக் கைக் கொண்டு, தவ நாட் கழித்து, அவ நா ளொழித்துச் சிவ மாக வாழ்ந்து வந்தனர். அதி னின் றொரு திநம் திரு வா வடு துறை, 'சுப்பிரமணிய தேசிகர்' என் னும் பெரியாரைத் தரிசிக்கச் சென்று வணங்கி நிற்க,அவர் வேதாந்த முணர்த்தும் செய்யு ளொன்று கூறுமின், என, "அற்ப முனக் கொன் றினிதாகி லதனுற் பிறப்பி லகப்பட்டாய்" என்றற் றொடக் கத்துச் செய்யுளைக் கூறவும், "இது போது இதை யாண்டுத் தேடி யுரைத்தீரோ? அருமை அருமை" என, அவரால் அருமை பாராட்டுப் பெற்று, அவ ரீந்த விபூதிப் பட்டுப் பையைப் பெற்று வந்தனர்.

---

## 8-வது அத்தியாயம்.

### கோவிலூர் (ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகர்) ஆண்டவர் செயலும், விதேஹ கைவல்யமும்.

இங்ஙனம் நிகழ்ந்து வருங்கால், வைசிய நகரங்களுள், தாநங்களில் காரையும் குடித்துக் கீழ்ப்படுத்தியதால் (காரினு மிகுந்த வள்ளற் றன்மையால்) 'காரைக் குடி' என வழங்கும் சிறந்த வைசிய நகரத் தில், வைசிய திலகராகிய மெய்யப்ப செட்டியார் வள்ளி யம்மையார் என்பவர்பால், தக்ஷிணாமூர்த்தி கலையாய்த் தோன்றிச் சிவ மென விளங்கலால், 'ஆண்டவன்' என்று காரணப் பெயரும் பூண்டு, மற்றும், அம்மையா ரீந்த வரு நீர் கொண்டு தமது தாக சுரத்தைத் தணித்துக் கொண்டவரும், தந்தையைச் செவி டாக்கியவரும், தமது குரு மூர்த்தியாகிய உகந்த லிங்க ஞாந தேசிகருக்குப் பாதம்

வருடுங்கால், அவர்கள், "ஓர் செய்யுள் சொல்" என ஆஞ்ஞாபிக்க, "உன்னும்முணர் வுக்குணர் வாயெனக் குண்மைதந்தாய், மன்னுஞ் சுரு திப்பொரு ளாய்வழி காட்டிநின்ருய், பின்னுங்குரு வாயடைந் துன்னருள் பேணவைத்தாய், என்னென்றுரைப் பேனின்க ருணையி ருந்தவாறே" என்று பக்தி சதகத் தோத்திரத்தில் உள்ள 27-வது செய்யுளைக் கூற, அதனைக் கேட்ட தமது ஆசாரியருக்கு அன்பு மிகுந்து தழுவி அன்பு பாராட்டப் பெற்றவரும், தம்மிடம் வந்து கேட்ட பல தெய்வங்கட்கும் ஆலய முதலிய பணி செய்து வந்த வரும், தந் தாய்பாற் குறை கூறிய கோவிலூர்த் திரு நெல்லை யம் மைக்குக் கர்ப்பக் கிரகம் அர்த்த மண்டபம் மகா மண்டபம் இராஜ கோபுரம், மற்றும், அந்த க்ஷேத்திரத்தி லுள்ள கொற்ற வா ளீசர்க் கும் இராஜ கோபுரம் நித்திய கல்யாணி கைலாச நாதர்க்கு ஆலயங் களும் செய்வித்தவரும், அஃ தன்றியும், அத் திரு நெல்லை யம்மை யாரே கொண்டு வந்து கொடுத்த தேங்காயை யுடைத்துத் தாந் தொடங்கிய கோவிலூர் மடாலயத்தைக் கற் பணி யாக்கி, நிலை நாட்டி, அதற்கு, 'களத் தூர்' என்னும் ஒரு அரிய பெரிய கிராமத் தைத் தேடுவித்தவரும், வைசிய நாடு தழைக்க வந்த வரப்பிர சாதரும், அங்கு, பல வன்பர்களையும் பல நாடுகளையும் உய்யும்படி செய்தவரும், அத்தகைய கோவிலூரை யாண்டதால், 'கோவிலூ ராண்டவர்' என வழங்கப்பட்டவரும் ஆகிய முத்தி ராம லிங்க ஞாந தேசிக ரவர்கள் அந்திய காலத்தில், தமது மாணுக்கர்களுட் சிறந்த, 'துற வாண்டவர்' என்னும் அருணுசல ஞாந தேசிகரைத் தமது வேதாந்த மடாலயத்திற் றலைவ ராக்குவித் தருளிச் செய்து, கலி யுக ஆதி ௪௲௯௱௪௰௮க்குச் சரியான சாலி வாகந சகாப்தம், (௲௭௱௬௰௯) பிலவங்க வருஷம் உத்தராயணம் பங்குனி மாதம் ௮௨ பாநு வாரம் பௌர்ணமை திதி உத்திர நக்ஷத்திரம் கந்நியா லக்கிநம் கூடிய சுப திநத்தில், மத முதலியவைகட் கெட்டாத நிச பத வடிவ விதேக கைவல்யத்தை யடைந்து சிவ மாயினுர்கள்.





ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிகள் கோவிலூர் மடம்

## 9-வது அத்தியாயம்.

### அருணுசல ஞாந தேசிக சுவாமிகள் குரு ஸ்தாநத்தினை வகித்தலும், விதேக கைவல்யமும்.

அதன் பின்னர், அத்தகைய சிறப்பு வாய்ந்த கோவிலூ ராண்டவரின் திரு வருளைப் பெற்று, அரிய துறவுக் கோ ராதரவு காட்டியாண்ட, 'துற வாண்டவர்' என்பவரும், வைசிய நகரத்திற் கெல்லாந் தலைமையாய் விளங்கும் தேவி கோட்டை என்னும் வைசிய நகரத்தின்கண் டோன்றித் திரண்ட செல்வத் தலைவரா யிருந்து, பின்னரவைக ளனைத்தையு நீத்துக் கோவிலூ ராண்டவரைச் சரணடைந்து, பட்டினத் தடிகள் போல் கோவண வுடையையே யுடையாகக் கொண்டு, துறவர்கட் கோர் தூ மணியா யிருந்து, திரு வெண்காட்டுப் பெரு மெண் குணத்தா ஞகிய பரசிவன், அர்ச்சகர் வடிவமாய் வந்து, அந்ந மளித்ததை யுண்டு, ஈறிலாத் தமிழ் மொழிக் கோர் ஆறு சூடியவற்கும், மாறிக் குற்றங் கூறிய கூறெருணுக் கவித் திறமை வாய்ந்த நக்கீரர் போன்ற ஆறுமுக நாவல முதலியவர்களால் வணங்கித் துதித்துப் பாடப் பெற்று வந்திருந்தனர். பின் தமது ஆசிரியரி ஞணைப்படி கோயிலூர் வேதாந்த மடாலயத் தலைமையை யேற்றுக் கொண்டு, அம் மடாலயத்தைப் பல வகையாலும் விருத்தி செய்து, சீட ராசாரங்களையுஞ் செவ்வனே வகுத்து, நடந்து நடாத்தியுங் காட்டி யருளித் தமது மடாலயத்தில் வேதாந்த சிரவணஞ் செய்யுஞ் சாதுக்கள் கூட்ட மிருந்து வரு மாறு, 'கழநி வாசல்' என்னுங் கிராமத்தையும், தமது மடாலயத்திற் கூதியமாய்த் தேடுவித்துச் சில காலம் அம் மடாலயத்தில் வேதாந்த போதக ஞாநாசாரியராய், திருப் பேஞர் சாந்த லிங்க சுவாமிகள் சிதம்பர சுவாமிகளை, 'புத்திர பாக்கியம் போதும்; பௌத்திர பாக்கியம் பெருக' எனக் கூறி குமார தேவ ரிடத்தில் அனுப்பியது போல், கோள தேயத்தில் உள்ள, 'கோட்டாறு' என்னும் ஊரில் பிறந்த, 'நித்தியாநந்த சுவாமிகள்' என்னும் முமுக்ஷுவை, கோவிலூர் ஆண்டவரைச் சரணுகதி

யாக அடைய, அவரை 'நீ நமது துறவுப் பிள்ளையிடம் போ யிருந்து வா' என்று அனுப்பப் பெற்று வந்து, சரணாகதி அடைந்து, வேதாந்த சாஸ்திர வேத்தாவாய் பிரஹ்ம வித்தாய் காசி முதலிய பல க்ஷேத்திரம் சென்று, சம்ஸ்கிருத வித்துவானாய் சங்கீத ஞானியாய் தமிழ் இலக்கண இலக்கிய மர்மஞ்ஞராய், சம்ஸ்கிருதத்தில் மும்மடி தேவர் 6000 லகு யோக வாசிட்டத்திற்கு எழுதிய 'சம்சார தாரணி' என்னும் வியாக்கியானத்தினை தமிழில் மொழிபெயர்த்தல், சதா சிவப் பிரஹ்மேந்திர சரஸ்வதி அவர்கள் சம்ஸ்கிருதத்தில் செய்த, 'அத்வைத ரச மஞ்சரி' என்னும் நூலின் மூலமும் உரையும், தமிழில் மூலம் செய்யுளாகவும், உரை வசனமாகவும் மொழிபெயர்த்தல். வித்யாரண சுவாமிகள் சம்ஸ்கிருதத்தில் இயற்றிய பஞ்சதசியை, தமிழில் செய்யுளாகப் பத்துப் பிரகாணம் மொழி பெயர்த்தல், அதே பஞ்சதசியில், ஏழு பிரகாணம் வரை மூலம் சூர்ணிகையாகவும், ராம கிருஷ்ண பண்டிதர் வியாக்யானம் வசனமாகவும் மொழி பெயர்த்தல், சங்கராசாரிய சுவாமிகள் இயற்றிய தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் செய்யுளாக மொழி பெயர்த்தல் முதலிய பல பரோபகார காரியங்களைச் செய்தவராகிய நித்தியாநந்த ஸ்வாமிகள், அருணாசல ஞான தேசிகர் பிள்ளைத் தமிழ் பாடிய பஞ்ச லக்ஷண வித்வான் சுப்பராய சுவாமிகள் முதலிய பல சிஷ்ய குழாங்கள் உடையவரா யிருந்து, இதம் பல வாய்ந்த, 'சிதம்பர ஞான தேசிகர்' என்னுங் கருணா நிதியவர்களை அம் மடாலயத்திற்குத் தலைமைய ராக்குவித்து விட்டு, கலி (௪௲௯௱௫௰) சாலி வாகந சகாப்தம் (௲௭௱௭௰௧) சௌமிய வருடம், தக்ஷிணாயநம் கடக மாதம் பாநு வாரம் ௨௨ இரவு சதுர்த்தி திதி கிரீஷ்மரிது சுக்கில பக்ஷம் மிதுந லக்கிநம் பூச நக்ஷத்திரத்தில் பதாநந்தங் கடந்து நின்ற நிஜாநந்த ரூப வடிவ விதேக கைவல்யத்தை யெய்தினர்.



## 10-வது அத்தியாயம்.

### சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள் செயலும், விதேஹ கைவல்யமும்.

அதன் பின்னர், கோவிலூ ராண்டவரின் குரை கழலருள் பெற்றவரும், தமது மூத்த சகோதரரு மாகிய, 'ஐயா அவர்கள்' என்னும் மெய்யாந் திரு நாமம் பெற்ற வந்தச் சிதம்பர ஞாந தேசிக ரவர்கள் துற வாண்டவர் தரிசநத்தால், 'தமக்குந் துறவு வந்தது' என, அவர் திரு வாக்கைச் சிர மேற் கொண்டு, அம் மடாலயத் தலைமையை யன்போடு மேற்றுக் கொண்டு தமது மேம்பாட்டால் யாவரு மதிக்க விருந்து, தமது ஆசிரியரின் அதிட்டாநத்தைச் சிறந்த கற் பணியாக்கி, நற் புவி கொண்டாட பற் பல வகையில் அம் மடாலயத்தை விருத்தி செய்து, முத்தி யடைய விரும்பும் எத்திசைப் பக்குவிகட்கும், பரமாத்மாவின் இலக்கணங்களை விருத்தி செய்து உபதேசித்துக் கொண்டு, குரு மணியாகிக் குவலயம் போற்ற விருநில மதனி லிரவி யாகி வேதாந்த மரபின் முறைகளை விதிப்படி வகுத்துப் பாடங் கேட்கு முறை, பாடம் போதிக்கு முறைகளை பகுத்துச் சிவ திருப்பணிச் செல்வரா யிருந்து, அந்த க்ஷேத்திரத்தி லுள்ள சோமாஸ்கந்த மூர்த்திக்குக் கருங் கல்லா லிழைத்த நீல மொத்த காந்தி வீசும் ஆலய மொன் றாற்றி, யாளி யணி வெட்டுக் கால் விமாந மண்டபம் முதலிய திருப் பணியைச் செய்து, மற்றும், மது புஷ்கரணி தீர்த்த வணைக் கட்டு படிக் கட்டுகள். அதன் மைய மண்டபம் முதலியவைகளையுஞ் செய்து, கோவிலூருக் குள்ள குறிப்பு வாய்ந்த குறிப்புப் பிளான் தயார் செய்து, திருப் பணிகளின் குறிப்பினங்களை வகுத்துத் தேவாலய மடாலயங்களைச் சிறப்புடன் பாராட்டிக் கொண்டு 11 வருஷம் நேமத்தான் பட்டி "ஐயா அவர்கள்" என்னும் பழநி யப்ப சுவாமிக ளுடன் கூட இருந்தும் 16 வருஷம் வரை தாமே வேதாந்த போதக ஞாநாசாரியரா யிருந்து, நெறியாண சமயத்தில், தமது தேகம் வீழும் நிலை கண்டு, பல மாணுக்கர் சூழ விருக்க, அந்த க்ஷேத்திரத்தின்

இரண்டாந் திருவிளா வாகிய சுப திநத்தில் தமது மாணாக்க ரான காரைக்குடி இராம சாமி ஞான தேசிகரை அம் மடாலயத்திற்குத் தலைமைய ராக்கி விட்டு, கலியாதி ௪௲௯௱௭௰௭ சாலி வாகன சகாப்தம் ௲௭௱௯௰௭ தாது வருடம் தக்ஷிணாயனம் கிரீஷ்ம ரிது ஆடி மீ ௪௨ கிருஷ்ண பக்ஷம் ஏகாதசி திதி சோம வாரம் துலா லக்நம் ரோகிணி நக்ஷத்திரம் கூடிய சிறப்பு வாய்ந்த வத்திநத்தில், அதே யது வாகிய ஈதா மய மென்னும் விதேக கைவல்ய பதத்தை யெய்தினர்.

---

## 11-வது அத்தியாயம்.

### காரைக் குடி இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகள் செயலும், விதேஹ கைவல்யமும்.

அதன் பின்னர், தமை யடைந்தோர்களின் பவத்தைத் தமது சரணாமிர்தத்தால் தொலைக்குங் கருணா நிதியாகிய தமது ஞானா சாரியரின் திரு வாக்கின்படி இராம சாமி ஞான தேசிக ஸ்வாமிகள் அம் மடாலயத்தின் தலைமையைப் பெற்று, வேதாந்த போதகா சிரியரா யிருந்து, அந்த மடாலயத்தில் அடியார்க ளமு துண்ணு மரும் போசநச் சாலை மண்டபம் செய்தன் முதலிய பல வாருக விருத்தி செய்து, ஆங் குள்ள தேவாலயத்தில் அஷ்ட லட்சுமி மண் டபம் முதலிய சிவ பணிகள் செய்து, எழரை யாண் டிருந்து, தமது நிரியாண தசையில், 'வீரன் வருவான்' என்னும், அக் கோவிலூரி லுள்ள பெரியார் திரு வாக்கின்படி தீர ஞான சிகாமணி யாகிய வீர மா முநிவரை, இந்திரன் தமது சேனைக்கு முருகப் பெருமானைத் தலைவ ராக்கியது போல் அம் மடாலயத்திற்குத் தலைவ ராக்க வேண்டுங் குறிப்பைக் காட்டி யருளி, கலியாதி (௪௲௯௱௮௰௫) சாலி வாகந சகாப்தம் ௲௮௱௫ சுபாநு வருஷம் மார்கழித் திங்கள் ௬ புதன் கிழமை கிருஷ்ண பக்ஷம் சஷ்டி திதி மக நக்ஷத்திரங் கூடிய நற்றிநத்தில், நித்தியாநந்த வடிவ சத்ய மோக்ஷ மென்னும் விதேக கைவல்ய பதத்தை யெய்தினர்.

---



## 12-வது அத்தியாயம்.

### பொன்னம்பல ஞான தேசிக ஸ்வாமிகள் வர லாறு.

இன்னணம், கோவிலூர் நிகழ்வுக ளிருக்க, விஜய நகரத்தில் அகம்படியர் குலத்தில் அங்கம்மாள் வயிற்றி லுதித்து, இளமையி லேயே தமக்குக் கொடுக்குந் தைலத்தைக் கணபதிப் பெருமானுக்கு அபிடேக மாட்டிக் கொண்டு வந்தும், மற்றும், பல நன் னடைக ளுடன் பதினா ருண்டு முற்றும் வரை இல் லறத் திருந்து, பின் துற வடைந்து, சிதம்பரத்தை யடைந்து, 'பெத்தாச்சி சுவாமிகள்' என்னும் பெரியாரை யடைந்து, இலிங்க சந்யாசம் பெற்றுக் கொண்டு, கைப் பிக்ஷை யேற் றுண்டு, ஒப்பிலா வைராகத்தை யுடை யராய், நடராஜப் பெருமானைத் திடமான வன்புடன் சேவித்துக் கொண்டு முமுட்சுவா யிருந்து வருங்கால், இவரது பூர்வ புண்ணிய மிகுதிப்பாட்டால், எடுத்த மணந் தடுத்துக் கொடுத்த வரத்தின்படி சுந்தரரை யாட்கொள்ளத் தோன்றிய வெந்தையா ரவதாரம் போல், தில்லையை யடைந்த வெல்லை யிலாப் புக ழுற்ற 'கருணா நிதி' என்னும் சிதம்பர ஞான தேசிகரை ஞானாசிரியரா யடைந்து, கோவிலூர் சென்று, வேதாந்த மரபுப்படி, 'சசி வந்ந போதம்' என்னு நூற் றொடங்கி வாசிட்ட பரியந்தமான மரபு நூற்களை அந்த ஞானாசிரியர்பால் கேட்டுத் தெளிந்து நிட்டை யுடையராய் அங் குள்ள வடியார் கூட்டத்திற் பெரிய ராம் பெற்றிய ராதலின், 'பெரியார்' என்னும் பெயருடன் வட மொழியுங் கற்று, திடக் கவிஞராய், தமது ஆசாரியர் குறிப்பினால் தாம் உண்ட சேட மான மாங்கனித் துண்டை ஈய அதனை வாங்கிப் புசித்து, ஆசிரியர் திரு வுள்ளக் குறிப்பைக் குறிப்பா னுணர்ந்து, இரண்டா முறை வேதாந்த நூல் போதிக்கு முறையில் வல்லுநராய் அடியார் குலத் திலகரா யிருந் துவரும் நாளில், தமது ஞானாசிரிய ராகிய சிதம்பர ஞான தேசிகர் விதேக கைவல்ய மடைந்ததும், அவரது பாதுகையை அவ ரெனப் பாவித்துக் கைக் கொண்டு கோவிலூர் மடாலயத்தினின்றும் வெளிப் போந்து, மழு வாடி புனல் வாயின் முதலிய தலங்களிற்

சில நாள் வசித்துத் தாம் முன்னர்ப் பெற்ற நன்றி மறவாது அத் தன்மைய சிதம்பர க்ஷேத்திரத்தையே யடைந்து, ஆங்குள்ள பஞ்ச சபைகளிலுங் குஞ்சித சரணத்தோடு விஞ்சைய ராகிய பதஞ்சலி வியாக்கிர பாதர் முதலியோர் மகிழ. இன்ப நாடக மாடும் அன்புரு வாகிய நடராஜப் பெருமானைத் திடமான பக்தியுடன் உபாசநா மூர்த்தமாய்க் கொண்டு வழிபட்டு, அக் கருணாநிதியின் அருளால் தண் டமிழ் நாடு, அண்டரும் விரும்பும் அத்வைத ஞானத்தை யடைந்து. பண்டு வினைகளைப் போக்கி, மண்டு மாநந்தக் கடலில் மூழ்கு மாறு, அந்த க்ஷேத்திரத்தில் ஒரு திரு மடாலய மியற்றத் தமது திரு வுள்ளத்தில் நினைத்த மாத்திரத்திலே அதற்கு வேண்டிய பொருளை யன்பர்கள் அன்போடு பிரார்த்தித் தீய அதனா லங்கோர் வேதாந்த மடாலய மியற்றி, அதில் தமது ஞானாசிரியரின் பாதுகை யைத் தாபித்து, அதையே ஆசிரியராகப் பாவித்து, பல் லாயிரம் பக்குவிகட்குச் சொல்லா வகைப் பொருள்களையும் எல்லாரினு மிக்க வுபதேசித்துக் கொண்டு ஞானாசிரிய ராகிய நன் மணிக் கெல்லா நடு நாயகமா யிருந்து வந்தனர்.

———

## 13-வது அத்தியாயம்.

### பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிகட்கு இன் னுரை கூறல்.

இவ்வண நிகழுங்கால், நமது வீர சேகரப் பெருமானாரும், அங் குள்ள மௌந ஞாந தேசிகர் மடாலயத்தில் தனித்து வசித்து முனித் திறம் பெற்று, இனிப் பிறவா நெறி தரும் தவ நெறி கொண்டு, அவ நெறி யொழித்துப் பிறப்பை யொழிக்கும் பிச்சை யேற் றுண்டு, சிறப்புட னிருக்குஞ் செய்கையை, அப் பொன்னம்பல ஞாந தேசிக ருணர்ந்து. தம்பா லழைத்துத் தண்ணளியுடனே 'அருந் தவ முனிவ ராற்றும் பெருந் தவ நெறியைக் கைக்கொண் டொழுகும் வீர முனிவ! உமது நடையி னுள்ளங் குளிர்ந்தேம்; ஆயினும், யா மொன்று



கூறுதும்; தாங் கொண்ட கொள்கைக்கு மொத்ததாய், அதைக் கேட் டொழுக மன முளதேற் கூறுவாம்' என்றனர். அதைக் கேட்ட வீர மா முனிவர், 'பெரியார் கூறுவது பெரு நெறியே யாகும். மற்றும், எமக்கோ சிறிது மின்னாது கூறார்' என் றன்னி, 'ஐய! அங்ஙனமே கூறுமின்; அவ்வுரையைக் குரு மொழி யெனக் கொண் டொழுகி வருவேன்' என்று அன்போடு கேட்க, அதற்கு அவர், "ஈண்டு நமது மடாலயத்தில் இடையறாது வேதாந்த சிரவணம் இரவில் நடந்தேறி வருகின்றமையின், நீவிரும் அதை உட னிருந்து சிரவணஞ் செய்து வருவீராக; இதற்குத் தடை யாகிய இரவிற் கைப் பிக்ஷை யேற்பதைத் தவிர்த்து, நமது மடாலயத்திலேயே இரவிற் பிக்ஷை செய்து கொள்வீராக" என்று அன்பு மிரக்கமுங் கொண்டு, இன் சொல்லது பெருக, மண்டும் அந்த வினிய வுபதேசத்தை மொழிய, அது கேட்ட வீரசேகரனார், பெரியா ருரையைப் பொன் போற் பேணும் பெற்றிய ராதலினாலும், தமது தவத்திற்குச் சிறிதுந் தடையாகாதது மன்றித் துணையா யிருப்பதா மாதலினாலும், அதை யோ ரரிய வுபதேச மெனக் கொண்டு அவ்வணமே யொழுகி வந்தனர். துலக்கமான கண்ணாடியை யடிக்கடி துலக்கினாற் பழுதாமோ? பழக்கம் வழுவு மென்றே யொழுக்க வரை கூறியதா மென்க. இவ் வணம், எந்தை மா தவ ராகிய வீர சேகரனார் தங்கத்தில் முத்துப் பதித்தது போன்று, தமது தவத்திற்கு மிக வணியா யுள்ள வேதாந்த நூல்களின் ஸ்மரணை வடிவாகிய சிரவணஞ் செய்து கொண்டு வரும் நாளில், கோவிலூர் மடாலயத்திற்குத் தலைவரா யிருந்த காரைக் குடி இராம சாமி ஞாந தேசிகரவர்கள் அங்கு விதேக கைவல்ய மடைந்ததைக் கேள்வி யுற்று, பொன்னம்பல ஞாந தேசிகர் திரு வாக்கின்கண் வேத வாணி விண்ணி லெழுந்தாற் போன்று, "இனி மேல் நமது குரு ஸ்தான மாகிய கோவிலூர் வேதாந்த மடாலயத்தைப் பாது காத்து வரத் தக்கவர் வீர முனி வரைத் தவிர்த்து வே றியாவ ருள்ளார்" என்னுந் திரு வாக் கெழுந்தது. அம் மொழியைச் செவி மடுத்த நமது வீரேசப் பெரு

மானார் ஈண் டிருக்கின் பெரியா ரருமொழியை ஒரு காலு மறுக்க முடியாது. அதைக் கொள்ளினோ நமது வேண்டாமைச் செல்வங் குறைவதுடன் பொன் விலங் கிட்டுக்கொண்ட தொக்கும், அஃதாகவே, "இடம் பொருளேவலைக் குறித்து மடம் புகுநா" யென விழுக்காகும். அதனால், 'பிரமாநுசந்தாநம் விச்சின்னப்பட்டு வெளிவந்து விடய மேற் செல்லும்; செல்லவே விடயாகாரமாய் இராகாதிகளை யெய்தும்; அதை யெய்தினோ நமது ஞாந மல முறும்; மல முறின் மறு பிறப்பும் வரும்' எனச் சிந்தித்து, ஏனைய சொற்ப வறிவின ராகிய வாய்ப் பிதற் றுடைய வேட ஞாநிகள் விராக நெறிக்குப் பயந் தோடி யொளிப்பது போலும், சாகாரப் பிரம நிட்டர்கள் நிராகார நிர்க்குணப் பிரம யோக நிட்டைக்குப் பயப்படு மாறு போலும் பயந் தோடிச் சென்று, அன்று நிசிக்கண்ணேயே வளவனூர் உண்முக மூர்த்தி யாகிய சண் முக ஞாந தேசிகர் மடாலயத்திற்குச் சென்றெளிந்து கொண்டனர்.

---

## 14-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் மடாலயத் தலைமை வஹித்தற் கஞ்சி வெளிச் சேல்லல்.

அந்தோ! நமது வீர சேகரனாரின் தீர ஞாந யோகச் செயலிருந்த வா றென்னே! அவரது வேண்டாமைச் செல்வம் விழுப் பொருள் விளங்கிய வா றென்னே! இடம் பொருளேவல்களின் துன்பத் தோற்றந் தோன்றிய வா றென்னே! பிரமாநுசந்தாநப் பெற்றி தான் என்னே! என்னே! 'தெங் கேறிய வணில் திரும்பா' தென்னுந் தெளி விலாது நோக்கி மெலியும் சுணங்கன் போன்று, பொருந்தா மாதரைக் கண்டு, திருந்தா மநத்துடன் நோக்கி மெலியும் காமுகன் போன்று, கிடைக்காத மடத்தையுங் கிட்டு மாறு கருதிச் செய்யு நமது கிளர்ச்சியாகிய கயமை யிருந்த வா றென்னே! அரன் பூணுகிய பணியு மமுத மீயுமோ! அத்தகைய வீர மா முநியைச்



சர ணடைந்த நம்மனோர்க்கு வைராகம் வருங் கொல்லோ! சுடரானது இரும்பு முதலியவைகளைத் தங்கமாகச் செய்யினும் மண்ணையும் வாழையையும் என் செயுங் கொல்! இங்ஙனம், வீரசேகரனார் "பொருந்திவா ழிடமொன் றுகிற் பொருந்திடும் பற்று" என்னு மறிஞருரைக் கொப்பப் பயந்து சென்றதை நன் குணர்ந் திருந்தும் தமது குரு ஸ்தாநத்தி லுள்ள பெரு மபிமாநத்தால் சில வடியார்களையும் 'குமரப் பய்யா' என்னும் வைசியப் பெரியாரையும் வளவனூரில் இவ ரிருப்பது தெரிந்து, அங் கனுப்பிப் பார கோர சம்சார சாகரத்தைத் தாண்டுவதில் தீர ஞாந சூர வீர சேகரனாரை ஒரு தலையா உட னழைத்துக் கொண்டு வரும்படி செய்தனர். அதைக் கண்ட எமது குரவர் பெருமானார் பெரியா ருரையை வரிய பூணெனக் கொள்ளும் மரியாதை யுடைய மாண் புடைய ராதலின், வநவாசம் பண்ணிய இரகு குல திர மணியாகிய இராம பிரான் திரும்பி வந்தாற் போன்று அவர்களுடன் கூடி நாம் சென்று, பொன்னம்பல ஞாந தேசிகரிடம், "ஐய! என் மநம் பின்னரும் உலக விவகாரத்திலூடாட எள் ளளவு மேற்க வில்லை; ஆதலின், இது விஷயத்தில் மிக விடுதலை செய்யக் கேட்டுக் கொள்கின்றேன்" என்று மடாலயத் தலைமை விஷயமாய் விடுதலை பெற்றுக் கொள்ளலா மென்னு மநத் துணிவுடன் சிதம்பரத்திற்கு வந்தனர். சாதகத்திலுஞ் சாத்தியத்திலும் சீவன் முத்தித் தசையிலும் சிறி தளவேனுஞ் சித்தத்தை யலைக்க வல்ல உலக விவகார வலியை யுணர்ந்த எந்தை வீரேசர்க்கும் எட் டுணையேனும் மடாலயத் தலைமை யேற்க விச்சை யிருக்குங் கொல்லோ! அது பற்றி யன்றோ! இவரது மடாலயத் தலைமை வகித்த இரு பத்தே ழரை வருட காலம் வரையும் சிறி தளவும் ஞாநம் சலிப்பது கூட வின்றி யிருந்தது.

---

## 15-வது அத்தியாயம்.

### பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளைக் கோவிலூர் மடாலயக் குரு ஸ்தாநத்தினை வஹிக்கும்படி சம்மதிக்கச் செய்தல்.

இங்ஙனம் வந்து வீரசேகரனுர், பொன்னம்பல ஞாந தேசிக
ரிடம் குறிப்பிட்டபடியே மடாலயத் தலைமை வகிக்கச் சொல்லும்
விஷயத்தில் பிரார்த்தித்து விடை கேட்டனர். அதற்கு அவர்,
"அறி வொழுக்கங்களிற் சிறந்த வன்புடையீர்! உமது வார்த்தையோ
சாத்திரங்கட்கும் ஆன்ருேர்க்கும் எமக்கும் ஒப்ப முடிந்த வுண்மை
யுரையேயாம்; ஆயினும், எம்மை யறியாது நமது குருத் தாநத்தி
லுள்ள வபிமாநமானது இங்ஙனம் பிரேரிப்பிக்கின்றது; அஃது தன்
றியும், நாம் கோவிலூ ராதீநத்தைக் கொண் டன்ருே கடைத் தேறி
னேம்; அதை நம்மைப் போல் முன் னுள்ள பெரியார்களும்
பேணுது கைவிடின் நாங் கடைத் தேற நல் வழி கிட்டலும் அரி
தன்ருே! ஞாநிகள் விவகாரம் உல குபகார மன்ருே! மூன்று
லோகத் துள்ளும் அடைய வேண்டிய தொன்று மில்லாத கண்ண
பிரானும், உல குபகாரமாய்ப் பார்த்தனுக்குத் தேர் செலுத்த
வில்லையோ! மற்றும், ஜநகர் இராமர் வசிட்டர் முதலியோர்கள் விவ
காரங்களில் மநதைச் செலுத்தியும், இலக்ஷிய நழுவாது இருந்து
வரவில்லையோ! மற்றும், நமது குரு ஸ்தாநமானது குலவி வளர்ந்
தோங்கி னன்ருே என் ஞட்டினுஞ் சிறந்த தென் ஞடானது எம்
மதங்கட்கும் எவ் வகை நூல்களுக்கும் எவ்விதக் கொள்கையாளர்
கட்கும் சம்மதமாயும், நடு நிலையாயு முள்ள வேதாந்த முடிவில்
விளங்கும் அத்வைத ஞாந வாநந்தத்தை யுண்டு, பவ துன்பத்தைப்
போக்கும் சாது கணங்களுக்கும் தம் மகங் குளிர்ந்து பன்னிய ஞாநம்
விளங்கும்; அது தவிர்த்தும், குரு ஸ்தாநத்தைப் பேணவிடின்
நாம் செய்யுங் கைமாறு தான் என்னை கொலோ!" என்று பல
வாருக இவ் வீர் சேகரனுர்க்குப் பொன்னம்பல ஞாந தேசிகர் நீதி



யுரை போதிக்கவும், வைசியப் பெரியா ராகிய குமரப் பய்யா முதலி
யோர்களும், "எங்கள் குலம் விளக்க வந்த எந்தையே! பொங்கு
கடற் பூமியின்கண் திங்கள் போல விளங்கும் வேதாந்தத்திற் காதார
மான கோவிலூர் மடாலயத்தை யேற்று, எம்மனோர்க்கு வைதீக
நெறிகளும், சைவத் துறைகளும், வைஷ்ணவ வழிகளும், வேதாந்த
முறைகளும் விளக்குவித்து, எமது நாட்டையும் ஈடேறச் செய்யா
விடின், மற்றை யாவர் தான் செய்வர்" என்று பல வாறு பிரார்த்
திக்கவும், மற்றும், ஏனைய அடியவர் கணங்களும் "தமிழ் நாட்டின்
கண்ணும், மற்றைய விடத்தும் அத்வைத மரபானது தழைக்கும்
வண்ணஞ் செய்து, எம்மை யெல்லா முய்விக்கச் செய்த கோவிலூர்
மடாலயத்தைத் தேவரீர் பாது காத்தா லன்ருே யாமும் எம்மை
யொத்தாரும் ஞாந மடையவும், ஞாநத்தைப் பாது காக்கவும் காரண
மாகும்; எல்லா முணர்ந்த எந்தாய்! தங்கட்கு யாம் சொல்ல வேண்
டுவது மொன் றுண்டோ? துறவிற் றூயோய்! வைராகத்திற்கு வரம்
புளோய்! தவத்திற் றலைவ! தத்துவ ஞாநச் செல்வ!" என்று பல
வகையாகப் பிரார்த்திக்க, வசிஷ்ட ருரையைக் கேட்டு மநங் கசிந்த
இராமரைப் போன்றும், அமரர்களின் வேண்டுகோட் கிரங்கிய
குமரனைப் போன்றும், சம்பந்தப் பெருமா னுரையைக் கேட்டுத்
திரும்பிய பாண்டியன் போன்றும் வீர சேகரர்க்கு மந மிளகி
அயோத்தியை யாள இராம பிரான் ஒப்புக் கொண்டது போன்றும்,
வாணியானவள் சிருங்க கிரியி லிருக்க வங்கீகரித்துக் கொண்டதைப்
போன்றும் சிறுபான்மை ஏற்றுக் கொண்டனர். கோவிலூர் ஆண்
டவர் குறிப்பு வாக்கும், எம்மனோர்கள் செய்த புண்ணியப் பெருக்
கும், உலகத்தார் செய்த தவங்களும், வைசிய நாட்டார் பெற்று வந்த
வரமும் ஒன்ருகித் தத் தம் பலனை யளிக்கத் தக்க சமயம் வரின்,
எந்தையார் மநதை யேற்றுவிக்கச் செய்யாதோ? அது கண்ட
பொன்னம்பல ஞாந தேசிகரும், மற்றும், அன்பர்களும் அடியார்
களும் சிறு பான்மை மநக் கவலை யற்று மகிழ்வுட னிருந்து, அம்
முயற்சி பய னீயு மாறு திரு வருளைச் சிந்தித்துக் கொண்டிருந்தனர்.

---

## 16-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளும், பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகளும் அடியார் கணங்களுடன் கோவிலூருக் கேகல்.

இங்ஙனம், உலகை யுய்விக்க வீர சேகரப் பெருந் தகையார், தேவர்கள் பிரார்த்தனைக்கு தேவ மகா தேவன் திரு வுள மிரங்கியது போலவும், அலை வுற்ற பலர்கள் வேண்டுகோட்குக் கலைக் கோட்டு முனிவர் யிரங்கிப் பிறர்க்கே யுபகார மாகிய பெற்றியைப் போலவும், மடாலயத் தலைமை ஏற்கச் சிறபான்மை சம்மதித்தும், உள்ளில், "விருத்தியானது விடய வடிவமாகியே விடும் சமாதி யிலாத விடத்து" என்னும் பதஞ்சலி பகவா னுரைப்படியும், "உருவ முத லியவற்றை யடைந்த சித்தம் கருக் குகையில் விடப்பட்ட தாமிர நீரைப் போன்றும், வயலை யடைந்த நீரைப் போன்றும் விடயாகார மாகியே விடும்" என்னும் ஆன்றோர்களி னரும் பெரு முரையையுஞ் சிந்தித்துக் கொண்டு, "சிறிது மநங் கலங்கி வியவகார மென்பதே இராகத் துவேஷ முதலியவற்றிற்கு நிலைக் களமானது; மோக்ஷ மடைவிக்கும் விவகார மெனினும், யாகத்திற் செய்யும் பசு ஹிம்சை புண்ணிய மிகுதியைத் தருவதா யிருப்பினும், சிறிது பாவத்தையு மீயு மாறு சிறிது மந சஞ்சலத்தைக் கொடா தொழியுமோ? அக்கி நிக்குச் சூடு இயற்கையா மாறு விவகாரத்திற்கு விக்ஷேபம் இயற்கை யன்றோ?" என வெண்ணிக் கிலேச முற்றிருப்பதைக் குறிப்பாற் கண் டறிந்த பொன்னம்பல ஞாந தேசிகர், இவரிடத்தில், 'வீர முநிவ! அங்ஙனம் எண்ணுவீரேல் அந்த மடாலயத்தின் விவகாரங்க ளனைத்தையும் யாமே வகித்துக் கொள்வேம், நீவிர் அங்கு வந் தடையும் பக்குவிகட்கு விதி வழி வேதாந்த பாட மாத்திர மோது வித்துக் கொண்டு, ஆசார்ய ஸ்தாநத்தி லிருக்கினும் போதும்" என்று தமது மேம்பாட்டையுங் கருதாது "அருமையு நோக்கார் அவமதிப்பும் பாரார், கருமமே கண்ணாயினர்" என்னும் பெரியாரின் மூதுரைப்படி பார மேற்றுக் கொள்வேம்" எனத் துணிவு கூறி, வீர மா முநிவரின் மநத்தைத் தேற்றுவித்து இராம பிரானை விசுவா மித்திரர் அழைத்துச் சென்றது போன்றும், அப்பர் சுவாமிகளும் சம்பந்த சுவாமிகளும், அடியார் கணங்கள் சூழச் செல்லு மாறு தாமும் தம்மைச் சூழ்ந்த வடியார் கணங்கள் அன்பர் கூட்டங்கள் சூழ, வீர மா முநிவருடன் கோவிலூருக்குச் சென்றனர்.



---

## 17-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளைக் கோவிலூர் மடாலயக் குரு ஸ்தாநத்தினை வஹிக்கச் செய்தல்.

அங்கு, அப்பரும் சம்பந்தரும் திரு மறைக் காட்டை யடைந் தது போல், கோவிலூரை யடைந்து, மடாலயத்தில் சுப திநத்திற் சென்று, இலிங்க வடிவாயும் நந்தி வடிவாயும் பலி பீட வடிவாயு முள்ள மூல குரவர்களை வணங்கி வாழ்த்திப் போற்றி, அங் குள்ள வடியார்கட்கும் வைசிய தநவான்கட்கும் இப்போது விதேக கைவல்ய மடைந்த இராம சாமி ஞாந தேசிகர் இம் மடாலயத்திற்கு 'நமது வீர சேகரப் பெருமானரையே தலைவ ராக்க வேண்டும்' என் னுங் குறி யுள ரா யிருந்தார்கள் என்னும் விஷயத்தையும் எடுத்துக் காட்டி, அவர்களையும் மற்றும் பல வடியார் கூட்டம் அன்பர் கூட் டங்களையும், அதற்குச் சம்மதிக்கச் செய்து, அடியார்கண் முதலிய பலர்கட்கும் விருந்து செய்வித்து மூல குரு வதிட்டாநங்கட்கு அபிடேக வாராதனை நைவேத்திய முதலியவற்றையும், பூஜைகளையும் சிறப்புடன் செய்து, மற்றும், பல விழாக்களுடன் இராம பிரா னுடைய பட்டாபிடேகம் போன்று, சுபாநு வருடம் மார்கழி மாதம் சுப முகூர்த்தத்தில் அங் குள்ள வேதாந்த போதகாசிரியர் பீடத் திருத்திப் பூசித்துப் போற்றி வாழ்த்தி வேதாந்தோபதேசஞ் செய்யு மாறு செய்து, ஞாநாசாரியாராக விருந்து, 'வீர சேகர ஞாந தேசிகர்' என்னுந் திரு நாமத்துடன் விளங்கி வரும்படி ஏற்பாடு செய்தனர்.

இங்ஙனம், பொன்னம்பல ஞாந தேசிகர் இராம பிரானுக்குப் பட்டாபிடேகஞ் செய்வித்து விட்டு அவர்க்கு அருந் துணையா யிருந்த இலக்குமணரைப் போன்றும், முருகக் கடவு ளாகிய பட்ட பாதரை யனுப்பிப் பரமசிவனே சங்கராசாரிய வடிவமாய் வந்து தனித் துணையா யிருந்த தன்மையைப் போன்றும், தான் முன் கூறிய படியே அவ் வீர சேகர ஞாந தேசிகர்க்கு உயிர்த் துணையா யிருந்து மடாலய விவகாரத்தை வகித்து வந்தனர். இங்ஙனம், இருவரும் அப்பரையுஞ் சம்பந்தரையும் போன்று, ஒருவர்க் கொருவர் பகுமாநத் துட னிருக்கும் போது, இவ் வீரசேகர ஞாந தேசிகர் 'பொன்னம்பல ஞாந தேசிகர் எவ்வாற்றானுந் தம்மினும் மேம்பட்டார்' என்னும் பய பக்தியால் அவர் முன்னிலையில் வேதாந்த பாட மோதுவிக்கச் சிறிது அஞ்சி யிருக்க, அது கண்ட வவர், 'அந்தோ! ஈ தென்னை வியப்பு! குரு ஸ்தாநத்தி லுள்ளார் குரவர்க் கொப்பார்' என்பது சாத்திரத் தும், ஆன்றோரிடத்தும் குவலய மெலாமும் விளங்க 'நீவிர் இங்ஙனங் கருத லெற்றுக்கு' என்று தேற்றி, பாட மோதுவிக்கச் செய்தனர். என்னை? 'அப்ப ரெங் குற்றார்' என 'தமது சிவிகை சுமக்கும் பெருமையை யுற்றேன்' எனத் திடீ ரென விறங்கிப் பணியு முனம் தா மவரைப் பணிந்த சமய குரவர்களின் ஒழுக்க முறை போன்று, இவ் விருவரும் ஒருவர்க் கொருவர் பாராட்டிக் கொள்ளும் மாறுட்ட மின்றிய பண்புப் பெருக்கந் தா னென்னே! இவ் விருவரானும் வகுக்கப் பட்ட வேதாந்த மர பொழுக்கே கோயிலூரைச் சார்ந்த பல விடங்கட்கும் பல வடியார்க்கும் ஞாநக் கொடி யேறுங் கொளு கொம்பானது. இவ்வண மாகப் பொன்னம்பல ஞாந தேசிகர் கோவி லூர் மடாலயப் பாரத்தைச் சில நாளில் இவ் வீர சேகர ஞாந தேசிகரையே யேற்கும்படி செய்து விட்டுத் தம திடஞ் சென்றனர்.

---



## 18-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் குரு ஸ்தாநம் வஹித்தபின் மடத்தினை விருத்திக்குக் கொண்டுவரல்.

பின்னர், இவர் இரவின்கண் இரவியாற் கொடுத்த வொளியை அக்கினி யேற்று விளங்கு மாறு மடாலயப் பாரங்களை யேற்றுக் கொண்டு, முன் னிருந்த விராக திடத்தையே தமக்கு ஊன்று கோலாகக் கொண்டும், மூல குரவர்களின் கிருபையைப் பிடியாகக் கொண்டும், திரு நெல்லை யம்மையாரின் சீரருளை வலியாகக் கொண்டும் திடமாய் நின்று செலுத்திக் கொண்டு வந்தனர். இங்ஙன மாகுங்கால் முப்பத் தாறு தத்துவங்களை வேதாந்த மதத்திற் கென் றுணர்த்தவும், முப் பத்தாறுந் தத்துவமே பரமாந்மா வென வுணர்த்தவும் இவர்க்கு முப்பத் தாறுவ தாண்டு நிரம்பியது. இவ் வண மிவர் அவதார மூர்த்தியா மாதலின், இவர்பால் அருள் வலி, ஞாந வலி, பாட மோதுவிக்கும் வலி, வியவகார வலி முதலிய பல சத்திகளுந் தழைத்து விளங்கின. சிறிது காலத்திலேயே பாடஞ் சொல்லன் முதலிய உபதேசிக்கு முறைகளிலும், இட முதலிய வற்றைக் காத்து விருத்தி செய்யும் மார்க்கங்களிலும், தெய்வ வழி பாடு தேசிக வழிபாடு முதலியவற்றினும் யாவரினுஞ் சிறந்து தத்துவ ஞாநச் செல்வராய்க் குரவர் மணியாய் விளங்கினர். தமிழ் நா டாள வந்த தனிப் பெரு முதல்வனுக்குத் தக்க பே ராற்ற லுள தாதலுந் தகாததாமோ? பின்னர்த் தம தாசிரியரின் அதிட்டாநத் தினை அரிய கருங் கல்லால் உரிய சித்திரங்கள் விளங்கக் கல் லிரத மாக்கியும் அதன் சந்நிதியில் யாளி முதலிய பல அணி வெட்டுக் கா னிறுத்திய விணி லெட்டிய மகா மண்டப மியற்றியும், இந்திரன் முதலிய வந்தா தேவர்களும் வந்து வாழ விரும்பும் விந்தை பல பல வமைந்த "கைலாசக் கொட்டகை" எனப் பெய ரிய உல்லாசச் சபை யொன் றமைத்தும், பிரமன் முதலிய பலர்களும் வந்து பிரம விசாரஞ் செய்ய, வெட்கத் தக்க "பிரம சபை" எனத் திரு நாம

முள்ள பிரம விசார மண்டப மியற்றியும். அடியார் கணங்க ளணி யணியா யிருந் துண்ண மகேசுர பூசை யாற்றுதற் கோர் "குரு பூசைக் கட்டு" என்னும் நூறு கான் மண்டப மியற்றியும், நெற் குவியல்கள் பல நிரை நிரையாய்க் கொட்ட, "நெற் களஞ்சியம்" என்னும் பண்டக சாலையும், மொட் டறு மலர்கள் கொய்து முட் டிலா தரற்குச் சாத்தக் கட் டொணு மாலைகள் சுட்ட, "புஷ்ப மண்ட பம்" என்னும் பூ மாலை புனையுஞ் சாலையும், பவக் கடல் தாண்டப் பக்குவிகட் கென்றும் உவப்பிலாத் தத்துவ ஞானச் சேது வென்னத் தே றுறு தாண்டப் பாலங்களை யியற்றியும், சீருறு மடியரும், தாரணி யோர்களும் நீ ராடி யருந்தக். காவி யாடை வேட்போர்க்குச் சரத மாய் வெள்ளாடை களையும் ஆசிரியர் போன்று, காவி யாடை யாக்கி யளிக்குஞ் செங் நிற நீர் நிறைந்த ஊருணி(தடாகத்து)க்கு கல் அணை கள் கற் படித் துறைகளை யாற்றியும், மற்றும், பல அடியார்கள் வசிப்பதற்குத் தனித் தனி ஆசிரமங்களைச் செய்தும், அறிந்தவர் கட்குப் பெரும் பதமாகவும் கண்டார்க் கொரு கைலாசம் போன்றும், அடைந்தார்க் கரிய வைகுண்டம் போன்றும், பேணினர்க் கொரு பிரம லோகம் போன்றும் விளங்கக் கோவிலூர் மடாலயத்தை அமைத்து விருத்தி செய்தனர்.

---

## 19-வது அத்தியாயம்.

### ஜகத் குரு சங்கராசார்ய சுவாமிகளின் சிருங்க கிரி மடம் ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளைக் கோவிலூருக்கு அழைத்து வரலும், சாரதாம்பாள் கோவில் கட்டத் திரவியம் ஈதலும்.

இங்ஙனம், விளங்கிக்கொண் டிருப்ப, ஸ்ரீ சிருங்க கிரி சங்கரா சார்ய சுவாமிகள் மடாதிபதி ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள் இராமேசுவர யாத்திரையாக வந்த சமயத்தில் சாதுர்மாஸ்ய விரதத்திற்கு இராமநாத புரத்தில் தங்கி யிருந்தார்கள்.



அந்தச் சமயத்தில் சிதம்பரம் பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகள் கோவிலூருக்கு எழுந்தருளி வந்து, 'ஸ்ரீ ஜகத் குரு சிருங்ககிரிச் சுவா மிகளைக் கோவிலூருக்கு வழக்கம் போல் அழைத்துவர வேண்டும்' என்று வீர சேகர முநிவரிடம் கூறினர். அதற்கு வீரசேகரனும் ஒருப்பட்டு, அப் பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகளையே இராம நாதபுரம் போய் அழைத்து வரும் ஆறு வேண்டிக் கொள்ள, பொன் னம்பல ஞாந தேசிகரும் பல அடியவர் கூட்டத்துடன் இராமநாத புரம் சென்று ஸ்ரீ ஜகத் குரு சிருங்க கிரி சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளைச் சிஷ்டாசாரப்படி தரிசித்து வணங்கிப் போற்றி ஏத்தி நின்றனர். அப்பொழுது, சிருங்க கிரிச் சுவாமிகள், 'வந்த காரணம் என்னை' என்று வினவ, அதற்குப் பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகளும், "தங்களுடைய சொந்த ஆசிரம மாகிய கோவிலூருக்கு எழுந்தருளி வந்து தெரிசநங் கொடுத்துத் தங்கள் சிஷ்யர்களாகிய எங்களை ஈடேற்றல் வேண்டும்" என்று பிரார்த்தித்து நின்றனர். இன் னுரை கேட்ட முன் னுரைச் சிருங்க கிரிச் சுவாமி களும், 'உமது கருத்துப்படி ஆங்கு வருதும்' எனக் கூறி, பொன்னம் பல ஞாந தேசிக ஸ்வாமிகள் கூடவே கோவிலூருக்கு எழுந்தருளி வந்தனர். கோவிலூருக்குச் சமீபம் வந்ததும் வீர சேகர முநிவர், பல சாது சமாகமங்களும், பரிவாரங்களும் சூழப் பல விருதுகளுடன் ஸ்ரீ ஜகத் குரு சுவாமிகளை நமஸ்கரித்துப் பல சாதுக்களும் பல்லக் கைத் தாங்கிக் கோவிலூருக்கு அழைத்து வந்து கொற்றவாளீசுவரர் ஆலயத்தில் வீற்றிருக்கும்படி செய்தனர். அங்கு ஒரு மாத காலம் வரைத் தங்கி யிருந்தார்கள். ஆசாரிய சுவாமிகட்குப் பிரதிதிநம் பூசை போஜநம் முதலியவற்றிற்கு வேண்டிய பொருளை அளவின்றிச் செலவு செய்தனர். அது கண்ட சிருங்க கிரிச் சுவாமிகளும், 'சிருங்க கிரியில் உள்ள சாரதாம்பாள் ஆலயத்தைக் கருங்கற் பணியாக ஆக்கு வித்தல் உங்கள் கடமை' எனக் கூறினர். பொன்னம்பல ஞாந தேசிகரும் வீரசேகர முநிவரும் 'அவ்வாறே செய்கின்றோம்' என்று கூறினர். அன்றே, வீரசேகர முநிவரும் நகரத்தார் வசிக்கும் ஊர்

களுக்கு எல்லாம் ஏவலரை அநுப்பி அவர்களை வரவழைத்து ஒன்பது கோவில் நகரத்தாரிடம் ரூ. 30000-ம் வாங்கித் தாங்கள் சில காலம் வைத்திருந்து வட்டியும் அசலும் ரூ. 50000-ம் சேர்த்துச் சாரதாம்பாள் கோவிற் கட்டும்படி சிருங்க கிரி மடத்தில் கொடுத்துக் கோவில் கருங்கற் பணியாகச் செய்து கும்பாபிஷேகமும் சிறப்பாக முடிவு பெற்றது.

---

## 20-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் மாணவர் தன்மை.

இங்ஙனம், சங்கர பகவா னவதாரம் போல் கோவிலூர் மடாலயத்தில் ஞானாசாரியராய் எழுந் தருளி யிருக்குங்கால் பத்ம பாதர் சுரேசுரர் ஹஸ்தாமலகர் தோடகர் என்னும் நான்கு மாணக்கர் வடிவமாய்ப் பிரமன் முதலிய தேவர்களே வந்தது போன்று அறி வொழுக்கங் கல்வி முதலிய தெய்வீக குணங்களும், மோக்ஷ வேட்கை முதலிய தீவிர பக்குவிகளின் ஞாந சாதநங்களும், குரு பக்தி சிவ பக்தி முதலிய நற் குணங்களும், மற்றும், பல அற்புதமான குணங்களும் நிறையப் பெற்றவர்களாய்ப் பல் லாயிர மாணக்கர் நமது வீர சேகரப் பெருமானைச் சர ணடைந்தனர்.

---

## 21-வது அத்தியாயம்.

### வேங்கட முனிவர் சர ணடைதல்.

அத்தகைய மாணக்கர் கணங்க ளுள், நடு நாட்டின்கண் தொண்டை மண்டலத்தில் நல் லாற் றூர்க்குச் சமீபமா யுள்ள 'ரெட்டி பட்டி யாகிய மண்டபப் பட்டு' என்னும் கிராமத்தில் ரெட்டியார் மரபில், 'வேங்கடாசல ரெட்டியார்' என்னும் பெயருடன் உதித்து அந்தக் கிராமத்தில் மற்றைய குடிகளுட் சிறந்து இல்லற நடாத்தி வருங்கால் ஆற்று வெள்ளம் வந்து அவ்வூர்களி லுள்ள விளை நிலங்



களை மணலால் மூட, அவர் இல்லறத்தின்கண்ணேயே பாகவத முதலிய ஞாந நூல்களைக் கிரமமாகக் கற்றுணர்ந்தவ ராதலின் மநத்தில் வைராகந் தோன்றி வெளிப் பற்று உட் பற்றுக்களை விடுத்துக் கையில் இரந் துண்ணும் பாத்திரமும் தண்டமும் எடுத்துக் கொண்டு, பட்டிநத் தடிகளைப் போன்று, சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, நடராஜப் பெருமானை விதிப்படி வழிபட்டு ஆங் குள்ள துறை யூர் மடத்திற் றங்கினர். அம் மடத்தி லுள்ள சாமி நாத சுவாமிகள் பல பசுக்களை வைத்துக் கொண்டு பரிபாலித்து வந்தனர். அப்போது இவர் அதிகாலையி லெழுந்து, அந்தப் பசுக்கட்கு சாணம் எடுத்தன் முதலிய பல பணிவிடைகளைச் செய்து விட்டு, பல நாட் பழகினவர் போன்று பாலையுங் கறந்து சாமி நாத சுவாமிகளிடம் அளித்தனர். அது கண்ட வப்பெரியார், இவரது நற் குணங் கண்டு களித்து அங் குள்ள பொன்னம்பல ஞாந தேசிகர் மடாலயத்திற் சேர்த்தனர். அங் குள்ள இராஜாச் சாமிகள் இவரது ஆரியக் கல்வி யாற்றலையும், அறி வொழுக்க முதலியவற்றையும், முமுட்சுத் தன்மையையுங் கண்டு கோயிலூர்க் கநுப்பினர். அங்ஙனமே வந்து, கோவிலூரின்கண் ஞாந சூரியராய் விளங்கிய வீர சேகரப் பெருமானைச் சர ணடைந்து பணியுங் கால், கையாற் றடவிக் கருணை நோக் களித்து, அடிமை கொண் டருளி, 'இவன் பிரம சபைக்கண் நம தருகில் இருக்கட்டும்' எனத் திருவாய் மலர்ந் தருளினர். அவ்வணமே பிரம சபைக்கண் தம தாசிரியருக்கு ஆத்தப் பணி முதலிய பணிவிடைகளைச் செய்து கொண்டு அங் குள்ள வேதாந்த நூல்களை விரைவில் ஆசிரியர்பால் விதிப்படி கேட்டுத் தெளிந்து சிந்தித்து, மற்றும் பல வட மொழி நூல்களையும் முற் பிறப்பின் வாசனை வலியால் எளிதிற் கற்று, யாவரினும் நுண்ணிய பொரு ளுணரும் தெள்ளிய மதியினராய்ப் பிறர்க்குப் போதிக்கு முறையிற் பே ராற்ற லுடையாராய், இரண்டாம் பாட மோதுவிக்கும் மேம்பாடு பற்றி, 'இரண்டாம் பாட சுவாமிகள்' எனத் திரு நாமம் பூண்டு ஆசிரியர்க் கோர் அருஞ் சேய் போன்றும், அடியார்கட்

கோர் அன்னையைப் போன்றும் சிவந் முக்த தசையில் விளங்கி, யாவர்களாலும் புகழப் பெற்று, முனிவரனுய்த் தனிப் பரனுய் விளங்கிய 'வேங்கட முனிவர்' என்னும் பெரியார் அவதார புருடரே என்பதிலு ஐயமுண்டோ?

---

## 22-வது அத்தியாயம்.

### வெள்ளி யுங்கிரிச் சுவாமிகள் சர ணடைதல்.

அன்றியும், பாண்டி நாட்டில் எட்டைய புரத்தில் 'சிந்தலக் கரை' என்னும் ஊரில் நாயகர் வம்சத்தில் உதித்து, வைணவ மதத்தை யவலம்பித்துப் பகவானுக்கு நவ வித பக்திகளையும் வழுவாது செய்து கொண்டு, பரோபகார முதலிய நற் குணங்களை யுடையராய் இல்லற நடத்திக் கொண் டிருந்து, முற் பிறப்பின் புண்ணிய பரிபாகத்தால் வைராக்கிய முதிக்கப் பற்றுக்களை விட்டுத் துறந்து, கோவிலூருக்கு வந்து வீர சேகர மாதவரின் சரணத்தை யடைந்து, பாத சேகரனுய் ஆசிரியர்க்கு ஆத்த முதலிய பணிகளைச் செய்து விதிப்படி ஞாநாசாரியரிடம் வேதாந்த நூல்களைக் கேட்டுத் தெளிந்து சிந்தித்து நிட்டை யுடையராய், இரண்டா முறை வேதாந்தம் போதிக்கும் சமர்த்தராய், பிறர்க்கு வந்த துன்பங்களைத் தமக்கு வந்தது போற் பாவித்து, அதை நீக்குதற்கு பல விதமான வுபாய தற்பரரா யிருந்து கொண்டு வந்த 'வெள்ளை யப்ப சாமி' என்னும் வெள்ளி யங் கிரி முனிவர் என்பாரும் திரு வருட் டிற முடையா ரென்பதிலுஞ் சிறிது மையப்பா டுண்டோ?

---

## 23-வது அத்தியாயம்.

### அண்ணுமலை ஞாந தேசிகர் சர ணடைதல்.

மற்றும், 'தேனி பட்டி' என்னும் கழனி வாசல் வைசிய நகரத்தின்கண் தந வைசிய ராகிய, 'அருணுசலஞ் செட்டியார்' என்னும் வைசியோத்தமர்க்கு அபிமாந புத்திரனுய்த் தோன்றி, பொருளீட்டிக் கொண்டு, புகழுடன் இல்லறம் நடாத்தி வருங்கால் முன் செய்த புண்ணிய விசேடத்தால் விராகந் தோன்றி, பற்றைத் துறந்து, கோயிலூரை யடைந்து, வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளைச் சரண் புகுந்து, ஆசிரியர் பணி யியற்றி, அவர்பால் வேதாந்த நூல்களை முறைப்படி கேட்டுத் தெளிந்து சிந்தித்து, வட மொழியுங் கற்றுச் சாத்திரங்களைப் போதிக்கு முறையில் வல்லுநராய்த் தமிழ்க் கல்வியு முடையராய் அடியார் திலகராய் விளங்கி யிருந்து, பின்னர், வீர மா முனிவ ராக்ஞையின் படி மடத்திற்கு அதிபதியாக வருபவருமாகிய 'அண்ணுமலை ஞாந தேசிக சுவாமிகள்' என்பவர் அள விலாப் புண்ணியவான் என்பதுஞ் சொல்ல வேண்டுமோ?



---

## 24-வது அத்தியாயம்.

### சுப்பய்ய ஞாந தேசிக ஸ்வாமிகள் சர ணடைதல்.

அஃதன்றியும், கொங்கு நாட்டின்கண் கோயம்புத்தூர்க்கு அருகி லுள்ள 'வேட்டைக் காரன் புதூர்' என்னும் கிராமத்தில் மருதாசலம் பிள்ளைக்கும் அம்மணி யம்மாளுக்கும் உதித்து இளமைக்கண்ணே ஆங்கிலங் கற்று ஔடதப் பணியராய் அரிய பெரிய புகழுடன் இல்லின்க ணிருந்து, முற் பவத்திற் செய்த சத் கருமங்களின் பயனுக விக்கிநேசப் பெருமானின் விமல வருள் விளக்கால் விராகத்தை யடைந்து, பற்றைத் துறந்து வெளிப் போந்து, திருக் குற்றுலத்தை யணுகி, ஆங் குள்ள விக்கிநேசப் பெருமானை வணங்கித் துதித்துக் கொண்டு வருங்கால்,கோவிலூர் நமது வீர சேகரப் பெருந் தகையாரின் மாணுக்கர் பழையூர்ப் பட்டி, 'அருணுசல சுவாமிகள்' என்னும் பெரியார் அருண கிரியார்க்கு அறு முகவன் வந்தாங்கு எதிர்ப்பட்டனர். அவர், இவரது நற் குணங்களைக் கண்டு, 'நீவிர் கோயிலூர் என் றேேர் வேதாந்த மடாலய ஸ்நாத மிருக்கிறது; ஆண்டுச் செல்விரேல் நலமாம்' என் றுணர்த்த அவ்வுரை கேட்டு அவ்வணமே கோயிலூரை யடைந்து, அங் குள்ள வீர சேகர விமல

மாதவ வித்தகருடைய திருப் பாதத்தைச் சரணடைந்து மாணாக்க ராகி, அங்குப் பிரம சபைக்கண் ஆசிரிய ரருகி லிருந்து ஆத்தாதிப் பணிகளை யன்போடு செய்து அருள் பெற்று வேதாந்த நூல்களை விதிப்படி பாடங் கேட்டுத் தெளிந்து, நிட்டை யுடையராய் வாராணசி யடைந்து, வட மொழி கற்றுத் திட முறு வித்து வானாய் விவேகாநந்த சுவாமிகள் போன்று பிரசங்கஞ் செய்து, உலகத்தை யீ டேற்றுபவராய்ப் பல அடியார்கட்கும், அன்பர்கட்கும் வட மொழி தென் மொழி நூற்களைப் போதிக்கு மாசிரியராய், நியாய சந்திரராய் வேதாந்த பாஸ்கரராய் 1 சிவ மஹிம்ந ஸ்தோத் திரம் செய்புள். 2 வேத சார சமுத்தரணம் (த்ரோடகம்) செய்யுள். 3 வேதாந்த டிண்டிமம் செய்யுளும் உரையும். 4 ஆத்ம வித்யா விலாசம் செய்யுள். 5 வேதாந்த சாரம் வசநம். 6 உபதேச சஹஸ்ரி வசநம். 7 கண்டந கண்ட காத்தியம் வசநம். 8 வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம். 9 நியாய காரி காவலி செய் யுளும், நியாய சித்தாந்த முக்தாவலி உரையும். 10 ஆத்ம புராணம் வசநம். 11 பகவற் கீதை கூடார்த்த தீபிகை வசநம். 12 பஞ் சாக்ஷர பாஷ்யம் வசநம். 13 லகு யோக வாசிட்டம் உரு-ம் செய் யுளுக்கு 'வீரசேகரம்' என்னும் உரை. 14 கெங்கா லஹரி செய்யு ளும் உரையும். 15 தர்க்காமிருதம் வசநம். 16 பிரஸ்தாந பேதம் வசநம். 17 பர்த்ருஹரி வைராக்ய சதகம் செய்யுள். 18 பஞ்சதசி 5 பிரகாணம் செய்யுள். 19 சித்தாந்த லேச சங்கிரகம் வசநம். 20 கணேச கீதை சில செய்யுளும் உரையும். 21 32000 வாசிட்டம் சில வசநம் என்னும் அள வற்ற வட மொழி வேதாந்த நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழ் நாட்டுக்கு அளித் துக் கொண்டும், 1 ஸ்தோத்திரங்கள், வீரசேகர மாலை. 2 கொற்றவா ளீசுவரர் அந்தாதி. 3 திரு நெல்லை யம்மை அந்தாதி. 4 பாரி ஜாத வனேசர் பதிற்றுப் பத்தந்தாதி. 5 அமிர்த வல்லி மாலை. 6 சிக்கல் செல்வ விநாயகர் செம் பொன் மணி மாலை. 7 சொர்ண புரீசுவரர் மாலை. 8 சௌந்தர்ய நாயகி மாலை. 9 சௌந்



மெய்யப்ப சுவாமிகள்
பொருள் வைத்த சேரி மடம், சிக்கல்.



மெய்யப்ப சுவாமிகள்

பொருள் வைத்த சேரி மடம், சிக்கல்.

தர்ய நாயகி பிள்ளைத் தமிழ். 10 மதுரை அரசப்ப சுவாமிகள் சரிதம். 11 ஈப்போ தண்டாயுத பாணி மாலை. 12 சங்கா த்வே ஷியரின் வாய்ப் பூட்டு இரண்டு பாகம் வசநம் முதலிய அநேக ஸ்தோத்திரச் செய்யுள் தமிழ் நூல்களைச் செய்து கொண்டும், வித்வற் மணியாய் விளங்கும் 'சுப்பய்ய சுவாமிகள்' என்னு மறிஞரும், விக்கிநேச ருடைய திரு வருள் பெற்ற விமல மாதவர் என்பதையுஞ் சொல்ல வேண்டுமோ?

---

## 25-வது அத்தியாயம்.

### மெய்யப்ப ஞாந தேசிகர் சர ணடைதல்.

அது தவிர்த்தும், 'நாட் டரசன் கோட்டை' என்னும் வைசிய நகரத்தில் தந வைசியர் குலத்தில் மாத்தூர்க் கோவிலைச் சேர்ந்த சுப்பிரமணியன் செட்டியார், நாச்சம்மை என்பவர்களின் வயிற்றி லுதித்து, 'மெய்யப்ப செட்டியார்' என்னுந் திரு நாமத் துடன் வளர்ந்து, இளமையிற் கல்வி கற்றுத் தமது குல மரபுப்படி கொழும்பு சென்று, வெள்ளி நாணயக் கடையில் இருந்து திரவிய மீட்டி வருங்கால், ஆங் குள்ள பெரியா ராகிய வொரு யோகீசுவரர் பால் முன் செய்த புண்ணிய பலத்தால் நல் லுணர் வுதிக்கச் சென்று, வழிபாடு செய்து கொண்டு வரும் நாளில், கோயிலூ ராதீநத்தைச் சேர்ந்த மதுரை 'குட்டையா' என்னும் தத்துவ ஞாநியின் மடா லயத்தின் றலைமை பூண்டவரும், ஆசிரியர் மரபில் அன்பு மிக்கவரு மாகிய 'கண்ணப்ப ஞாந தேசிகர்' என்னும் தந வைசிய மரபுப் பெரியா ராகிய வான்றோர் மடாலயத்திற் கூதியர் தேட வேண்டிக் கொழும்புக்குச் சென் றிருந்தனர். அந்தப் பெரியாரைக் கொழும்பி லுள்ள தந வைசியர்களின் ஆவண வீதியிற் றரிசித்து வணங்கி நிற்க, இவரது நற் குணங் கண்ட வவர், 'நீ எம்முடன் ஊருக்கு வருகுதி' என் றருள், அவ்வணமே ஆங் குள்ள கணக்குகளை யொரு வாறு தீர்த்துக் கொண்டு, சிறிது திரவிய விலாபத்தோடு அந்தக்

கண்ணப்ப சுவாமிகளுடன் மதுரைக்கு வந்து, அவருடன் இருந்து வருங்கால், சில வடியார்களுடன் யாத்திரை செய்யத் துணிந்து காசி முதலிய பல புண்ணிய க்ஷேத்திர யாத்திரை செய்து கொண்டு சிதம்பரத்தை யடையுங்கால், அங்குள்ள பொன்னம்பல ஞாந தேசிக சுவாமிகளின் மடாலயத்திற்குக் கோயிலூர்ப் பெருமானுகிய வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளும் எழுந்தருளி வந்திருந்தனர். அத் தருணம், அப்பரும் சுந்தரரும் போன்று அங்குள்ள இரண்டு தத்துவ ஞாந ரத்நங்களைத் தரிசிக்க சித்தத்துட் கொண்டு, தமது சுற்றத் தாரும், கோயிலூர் மரபில் வேதாந்த நூ லோதியவரும், சீவந் முக்தர் சிறப்புப் பெற்றவரும், சிருங்க கிரி மடாலயத்தில் சாரதா வாலயத்திற்குத் திருப் பணி செய்விக்க முயன்று முடிப்பித்தவரும், செகத் குரு பீடம் சங்கராசார்ய சுவாமிக ளவர்களால் அன்பு பாராட் டப் பட்டவரு மாகிய, நாட்டரசன் கோட்டை தந வைசியர் குலம் பஞ்சாக்ஷர அய்யா அவர்கள் முன்னிலையில் வட மொழியி லுள்ள பகவற் கீதை சம்புட வளவு கொண்ட புத்தகத்தையே கையடை யாகக் கொண்டு அவ் விருவர்களையுந் தரிசிக்க, நமது வீரசேகரப் பெருமானிடம் இந்த மெய்யப்ப சுவாமிக ளுடைய நற் குணங்களைப் பல வாறு எடுத்து அந்தப் பஞ்சாக்ஷரய்யா வவர்கள் தெரிவிக்க, அவரை அருள் கூர்ந்து அடிமை கொண் டருளினர்.

பின்பு, வீர மா முநிவருடன் கோவிலூருக்குச் சென்று ஆசிரி யர்க்கு ஆத்த முதலிய பணிவிடைகளைச் செய்து வேதாந்த நூல்க ளோதிக்கொண் டிருக்குங்கால், சிக்கல் மடம் சட்டை யப்ப ஞாந தேசிக சுவாமிகளின் திரு வடியைச் சர ணடைந்து வேதாந்த சூடாமணி வரை அவர்பா லோதி யங் கிருக்க, அவர்கள் விதேக கைவல்யத்தை யடைந்த பின்னர், கோயிலூரின்கண் விளங்கும் இத்தகைய குரவர் கோமானுகிய வீர சேகர ஞாந தேசிக சுவாமி களைச் சர ணடைந்து வாசிட்டம் வரை ஞாந நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை யுடையராய் வீரசேகரானுர் ஆணை யைத் தழுவித் தமது குரு ஸ்தாநத்தில் பேரன் புடையராய்த் தாமப்



பணி செய்து கொண்டும், இப்போதுஞ் செய்து கொண்டு மிருக்கும் ஆன்றோர் முறை வழுவாத வொழுக்க சீல ராகிய மாரி முத்துச் சுவாமிகளால் வீர மா முநிவருடைய திரு வாணையைத் தழுவிச் சிக்கலுக்குத் தலைமையரா யிருக்கும்படி யேற்படுத்தி அம் மடாலயத் தலைமை பூண்டு ஞாநாசிரியரா யிருந்துவரும் 'மெய்யப்ப ஞாந தேசிக சுவாமிகள்' என்னும் தண்ணளியாரும் எண் ணிலாப் புண்ணியத்தா லுதித்தவ ரெனக் கூறலு மிகையாமோ?

---

## 26-வது அத்தியாயம்.

### நாராயண சுவாமிகள் சர ணடைதல்.

மற்றும், கேரள தேசத்தி லுதித்துக் கேரள பாஷை கற்று, இன் னிசை யுணர்ந்து, நன்னய முறையில் இல்லத்தி லிருந்து, முற் பவத்தின் நற் கருமப் பயனுல் விராக மடைந்து பாண்டி நா டடைந்து, கோயிலூரைச் சார்ந்து, நமது வீர சேகர வித்தக மணி யைச் சரண் புகுந்து, ஆத்த முதலிய பணிவிடைகளிற் பேரன் புடையராய்ச் செய்து வேதாந்த நூல்கண் முழுவதையும் விதிப்படி கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை யுடையராய், இரண்டாவது முறை பாட மோதுவிக்கு மாற்ற லுடையராயும், ஆசிரியர் பாரம் பரியத்திலும் அள விலா வன்புடையவராயும், தம்மை யடைந்தார்க்கு வேதாந்த நூல் போதித்துக் கொண்டு தியாக பராயு மிருந்துவரும் 'நாராயண சுவாமிகள்' என்னு மான்றோரும் புண்ணியப் பெருக்கால் வந்த தெள்ளியோர் என்பது மிழுக்காமோ?

---

## 27-வது அத்தியாயம்.

**மண்டலேசுவரரும், உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்த காசாரியரும், பரசமய கோளரியாரும், திருப் பூவண மடாதிபதியும் ஆகிய ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் வந்து சர ணடைதல்.**

மற்றும், தேவி கோட்டை என்னும் வைசிய நகரத்தின்கண் தந வைசியர் மரபில் இராம சாமி செட்டியார் உமை அம்மை என்பவர்களின் வயிற்றில் விய வருடம் உதித்து இளமையிற் றமிழ் கற்றுத் திரவிய மீட்டிப் பிரமசாரியாய் இல்லின்க ணிருந்து முன் செய்த நல் வினையால் விராக மடைந்து, பராபவ வருடம் கோவிலூர் வந்து, வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளைச் சர ணடைந்து, ஆத்த முதலிய பணிகளை யாற்றி, வேதாந்த நூல் கற்றுப் பின்னர் ஆசாரியர் ஆணை பெற்று, வாரணாசி யடைந்து வட மொழியில் வியாகரணம் தர்க்கம் சாங்கியம் யோகம் பூர்வ மீமாஞ்சை உத்தர மீமாஞ்சை உபநிஷத் பாஷ்யம் பகவற் கீதா பாஷ்யம் சித்சுகி அத்வைத சித்தி கண்டந கண்ட காத்தியம் முதலிய அரிய நூற்களை எளிதிற் கற்றுப் பெரிய பண்டிதராய் ஏனை மதத்தினரைச் செயிக்கும் வாக் வன்மை யுடையாராய் வந்து, திருப் பூவணத்தில் ரௌத்திரி வருடத்தி லோர் பெரிய வேதாந்த மடத்தினை ஸ்தாபித்து அநேகம் மாணவர்களை யுடையவராயும், மதத் தாபநப் பிரசங்க மாரியைப் பொழிபவராயும், ஞாநாசாரியராயும், உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகராயும், மண்டலேசுவரராயும், பர சமய கோளரியாராயும், ஸ்வ மத ஸ்தாபகராயும், வேதாந்த விஜயக் கொடி நாட்டியவராயும், சைவ சித்தாந்த மதத்தினரை அடக்கியவராயும், வட மொழியில் உள்ள 1 மண்டல பிராஹ்மணோபநிஷத், ராஜ யோக பாஷ்யம். 2 வியாச தாத்பரிய நிர்ணயம். 3 நைஷ்கர்ம்ய சித்தி. 4 ஸ்வாராஜ்ய சித்தி. 5 வேதாந்த சஞ்ஞா. 6 ஈசாவாஸ்யோபநிஷத் சங்கர பாஷ்யம். 7 வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா (வேதாந்த



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்
திருப் பூவண மடம்.

அகராதி). 8 பேத திக்காரம் சத்கிரியை உரை. 9 வேதாந்த பரிபாஷை (வசநம்). 10 யுக்திப் பிரகாசம் (வசநம்). 11 ஹரி மீடே ஹரி தத்வ முக்தாவலி உரை. 12 வேதாந்த சித்தாந்த முக்தாவலி (வசநம்). 13 தர்க்க சங்கிரகம் (அங்கம் பட்டியம்) தர்க்க சங்கிரக தீபிகை உரை. 14 விசார சாகரம் 6—7 தரங்கம் (வசநம்). 15 பஞ்ச தசி (வசநம்). 16 விவேக சூடாமணி பதவுரை முதலிய பல நூல்களைத் தமிழ் மொழியிற் செய்தும், அநேகம் தமிழ்ச் செய்யுட்கு 1 சீடாசாரம் பால போதினி உரை. 2 புக்தி சதகம் 50 செய்யுள், தோத்திரப் பிரகாச உரை. 3 கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை. 4 சசி வர்ண போதம், பதார்த்த பாஸ்கரன் உரை. 5 மஹா ராஜா துறவு, மநப் பிர சாதினி உரை. 6 வேதாந்த சூடாமணி, சந்தோஷ தாயினி உரை. 7 பிரஹ்ம கீதை, தாத்பரிய தீபிகை உரை. 8 தூஷண நாவுக் கோர் சூட்டுக் கோல் (வசநம்). 9 பொ. முத்தையா பிள்ளை கடா வை யடக்கும் கட்டாரி வசநம். 10 மஹாத்ம சரிதாமிருதம் வசநம் முதலிய உரை யியற்றியும், இயற்றிக் கொண்டும் மஹானுக லௌகீக வைதீக காரியங்களில் குசாக்ர புத்தியுடையராய் விளங்கும் ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளும் அரிய தோர் அவதார புருட ரென்பதும் பிரத்தியக்ஷ மாகலின் ஐயப்பாடாமோ? விரிவாக அறிய விரும்பின் காசிகாநந்த ஸ்வாமிகள் சரிதம் தனியாக இருக் கும் புத்தகத்தில் காண்க.

---

## 28-வது அத்தியாயம்.

### கோவிலூர் மடாதிபதி மஹா தேவ ஞாந தேசிக ஸ்வாமிகள் என வழங்கும் அண்ணாமலைச் சுவாமிகள் வந்து சர ணடைதல்.

மற்றும், தேவி கோட்டை என்னும் வைசிய நகரத்தில் தந வைசியர் குலம் 'சுப்பிரமணியன் செட்டியார்' என்னும் வைசியோத் தமரின் வயிற்றிற் றோன்றித் திரவிய மீட்டி, நன் மனையுட னில்

லற நடாத்தி முற் பவத்தி னற் கரும மிகுதிப்பாட்டின் பயனால், விராக மடைந்து இல்லைத் துறந்து கோயிலூர் வந்து, வீர சேகர ஞாந தேசிகப் பெருந் தகையாரைச் சர ணடைந்து, ஆசிரியர்க்குப் பணிவிடைக ளாற்றி, விதிப்படி வேதாந்த பாடங் கேட்டுத் தெளிந்து சிந்தித்துப் பின் கோயிலூர் ஆதீநத்தில் குருவாக வந்த அண்ணாமலை ஞாந தேசிக சுவாமிக ளாகிய ஆசிரியர் ஆணைப்படி திரு வண்ணா மலையிலுள்ள ஈசாந்ய தேசிகர் மடத்தில் தலைமை பூண்டு, பின்னர் அண்ணாமலை ஞாந தேசிகருடைய நிர்வாண கால மாகிய சித்தார்த்தி வருடத்தில் கோயிலூர் மடாலயத் தலைமை பெறுபவரு மாகிய ‘மஹாதேவ ஞாந தேசிக சுவாமிகள்’ என வழங்கும் அண்ணாமலைச் சுவாமிகளும் அரிய பெரியார் என்பதும் ஐயப்பாடாமோ?

---

## 29-வது அத்தியாயம்.

### சிவாநந்த சுவாமிகள் சர ணடைதல்.

மற்றும், வேதாரணியத்தில் அகம்படியர் குலத்தில் சாமித் தேவர் மதுரம்மை என்பவர் வயிற்றி லுதித்து, இளமையில் தமிழ் கற்று, முன் செய்த நல் வினைப் பயனால் இளமையிலேயே பல பெரியார்களை அடைந்து, யோகாப்பியாச முதலியவற்றை மநந் தாய்தாம் வண்ணம் பழகிப் பின்னர்ச் சண்முகக் கடவுளின் தண் ணருளால் கோயிலூரை யடைந்து, வீர சேகரப் பெருமானார் திரு வடியைச் சர ணடைந்து, அன்போடு இவ் வெந்தையார்க்கு ஆத்த முதலிய பணிகளைச் செய்து கொண்டு, விதிப்படி வேதாந்த நூற் களைப் பாடங்கேட்டுத் தெளிந்து சிந்தித்துக் கொண்டு, வாராணசி சென்று விதிப்படி பரம ஹம்ச சந்நியாசம் பெற்றுக் கொண்டு, எந்தையாரின் திரு வடித் திறத்தால் வட மொழியில் வியாகரணம் தர்க்கம் முதலிய கருவி நூற்களும், பூர்வ மீமாஞ்சை முதலிய உபாங்க நூற்களையுங் கற்று, உத்தர மீமாஞ்சை நூற்கள் அத்வைத சித்தி கண்டந கண்ட காத்தியம் முடிவா யுள்ளவற்றையுங் கற்



றுணர்ந்து, அங் குள்ளார்க்கு மோதுவித்துக் கொண் டிருக்க, இவ் வீர சேகரப் பெருமானார் திரு வருள் ஈண் டிழுத்து வர, இங்குக் “கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் கற்றுமறி வில்லாத கர்மத்தை யென்சொல்லு வேன்மதியை யென்சொல்லு வேன் கைவல்ய ஞாந நீதி, நல்லாரு ரைக்கிலோ கருமமுக் கியமென்று நாட்டுவேன் கர்ம மொருவன் நாட்டினு லோபழைய ஞாநமுக் கிய மென்று நவிலுவேன் வடமொழியிலே, வல்லா னொருத்தன்வர வுந்திரா விடத்திலே வந்ததாய் விவகரிப்பேன் வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியில் வசநங்கள் சிறிதுபுகல்வேன், வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைகற்ற வித்தை” என்னும் தன்மையை யுடைய வடியேனையும் வீர சேகரப் பெருமானுடைய மாணக்கர் தணங்களுள் ஒருவனாகச் சொல்வார்கள்.

---

## 30-வது அத்தியாயம்.

### வேறு பல மாணக்கர் சர ணடைதல்.

இங்ஙனமே, நடேச சுவாமிகள் கிஷ்ணாநந்த சுவாமிகள் வைத்திலிங்க சுவாமிகள் அருணாசல சுவாமிகள் இராம சாமி சுவா மிகள் சிவப்பிரகாச சுவாமிகள் முதலிய பல்லாயிரம் துறவற அடி யார்களும், காரைக் குடி வெங்கடாசலய்யா, சுப்பிரமணிய அய்யா, குட்டை யையா, குமரப் பையா, மெய்யப் பையா, மாணிக்கய்யா கோட்டையூர் அழகப் பையா தேனி பட்டி அடைக்கப் பையா திருவளர் சோலை கோவிந்தய்யா முதலிய பல்லாயிரம் இல்லற அடி யார்களும் நமது வீர சேகரனார் திரு வடித் தாமரையி லுள்ள தத்துவ ஞாநத் தே னுண்டு பிரமாநந்தாநுபவிகளாகிய மாணக்கர்க ளாவார்கள். இவ் விதமாக வீர சேகரனார் மாணக்கர்களையும், அவர் களின் கல்வி அறிவு வொழுக்கம் ஞாநம் தவம் தயை முதலிய நற் குண வைபவங்களையும் என்னால் எடுத்துக் கூறவு மெளிதாமோ? அது பற்றியே, “தொண்டர்தம் பெருமையைச் சொல்லவொண் ணாதே” என்றார் பெரியாரும்.

ஈண்டுச் சிறப்பான்மை சொல்லு மிடத்து, வைசிய நாடே வானுலகமாம். கைலாசமே கோயிலூராம். மூல குரு மூர்த்திகளே மும்மூர்த்திகளாவர். எமது வெந்தையா ராகிய வீரேசப் பெருமானே ஆதி சங்கர பகவானவர். வேங்கட முநிவர் முதலிய நால்வர்களும் பிரமன் முதலியோர் அவதாரமாகிய நான்கு மாணாக்கர்கள். ஏனைய மாணாக்கர்களோ தேவர்க ளென்றே சொல்லத் தக்கவர்கள் என்பது எமது துணிபாம்.

---

## 31-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் சந்நிதி முறைகள்.

இங்ஙனம், நமது வீர சேகரப் பெருமானார் பல் லாயிர மாணாக்கர் குழாங்களுடன் கோயிலூர் மடாலயத்தி லுள்ள மூல குரு மூர்த்தங் கட்கு அடியவர் செய்யும் பூஜா காலத்தில் எழுந்தருளிப் பணிந்து வலம் வந்து போற்றி வருங்கால், எல்லா மாணாக்கர்களும் அவ்வாறே பின்பற்றி நடப்பர்கள்; அங் குள்ள வடியார்கள் இயாவரும் 'சிறிது நேரம் பணிவிடை செய்ய வேண்டும்' என்னும் நியம முண்டு; வீண் வார்த்தை யாடுதல் என்பது எட் டுணையு மிரா திருப்பர்கள். அங் குள்ள சந்நியாசிகட்குச் 'சுவாமிகள்' எனவும், பிரமசாரிகட்கும், இல் லற மாணவர்கட்கும் 'ஐயா' எனவும் வழங்குவார்கள். உண் ணுங்கால், எமது வீரசேகரப் பெருமானார் நடுவி லிருக்கவும், இரு புடைகளிலும் முன்னர் பெரியாரும், பின்னர் சிறியாரு மாக இருக்க அதிலுஞ் சிறியார் அந்ந முதலியன படைக்க, ஒவ்வொரு பிடி யந்நத்திற்கும் ஆந்ம சிந்தநம் பண்ணிக் கொண்டு, 'தான் கருத்த னல்லன் போக்தாவு மல்லன்' எனச் சிந்தித்துக் கொண்டே தேவர் கள் அமுதத்தைப் பங்கிட் டுண்ணு மாறு, "செவிக்குண வில்லாத போது சிறிது வயிற்றுக்கு மீயப் படும்" என்றபடி சிறி துண்டு, உண்டகலை கழித்துப் பூ மாலை புனைவர்கள். அவ் வணமே பல



மாணாக்கர் புடை சூழத் தேவாலயஞ் சென்று வலம் வந்து பணிந்து போற்றிக் கொண்டு, அங் குள்ள வேதாந்த போதக மண்டப மாகிய பிரம சபைக்கண் எந்தையார் ஆசிரிய பீடத் தமர்ந்து, பத்மாசந மிட்டு யோக பட்டை யணிந்து, நீல மேனியும் சிவந்த வாடையும் சிரித்த முகமும் திரு வரு ணோக்கமும் பெருத்த தொந்தியும் உடையராய்த் தெக்ஷிணாமுகத் தமர்ந்து விளங்க, கற்கு மாணாக்கர்கள் சர்வாங்கமுந் தரை தோயப் பணிந் தெழுந்து கை கட்டி நிற்க, இரு வென ஆசிரியர் சந்நிதியில் பத்மாசநத்தி லிருந்து கொண்டு தமக் கெதிரில் நாற் காற் பீடங்களின் மேல் பட்டுப் பரிவட்டஞ் சுற்றி வைத்திருக்கும் வேதாந்த புத்தகங்களை யவிழ்த்து வைத்துக் கொண்டு கை குவித்து இருக்குங்கால், 'சொல் லெனச் சொல்லத்' தெய்வம் வாழ்த்தித் தேசிகரை வாழ்த்திய சிந்தனையுட னிருக்கப் 'படி யென வுரைக்க' நூலை யெடுத்து விரித்து தமது பாடத்தை தண்மையாய்ப் படிக்க வெகுளாது விரையாது கேட்போ ருளங் கொள்ளு மாறு வகுத்தும் தொகுத்தும் வள முற விரித்தும் வேதாந்தம் போதிக்குங்கால், வந் தடி பணிந்து அந்தமி லன்பர்கள் சிந்தனை யிருத்திச் சித்திரப் பாவையைப் போன்று, பெரியார் முன் னிருக்கச் சிறியார் பின் னிருக்கக் கணங் கண மாய் உட்கார்ந்து கேட்டுக் கொண் டிருக்கு முறைகளைக் கண்ட பலர்கள், 'தக்ஷிணா மூர்த்தியோ' என்றும், 'சங்கரா சாரியரோ' என்றும், அல்லது குரவர்க் கெலாங் குரவ னாகிய 'சாமி நாதனோ' என்றும், கணங்களுக் குத் தலைவராகிய 'கணேசப் பெருமானோ' என்றும், 'அகத்திய முநிவரோ' அல்லது 'பிரமனோ' அல்லது 'விஷ்ணு வடி வாகிய வியாச முநிவரோ' என்றும் பல வாறு ஐயப்பா டடைந்து, இவர் நமது தமிழ் நாட்டை யுய்விக்க வந்த சிவாவதாரச் செல்வ ராகிய 'வீர சேகர ஞாந தேசிகரோ' என்று நிண்ணயிப்பார்கள். அங்ஙன முணரினும் 'சிவ குருவே' யெனத் தேறிப் போற்றுவார்கள். இத் தகைய நம தாண்டவனை 'எம்மைத் தரிசிக்கச் செய்த தவம் எத் தன்மையதோ' என்றும், இதைக் 'கூட்டுவித்த திரு வருள் எத்

தன்மைத்தோ' என்றும் வாழ்த்துவார்கள். கோவிலூரை யடைந்து, மடாலயத் திருந்து, ஆசிரியரைப் புகுந்து, 'வேதாந்த நூ லுணரின் ஞாநம் வரும்' என்னுங் கூற்று அறியாமை யுடையதா மன்றோ? யாம் இதைத் தெரிசிக்கினே, அறி வுடையார்க் கன்றிப் பாமரர் கட்கும், விலங்குகட்கும் தத்துவ ஞாந முண்டா மென்போம் என் போம். அது பற்றி யன்றோ, 'கோவிலூர் போன மகிஷமூந் திரும் பாது' என்னும் மூ துரையு நிகழ்ந்தது. மற்றுங், கேட்டோர்க்கும் பயமும் பக்தியும் மநோ ரம்யமும் உண்டாக்கு மென்னில், அதை யடைந்து, இவ் வீரேசப் பெருமானது சரண் புகுந்து, வேதாந்த மோதி, அநுட்டித்தவர்கட்கு வீடு பே றுண்டா மென்பதுஞ் சொல் லவும் வேண்டுமோ? கோவிலூர் மடாலயம் தென் னாட்டிற் கோர் காமதேநு வென் றுணர்க.

---

## 32-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் கோவிலூர்ச் சிவாலயத் திருப் பணி செய்தல்.

அஃதன்றியும், சைவ சமயத்தை வளர்த்துச் சமரச நன் னிலையைத் துலக்கி, மெய் யநுபவத்தைப் பெருக்கிச் சிவாத் வைத உய்வைச் செய்து, நமது தமிழ் நாட்டை யீடேற்ற வவதரித்த எந்தை மாதவனு ராகிய வீர சேகர ஞாந தேசிக வித்தகனுர், கோவிலூரி லுள்ள சிவ க்ஷேத்திரத்தில், தமது மடாலயத் தலைவ ராகிய கோவிலூ ராண்டவர் முதலிய பெரியார்கள் செய்த திருப் பணிகளைச் சீ ருறச் செய்தும், மற்றும், உற்றவர்க் கருளுங் கொற் றவா ளீசர்க்கு அழ கமைந்த அணி வெட்டுக்கா னிறுத்திய சொற் கேட்டான் மண்டபமும், நித்ய விழாக்கள் செய்யப் புத்தியு மறிய வொண்ணுச் சித்திர விசித்திரங்கள் முற்றிலு மமையப் பெற்ற உத்சவ மண்டபமும், ஆநந்தத் தாண்டவ மாடும் நட ராஜப் பெருமா னுக்குச் சபா மண்டபமும், தீர்த்த மண்டபமும், துவஜ ஸ்தம்பமும்



விசித்திர சித்திர வேலைகள் அமைந்த நாற் புர அணி வெட்டுக்கான் மண்டபமும், நட ராஜ மண்டபமும், நந்தி மண்டபமும், கருத் தொல்லை களைய வந்த வடியர்களின் பெருந் தொல்லை விலக்கி யாளும் திரு நெல்லை யம்மையார்க்குப் பச்சை மலையே யொரு ஆலயமா யெழுந்தாற் போன்று, அடுத்ததன் நிழ லாடும் கருங் கல்லா லிழைத்த கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபங்களும், நவ ரத்தின மிழைத்த தொத்த நாற் பக்கப் பிரகாரமும், மகா மண்டபமும், சபா மண்டபமும், விமாந கோபுரமும், மடைப் பள்ளியும், திரு மதில்களும், வந்நி விநாயக ராலயமும், இராஜ கோபுர முதலிய வற்றைப் புதுப்பித்தலும், மற்றும், மட வளாக வீதியும், அக்கிரார வீதியும், நட ராஜப் பெருமான் சந்நிதியின் வெளியில் ஆநந்த நிர்த்தந வில்லும், ரதம் போன்ற ஔதாக் கொட்டகைகளும், மற்றும், பல சிவாலயத் திருப் பணிகளுஞ் செய்தும், தங்க அங்கி கள் வெள்ளி யங்கிகள் நவரத்நத் திரு முடிகள் பதக்க முதலிய பல வித நவ ரத்ந மிழைத்த திரு வாபரணங்கள், வெள்ளியாற் செய்யப் பெற்ற அலங்கார தீப முதலிய சோடசோபசாரப் பூசா பாத்திரங்கள் வெள்ளி யிடபங்கள் வெள்ளி விமாநங்கள், மற்றும், பல காம தேநு முதலிய வாகநங்கள், சுருட்டி முதலிய விருதுகள், மற்றும், பல சாமக் கிரியைகளையும் தமது பே ரருள் வலியால் கண் டவர் வியக்கக் கேட்டவர் மகிழக் கோவிலூர்த் தேவாலயத்தைத் 'தெட்சிண கைலாசம்' என யாவரும் விதந் தோதவும், மறை யோதல் ஆராதனை செய்தல் வாத்திய முழங்கல் பாராயணஞ் செய் தன் முதலிய முறைமைகளையும் வகுத்து, உத்ஸவக் கிரமங்களையுந் தொகுத்து,அவ் வாலயத்திற்குக் கும்பாபிடேகஞ் செய்தற் பொருட்டு ஊரையும் வீதியையும் பல வாருய் அலங்கரித்து, ஆலயத்திலும் பல வகைக் கதலி நட்டுப் பலவகைத் தோரணங்கள் தூக்கி, லஸ்தர் குளோப்பர் முதலிய பல் லாயிரம் விளக்குகள் போட்டு, யாக சாலை யமைத்து, ஆகம விதிப்படி அருங் குண்டங்க ளமைத்து, ஐ வகை யக்கினியில் இரு பத்து நால்வர் முதலிய சிவப் பிராமணர்களால்

வேத கோஷம் நாத கோஷம் கீத கோஷம் தமிழ் மறை யோசை தக்க பல பூசையுடன் ஹோமஞ் செய்து, யாக முடித்து, வீர சேகரனரின் தீர யோக வலியால் வான் மழை பொழிந்து, நீர் வளம் நிறையச் சிருங்க கிரியி லிருந்து ஸ்ரீ சங்கர பகவன் பீடாலங்கார ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகளும் தெரிசிக்க வர் திருக்கக் கலி ருதுகக்குச் சரியான கீலக வருடம் சித்திரைத் திங்கள் மக உ குரு வாரம் சப்தமி திதி உத்திராட நட்சத்திரம் மிதுந லக்கிநத்தில் கும்பாபிடேகத்தைக் குறை வற முடித்துப் பல் லாயிரம் வைசியர் கணங்கட்கு அறு சுவையுடன் நால் வகை யுண்டிகளையும் விருந் திட்டு, மற்றும், அந்தணர்க் கெலாம் தட்சணை யும், போசநமும் குறை விலா தளித்து, அடியவர்க் கெல்லாம் உணவும் உடையும் நிரம்ப வீந்து, வறியர்க் கெல்லாம் அந்ந மிட்டு, அறிஞர்க் கெல்லாம் நிரம்பிய சம்பாவனை செய்து, வாதவூ ரடிகள் பெருந் துறையிற் செய்தது போன்றும், அமர ரெலாம் குமர வேளுக்குச் செய்த கோலம் போலும் கும்பாபிடேகத்தைப் பூர்த்தி செய்து, அன் றிரவில் பஞ்ச மூர்த்திகளையும், பஞ்ச வெள்ளி வாகநங் களில் வீதி யுலாச் செய்து முடித்துத் திரு நெல்லை யம்மையின் பெருங் கருணை வரப் பெற்று, அருள் வலியால் சிற்ப நூல் வல்லுந ராய்ப் பலப் பல சிவாலயங்களையும், பாட சாலைகளையும், வித்தியா சாலைகளையும், மடாலயங்களையும், பசுச் சாலைகளையும் ஆங் காங் கெழுந் தருளிச் சிற்ப நூற்படி அமைப்பித் தருளி, வைசிய நாட்டுக் கோர் பூர்ண மதி போன்றும், வேதாந்த மரபுக் கோர் ஆதித்தனும், உலகத்தவர்க் கோர் வான் மழை போன்றும், அடியவர்கட் கோர் அன்னையைப் போன்றும், துறவிகட் கோர் துணைக் காரணமாய்த் தத்துவ வேந்தராய்த் தத்துவங்க ளாகிய வணி படையோராய் ஞாந போகந் துய்த்துப் பிரமாநந்த திருப்தராய்த் தத்துவ ஞாநச் செல்வராய் இருந்து வந்தனர்.

---



## 33-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசீர்வாதம் பெறல்.

இங்ஙனம், ஞாந வேந்த ராகிய சநகன் போன்று விவகார தசைக்கண்ணும் பிரம நிட்டை யுடைய ராகிய முனிவ ராய், விவகார வேளை யெலாஞ் சமாதி பெற்று, ஞாநாசாரிய நவ ரத்ந மாய் விளங்கி வரும் போது, ஆதி சங்கர பகவத் பாதாசாரியரின் பத்து நாமம் நான்கு மடம் நான்கு சாகை நான்கு மகாவாக்கியம் என்னு மரபு வகையில் மிகச் சிறந்த சிருங்க கிரி மடாலயத்தின் முப் பத்து மூன்ருவது பட்டம் பெற்ற "ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நர சிம்ம பாரதி சுவாமிகள்" என்னுஞ் சகத் குரு சங்கர பீடத் தலைவர், இப் பெரியாரது ஞாநம் தவம் கல்வி நடை சிவ பக்தி அடியார் பக்தி சமய பக்தி மரபின் பக்தி முதலியவற்றில் மேம்பா டுடைய தன்மை யைக் கண்டு, கோவிலூருக்குச் சிவிகை சகடம் சங்கம் முதலிய பல வகை ஆசாரிய விருதுடன் வந்து, கோயிலூர்த் திரு நெல்லை யம்மையாரின் கும்பாபிஷேகத்தினைத் தெரிசித்து, அள விலா மகிழ்ச்சி யுற்று, 'இங்ஙனம் செய்தல் மநிதற்கு அருமை அருமை' யெனப் புகழ்ந்து, அங் குள்ள பாட சாலையிற் றங்கி, அவ் வாண்டு நடத்த வேண்டிய சங்கர ஜயந்தியைக் கோவிலூரின் பல நலங்களைக் கண்டு, அங்கு நடாத்தி முடித்துக் கோவிலூர் வேதாந்த மடாலயத் தில் அமைக்கப்பட்ட பிரம சபைக்கு ஒரு திநம் பல வைபவங்க ளுடன் எழுந் தருளி வந்து, நமது வீரசேகரனரால் அரியணைமீ தமர்த்தி யாராதனை செய்யப்பட்டு மகக் களிப் புற்று, அவ் வாசிரியர் கோமானல், முன்னர்ச் சாரதாம்பாள் ஆலயத் திருப் பணிக்கு உதவி யாக இருந்த, தம்முடன் சகபாடியான கானுகொத்தான். சா. ராம. சிதம்பரய்யா மூலமாகச் சிருங்க கிரிக்குத் திருப் பணியை முடித்து வைத்தமைக்கு அன்பு மேற்கொண்டு, இப் பெரியார் மீது வட மொழியில் தமது வித்தியாபீட சாஸ்வதியைத் தியாகித்து, "சுர

தாதியர் புடை சூழ்தரு, மரு மாதவர் பெற பூவொளிர், கர வீணை கொள் கவின் மாதவ, ஞாந மீந்துகா வொரு வீரனை" என்பதாகும் ஆசீர்வாத பஞ்ச ரத்ந மாகிய ஐந்து சுலோகங்களால் இவ் வீர சேகர ஞாந தேசிகரை வாணியானவள் காப்பாற்றி வரும்படி வாழ்த்துக் கூறப்பட்டது.

அதனை அன்போ டேற்று அவர்கட்கு வேண்டிய சத்காரங் களைச் செய்து, மற்றும் பல வாழ்த்துக்களையும் பெற்றுச் சிவர் முக்தராய் வாழ்ந்து வந்தனர்.

இங்ஙனம், சுபாநு வருஷம் மார்கழி மாதம் முதல் விரோதி இருது வருஷம் வைகாசி மாதம் வரை இருபத் தேழரை வருஷம் மடாதி பத்யம் வஹித்து விளங்கி வந்தன ரென்ப.

---

## 34-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் நிக்கிரகச் செயல்.

இப்படி நிகழுங் கால், ஹேவிளம்பி வருடத்தில் கோவிலூர்த் திரு நெல்லை யம்மை திருப் பணிக்காக, "பினங் முதலிய நாட்டில் கொண்டு வேலை செய்து வரும் வைசியர்களின் கடையில் ஏஜண்டா யிருப்பவர்களிடம் ஒரு மாதச் சம்பள மாகிய திரவியத்தினை வாங்க வேண்டும்" என்று கருதிக் கோட்டை யூர், அழகா புரி, ராம. பி. அரு. அருணசலம் செட்டியார். புது வயல், நச் சரக்கு விற்கும், அ. மு. வீர. வீரப்ப செட்டியார். ஆரு வயல், உ. வீர. சேவகன் செட்டியார். காரைக் குடி, முரு. வீர. வீரப்ப செட்டியார் ஆகிய நால் வரையும் பினங்குக்கு அநுப்பிச் சம்பள வரிப் போடுவதற்கு ஏற்பாடு செய்து கொண் டிருக்க, இடையில், காரைக் குடி, மு. ராம. சொக்க லிங்கம் செட்டியாரும், அ. மு. க. முத்தையா செட்டியாரும் ஆகிய இருவரும் "பினங்கில் உள்ள நம் இருவர் கடைகளிலும் சம்பள வரியை ஒப்புக் கொண்டு விட்டால், பினங்கு முதலிய மலாய் நாடு முழுவதிலும் உள்ள வைசியர்கள் கடைகளி லிருக்கும் ஏஜண்டு கள் எல்லாரும் ஒரு மந முடையராய்க் கோவிலூர்த் திரு நெல்லை யம்பாள் திருப் பணிக்கு வரி யெழுதி முற்றுப் பெறச் செய்வார்கள்" எனக் காரைக் குடியில் பேசிக் கொண்டார்கள்.



அச் சமயத்தில், காரைக் குடி, ராம. ஆத. ஆதப்ப செட்டியார் மகன் ராமன் செட்டியார் என்பவர் கோவிலூர் அம்பாள் திருப் பணிக்கு விக்நம் செய்யக் கருதி, "இவ் விருவர் சொற்படி பினங்கு முதலிய இடங்களில் நடக்குமா? பார்ப்போம்" என்று நினைத்து, ஆவேசத்தோடு, பினங்கில் உள்ள தமது கடை ஏஜண்டு உய்யக் கொண்டான் சிறு வயல் ராமன் செட்டியாருக்கு, "கோவிலூர்த் திரு நெல்லை யம்பாள் திருப் பணிக்குத் திரவிய சம்பாதநத்தின் பொருட்டு அவ்விடம் வந்திருக்கும் நால்வரின் கருத்துப்படி முற்றுப் பெறாமல் போகு மாறு இடை யூறு செய்யும்படி அவ்விடம் கடை ஏஜண்டுகள் யாவருக்கும் சொல்" என்று தந்தி கொடுத்து முற்றுப் பெறாது விக்நம் செய்தார். அவ் வுரை பெற்ற உய்யக் கொண்டான் சிறு வயல் ராமன் செட்டியார் பினங்கில் நகர வைசியக் கூட்டத்தில் வந் திருந்து கொண்டு, "ஏஜண்டுகள் யாவரும் மாதச் சம்பள வரி கொடுக்க முடியாது" என்று மறுத்துக் கூட்டத்தினைக் கலைத்து விட்டார். அதனை நமது வீர சேகர ஞாந தீர சூரனர் செவி மடுத்து, "நெல்லை யம்மன் திருப் பணிக்கு விக்நம் செய்த ராமன் செட்டி நேச மற்று நாச மாவான்" என்று மநத்தில் நினைக்கவே அவரது தார புத்திர தநம் கிரகம் முதலியன யாவும் அழிந் தொழிந்தன.

பள்ளத் தூருக்கு, கோவிலூர்த் திரு நெல்லை யம்பாள் திருப் பணிக்கு வரி யெழுதப் போகுங் காலத்து, பள்ளத் தூரில் நேமங் கோவிலைச் சார்ந்த, முரு. க. கறுப்பன் செட்டியாரிடம் போய் அவரை வீர சேகர ஞாந தேசிகரிடம் வரி யெழுத வரு மாறு

அழைத்ததற்கு, அவர், "சந்நியாசிகட்கு யாசகம் தான் தொழில்" என்று கோபித்துச் சொல்ல, அதை வந்து அன்பர்கள் நமது வீர சேகரனிடம் தெரிவிக்க, 'இவ்வாறு கூறினனோ' எனக் கூறி உடனே சபித்தனர். அந்த நமது வீரேசரது சாபத்தால் கறுப்பன் செட்டியார் தநம் முதலியன யாவும் நஷ்ட மடைந்து துன்புற்றனர்.

கழநி வாசல் 'சின்னச் சாமி' என்னும் ஆசாரி சிவாலயத் திருப் பணிக்கு இடையூறு செய்ய, வீர மா முநிவர், "சிவப் பணியி லிடையூறு செய்தமையின் இனி மேல் ஆலயப் பணிகளி னின்று மகல்வை" என்று திரு வாய் மலர்ந் தருள, அவன் அவ்வாறே எவ் விதப் பணிக்குந் தகுதி யற்றவனாயினன். இங்ஙனம், மற்றும் பல நடந்து வந்தன. அவற்றினை 'விரிக்கில் நூல் விரியு' மென்னும் பயத்தானும், 'பார்ப்பவர் பய முறுவர்' என்னும் பயத்தானும், 'விரிக் காது சுருக்கினும்' என உணர்க.

## 2-வது சந்நியாச காண்டம் முற்றிற்று.

---

# 3-வது—முத்தி காண்டம்.

## 1-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் திருக் களர் க்ஷேத்திரம் செல்லல்.

பாண்டிய நாட்டில் வேண்டிய வகையாய் ஆண் டியாவரு முய்யச் சிவ பணி குரு பணி அடியர் பணி அன்பர் பணி முதலிய வற்றையும், தவம் தாநம் தரும முதலிய ஒழுக்கங்களையும், சமாதி நிட்டை தத்துவ ஞாந முதலிய ஞாந மார்க்கங்களையும், நடந்து நடாத்தியும் அறிவித்தும் உரைத்தும் காட்டி யருளிச் செய்து



முடிந்த பின்னர், திரு வாதவூ ரடிகள் திருப் பெருந் துறைப் பணி யை முடித்துக் கொண்டு, தில்லை க்ஷேத்திர மடையத் திரு வுளங் கொண்ட வாங்கு சோழ நா டடையத் திரு வுளத் தெண்ணி யிருந்து வருங்கால், பூசல நாயனாரைப் போன்று மநதினாலேயே ஆலயப் பணி செய்து கொண்டு, "சிவ பெருமான் திரு வுள மிரங்கித் திருக் கள ராலயத்தை யாரைக் கொண்டு பணி செய்து கொள்ளு வரோ" எனப் பாவித்துக் கொண்டு, சோழனாட்டின்கண் 'பூவனூர்' என்னுங் கிராமத்தில், தொண்டை மண்டல முதன்மையார் மரபில், 'இராசு முதலியார்' என ஒருவ ரிருந்து வந்தனர். கலி யுக வரத ராகிய முருகக் கடவு ளன்றோ இந்த யுகத்தில் அரு ளாற்றல் மிக வாய்ந் திருப்பவர் ஆதலினானும், அருணாசலம் உமை என்னு மிருவர்க்கு முதித்த 'வீரன்' என்பது சிவமே யாகித் திரண் டெழுந்த தமது திரு வவதாரத்திற் கொத்ததா மாதலினானும், "வைகாசி விசாக மாகிய தமது விசாக நக்ஷத்திரத்திற் றன் னடியிற் சேர்த்துக் கொள்ள வேண்டும்" என்னுங் கருணையினாலும், திருக் களர் பாரிஜாத வநேசர்க்கு ஆக வேண்டிய பணியைத் தம தருளால் பிதாவிற்குச் சேய் போன்று முடித்துவிக்க வேண்டும் என்னுந் திருக் குறிப்பானும், திரு வோகத்தி லெழுந்தருளிய சுவாமி நாதப் பெருமான் தம தாலயத்திற்குக் கும்பாபிடேகஞ் செய்விக்க வருளினர். அங்கு நமது வீர சேகர ஞாந தேசிகப் பெருமானைத் தந வைசிய நகரத்தார்கள் பிரார்த்தித்து அழைத்துக் கொண்டு வந் திருக்கப் பூவனூர் இராசு முதலியாரும் குமர னருளாற் சென்று சந்திக்குங்கால், சிவ பக்தியிற் சிறந்த அம் முதலியார் நமது வீர சேகரனா ரிடத்தில் சிவ கலையுந் தவப் பொலிவும் அருள் வலியும் விளங்கி யிருப்பதைக் கண்டு, வணங்கிச் "சுவாமி! சோழ வள நாட் டில் அகத்தியர் தவத்தாற் கொண்டு வந்த கங்கையைப் பரசிவன் விநாயகரைத் தூண்டிக் கமண்டலத்தைக் கவிழ்த்த பொழுது பெருகிய காவிரி யாற்று நீர் பாய்ந்து விளையும் நெல் வளமும், மற்றும், தெங்கு கமுகு வாழை முதலிய பல வளங்களையு முடைய

திருக் களர் (களரி) க்ஷேத்திர மொன் றிருக்கின்றது. ஆண்டோ ஆதி சிவனூர் தூர்வாசர் முதலிய அறு பதி னுயிர மிருடி கணங்கட்கு முந் நூற் றறுபத் தைந்து வருடம் பிரம தாண்டவஞ் செய் தருளினர். அது 'பாரிஜாத வநம்' எனப் பெயர் பெற்ற தலம். அங் குள விறைவனே பாரிஜாத வநேசர். அம்பாளோ அமுத வல்லி யம்மையார். மற்றும், வலம் புரி விநாயகர் முதலிய எல்லா மூர்த்தி களு முண்டு. அது சம்பந்த சுவாமிகளாலும், அப்பர் சுவாமிக ளாலும் பாடல்பெற்றது. அவ் வாலயம் மிகவுஞ் சீரணப்பட் டிருக் கின்றது. அந்த க்ஷேத்திரத்தைத் 'தாங்கள் ஒருகால் வந்து தரிசிக் கின் எமது மநோ பாவனை தாமே முடியும்' எனப் பல வாறு வேண் டிக் கொண்டனர். அதைக் கேட்ட நமது சிவத் தொண்டர் கோமா னாகிய வீர சேகரனார் தமது திரு வுள்ளத்தில் பரமாத்மாவை நாடித் திரு வருட் செய லிருக்கின் அவ் வா றாம்; எமக்கும் 'முன்ன ரே சோழ னாட்டில் நால்வர் பாடல் வாய்ந்த தல மொன்று திருப் பணி செய்ய உள்ளத்திற் றேற்றிக் கொண் டிருக்கின்றது' என்று திரு வாய் மலர்ந்து விட்டுக் கோவி லூருக் கெழுந் தருளினர்.

அது முதற் கொண்டு வீர மாதவர்க்கு அவ் வெண்ணம் மநதில் வளர்ந்து கொண்டே யிருந்தது. அதற் கியைய அந்த இராசு முதலியார் சில நாட்குப் பின் கோவிலூருக்கு இம் மாதவரைத் தரிசித்து, முன்னர் முருகக் கடவுள் சந்நிதியிற் கிட்டிய சம்பவத் தை நினைப் பூட்டி, 'அந்தத் திருக்களர் க்ஷேத்திரத்திற்கு எழுந் தருள வேண்டு' மென்று பல வாறு வேண்டினர். அதற் கியைந்து, அமரர் வேண்டு கோட் கிரங்கி யறு முகவன் வந்தது போன்று சுப தினம் பார்த்துப் பிரயாணப்பட்டு, அவருடன் திருக் களர் க்ஷேத் திரத்திற்கு வந்து பாரிஜாத வநேசரையும் அமுத வல்லியாரையும் தரிசித்து மந மிசைந்து, இரண் டொரு போது அங்குத் தங்கித் திருப் பணி செய்யத் திரு வுளங் கொண்டு, அந்த முதலியார்க்கும் 'சிறுபான்மையாகச் செய்யலாம்' எனக் கூறி, அவர் மநதைச் சந்தோஷிக்கச் செய்து கோவிலூருக் கெழுந்தருளினர்.



## 2-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் திருக் களர்த் திருப் பணி செய்தல்.

அதன் பின்னர், முத்தரும் வணங்கும் உத்தமாவதார மாகிய நமது வித்தக முநிவரின் சத்திய சங்கல்பமானது பயனை யீயும் நாள் திரு வருளால் நெருங்கி வர, அந்தச் சிவ பத்தர் தலைவராகிய இராசு முதலியார் பின்னருங் கோவி லூருக்குச் சென்று, இவ் வீரேச முநிவரை, "சிவத் தொண்டிலுஞ் சிவ னடியாரிலுஞ் சிறந்த தேசிக! தாங்கள் வந்து திருப் பணியைத் தொடங்கிவிட் டருளில் பின்னர்த் தமது வலியால் எல்லாந் தாமாகவே நடை பெறும்" என்று வேண்ட, அதற் கிசைந்து சௌமிய வருஷம் ஐப்பசி மாதம் எட ஆகிய சுப தினத்தில் திருக் களருக்கு வந்து, சோம சுந்தர தபதி துணையுடன் பவத்திற் கஞ்சிய பக்குவிகட்கு அபயாத்தங் கொடுத் தாளும் தமது திருக் கரங்களால் உளி கொண்டு கொத்தித் தச்சு வேலை யாரம்பித் தருளி, வசந்த மண்டபத்தில் சுவாமி அம்மன் முதலிய மூர்த்திகளை பால ஆலய ஸ்தாபநஞ் செய்து, நாலு காலப் பூஜை நடக்கும்படி செய்வித்தருளினர்.

அது முதற் கொண்டு, திருக் களரை யாள வந்த தெய்வீகத் திரு வவதாரத் தேசிகோத்தமர் எடுத்த திருப் பணி யினிது முடியு மாறு தம தருள் வலியால் அன்பர்களிடத்தில் வேண்டிய பொரு டேடி இடையுறாது முட் டின்றி, அந்த ராசு முதலியார் அங்கத் தாற் செய்த உதவி கொண்டு, திருப் பணியை நடந்தேறச் செய்து கொண்டு வந்தனர். இங்ஙனம் ஆரம்பித்த மூன் றாண்டுக்குள்ளே யே, அந்தணனாய் வந்து பாரிஜாத வநேசர் கநவிற் சொன்ன குறிப் பின்படி சுவாமி யம்மனுக்குக் கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், நந்தி மண்டபம், பதி னாறு கால் மண்டபம், உட் பிரகார மதில், கணேச கந்தர்க்கு ஆலயங்கள், நட ராஜ சபை, சோமாஸ்கந்த மூர்த்தி யாலயம், இலக்குமி யாலயம் முதலியவற்

றைப் புதிதாய்க் கற் றிருப் பணி யாக்கியும், இராஜ கோபுரம் வெளி மதில் முதலியவற்றைப் புதுப்பித்தும், வெள்ளி யங்கிகள், தங்க வங்கிகள், இரத்திநத் திரு முடிகள் முதலிய பல வகையான திரு வாபரணங்களைச் செய்தும், அலங்கார தீபங் கும்ப தீபம் முதலிய தீப வகைகளைச் செய்தும், ஆல வட்டம் சுருட்டி முதலிய விருது களைச் செய்தும், நக்ஷத்திர விளக்கு தோரண விளக்கு முதலிய விளக்குகளைச் செய்தும், மற்றும், விநாயகக் கடவுள் சுப்பிரமணியக் கடவுள் சுவாமி அம்மன் சண்டீசர் என்னும் பஞ்ச மூர்த்திகட்கும் முறையே மூஷிகம், மயில், இடபங்கள் என்னும் பல வாகநங் களை வெள்ளியாற் செய்தும், பிரமோத்சவத்திற்குச் சூரியப் பிரபை சந்திரப் பிரபை பூதன் பூதகி நந்தி அந்நம் கற்பக விருக்ஷம் காம தேநு பல்லக்கு யானை குதிரை கைலாசம் என்னும் வாகநங் களை, அவைகள் உயிருடன் வந்தாங்கு அணி பெறச் செய்தும், அவை யன்றியும், பஞ்ச மூர்த்திகட்கும் ஐந் திரதங்களும், ஐந்து தேர் முட்டிகளும் செய்தும், துர்வாச தீர்த்த முதலிய தீர்த்தங் கட்கு அணைக் கட்டுப் படித் துறைகள் கட்டியும், வேதாந்த மடம் அறுபான் மூவர் குரு பூசை மடம், மூன்று வேதங்கட்கும் பாட சாலைகள் பசு மடம் நந்தந வநம் அகரம், மற்றும், பல மாளிகை களைச் செய்தும், தே ரோடும் வீதிகளைச் சீ ருறச் செய்தும், அந்தத் திருக் களர் க்ஷேத்திரத்தைக் 'கருத் துய ரறுக்குங் கைலாச' மென வாக்கி யருளினர். வருட மூன்றுக்குள் நான்கு லக்ஷம் ரூபாய் செலவு செய்து வாதவூ ரடிகள் போன்று தெய்வ சிற்பி யமைப்பிற் கொப்பச் செய்தற் கரிய சித்திரங்களுடன் திருப் பணி யாற்றிய வீரசேகரனார் அருள் வலி யிருந்த வா றென்னே? யென் னே? அவதார புருடர்க் கன்றி இத்தகைச் செயல்கள் ஏனையோர்க் கெளிதாமோ?

———



## 3-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் அநுக்கிரகச் செயல்கள்.

இங்ஙனம் நிகழுங்கால், கோனாபட்டு என்னும் வைசிய நகரத்தி லுள்ள சு. பழ. பழநியப்ப செட்டியார் என்னும் தந வைசிய ரொரு வர் தமது திரவியம் வியாபாரத்தில் சேதமானது பற்றி, மந நொந்து கொண்டு, நமது வருட் டிரு மேனி யாகிய வீர மாதவரிடம் வந்து முறையிட, அதற் கிரங்கித் தத்துவ ஞாநச் செல்வ மீந்து, தரணி யைத் தழைக்கச் செய்த தவச் செல்வர் "பொருள் வரு மஞ்சற்க" எனத் திரு வாக் களிக்கச் சில நாளுக்குள் அவ் வருள் வாக்கின் படியே போன திரவிய மூதியத்துடன் வந்துவிட்டது. அது கண்ட அவ் வைசியர், இவ் வீரேசப் பெருமானிடம் வந்து சாஷ் டாங்கமாய்ப் பணிந்து, "சுவாமி! தமது வாக்கின்படியே வந்த திரவியத்தைத் தமது திரு வடிக்கே அர்ப்பணஞ் செய்கின்றேன்" என வாக் குறுதி கூறி, இவரது விதேக முத்தியின் பின் அவ ருடைய புத்திரன் நோ யடைய, அதைக் கநவிற் சென்று தீர்க்க அப் பதினையாயிர ரூபா யாகிய பொருளை யீந்தனர். ஆத்தன் குடி வேங்கடாசலஞ் செட்டியார் தம்பி அழகப்ப செட்டியாருக்கு, அவருடைய தமையனைக் கோவிலூருக்குத் திரவிய சம்பாதநத்தின் பொருட்டுத் தொலைகளுக்கு அநுப்ப, இங்கு நிச்சயித்த மணத்திற் குரிய கந்நிகை தவறி விட வீர சேகரரது அநுக்கிரகத்தால் அவர் விவாகம் நிறை வேறியது.

இத்தகைய பல வித வநுக்கிரகச் செயல்களும், முற் கூறிய நிக்கிரகச் செயல்களும் இக் காலத்தில் அவதார புருடரிடத் தன்றி மற்றையரிடத்து நிகழுங் கொல்லோ?

———

## 4-வது அத்தியாயம்.

### திருக் களர்க் கும்பாபிடேகம்.

இங்ஙனம், திருக் களர் க்ஷேத்திரத்தைத் தருக்கிளர் தண் சோலை சூழ்ந்த தெட்சண கைலாசம் போற் செய்து, அவ் விறைவ னருளை முன்னிட்டுக் கும்பாபிஷேகஞ் செய்ய வெண்ணி, இராசு முதலியா ராகிய பக்த சிரோமணியின் பே ருதவியால் தலத்தையும், வீதியையும், ஆலயத்தையும் பல வகையாக வலங்கரித்து ஆகம விதிப்படி மாகரும் மகிழ யாக சாலை யமைத்து, நாற் கோண குண்ட முதலிய ஹோம குண்டங்கள் பல வகுத்து, சமித்து வகைகள் கொண்டு சிவத் துவிசர்களால் சிவ யாகஞ் செய்வித்து, வேத முழக்கம் கீத முழக்கம் நாத முழக்கம் தமிழ் மறை முழக்கம் பஜனை முழக்கம் முதலிய பல முழக்கங்களோடு கூட வாத்தியங்கள் முழங்க, கலி ௫௲௫௰-க்குச் சரியான விரோதி கிருது வருடம் சித்திரை மாதம் ௨௰௨ வியாழக் கிழமை பூர்வ பக்ஷம் ஷஷ்டி திதி சித்த யோகம் மிதுந லக்நம் புநர் பூச நக்ஷத்திரங் கூடிய சுப தினத் தில் மகா கும்பாபிடேகஞ் செய்து, அந்தணர்க் கெலாம் தட்சணை யீந்து, போஜநஞ் செய்வித்து, அடியார்க் கெல்லா மறு சுவை யந்ந மீந்து ஆடை யளித்துச் சைவர்க் கெல்லாந் தண் ணமு தளித் துத் தாம்பூல மீந்து, வறியார்க் கெல்லாம் உண வளித்து, அறிஞர்க் கெல்லாம் சத்காரத்துடன் தாந மீந்து, பல வைபவங்களுடன் அன் றிரவில் பஞ்ச மூர்த்திகளையும் பஞ்ச வாகநங்களில் திரு வீதி யுலாக் கோலஞ் செய்து, பூர்த்தி செய்து முடித்துவிட்டுக் கோவிலூருக் கெழுந் தருளினர். கும்பாபிஷேகத் தன்று திருக் களர் களரி யாகவே யாவருக்கும் காணப்பட்டது.

---



## 5-வது அத்தியாயம்.

### கோவி லூரில் வீர சேகரனரிடத்தில் கண்ட அருட் குறிப்புகள்.

கோவிலூருக்குச் சென்று, தங் நிலை யுணர்ந்து, முன் பல நடத்தி வந்த பன் னருஞ் சிறப் புள்ள உந்நத வரு ளவதார மாகிய நமது வீர சேகரப் பெருந்தகையார், அங்கு நடாத்தி வரும் திரு நெல்லை யம்மையின் ஆடிப் பூர உத்சவத்தின் முறைகளைப் பல முறையாக வகுத்துச் சிறிதுந் தவறாது ஆராதனை முதல் வீதி யுலா முதலிய வனைத்தையும் ஏட்டி லெழுதுவித் தருளினர். இது "தமக்குப் பின்னர் உத்சவங் குறைவுபடக் கூடா, தென்னும் சிவ நேசமும், தமது ஸ்தாநத்திற்கு வருபவர்க்கு மநக் கிலேச முறா திருக்க வேண்டும்" என்னும் அடியார் கருணையு மா மன்றோ?

மற்றும், அங்குத் தாம் மாணுக்கர்கட்குப் பாட மோதி வந்த வாசிட்ட நூலைப் புண்ணிய பாவநர் கதையில் தீர்க்க தவ னாகிய தந்தை வியோக மாகுஞ் சந்தர்ப்பத்தி னிறுத்துவித் தருளினர். அதனை நோக்கு மிடத்தும் மாணுக்கர்கட் கருள் புரிவதி னின்றும் தமது திரு மேனி வியோகமே குறிப்பிக்கப்பட்டது.

அஃதன்றியும், திருக் களர் பிரமோத்சவத்திற்காகக் கடை முறை வருங்கால் தமது சகடத்திற் பூட்டும் ரிஷபங்க ளிரண்டினை யும் குறைந்த விலைக்கு விற்றுவிட்டு எழுந் தருளினர். இது வோ? 'யாம் இனிமேல் சகட மேற லில்லை' யென்னும் நிலையை யுணர்த்த நிகழ்ந்த திரு வருட் செய்கையாம். இவை அரு ளுடையார்க் கன்றி ஏனைய சாமாந்யர்க்குக் குறித்தற் கெட்டுங் கொல்லோ? இவ்வணம் யாவையும் குறை வின்றிச் செய்து விட்டு உடனே திருக் களருக்கு வுந் தருளினர்.

---

## 6-வது அத்தியாயம்.

### திருக் களர் பிரமோத்சவாரம்பம்.

அங்ஙனமே, தமது நிரியாண காலத்தைக் குறியா லுணர்ந்த பொறி யைந்தும் வென்ற வீர மாதவனுர் திருக் களருக்கு வந்து மிகுந்த துரிதத்துடன் இங்குக் கும்பாபிடேகத்தி லிருந்து, நாற்பத் தைந்தாவது திநத்தில் நடத்த வேண்டிய மண்டலாபிடேகத்தை வைகாசி மாதம் ௰௨ தேதி வெள்ளிக் கிழமை யாகிய இருபத் தைந்தாவது திநத்திலேயே நடத்திவிட வேண்டு மென்று நிச்ச யித்துக் கொண்டு, இராசு முதலியார் முதலிய பல வன்பர்களை யழைத்து இதைத் திரு வாய் மலர்ந் தருளினர். அதைக் கேட்ட வவர்கள் திரு வருளைக்குத் தெரியாதவர்களாய்ச் "சுவாமி! யாங் கள் சொல்வதையும் சிறி தங்கீகரித் தருளல் வேண்டும்" என்று அன்புடன், "யாவரும் திருப் பணியிலுங் கும்பாபிடேகத்திலும் மிக நொந்திருக்கின்றனர். ஆதலின் செல்லும் நாள் நாற்பத் தைந்து நாளுஞ் செல விடின் நலம்" எனத் திரு வருட் கானது இதுவே யென்று அதை யேற்காது அந்த இருபத் தைந்தா நாளிலேயே மண்டலாபிஷேகத்தை முடித் தருளினர். சத்திய சங்கல்பத்திற்குத் தடை யுண்டு கொலோ?

மற்றும், "அந்தத் திருக் களர் க்ஷேத்திரத்தில் நடந் தேறி வரும் சித்திரை மாதப் பிரமோத்சவத்தையும் இத் தருணமே செய்ய வேண்டும்" என அவ் வன்பர்களிடத்திற் கூறி யருளினர். அதைக் கேட்ட இராசு முதலியார் முதலிய தொண்டர்கள் ஈ தென்ன பெரும் வியப்பு! அருட் டிரு மேனிய ராதலின் தமது வருத் தம் நோக்காவிடினும், எமது வருத்தத்தையும், மற்றும், பணியாளர் கள் வருத்தங்களையுஞ் சிறிதும் பாராது 'சுவாமிகள் இங்ஙனங் கூறு வது மென்னே?' என்று மறுத்தற் கஞ்சி வீரேசப் பெருமானிடம் வந்து வணங்கி, "சுவாமிகள் தமது திரு வுள்ளப் பாங்கின்படியே மேல் வருடம் திரு விழாச் செய்யின் மிக நலமாம், யாங்களுங்



கூட விருந்து பல சிறப்புடன் நடத்திவிக்கின்றோம்" என்றனர். அரு ளைக்கிற்கும் மரு ளைக்கிற்கும் மாறுபா டில தாகுமோ? அது பற்றியே, விருத்த வேதியராய் வந்த வரு ளுருத் திரு மேனிய ராகிய விறைவன் நோக்கமும், மரு ளைக்குடைய சுந்தரர் நோக்க மும் மாறுபா டாகித் தடுத் தாட் கொள்ளும் வகையில் வழக்கு நேர்ந்தது. அதைக் கேட்ட அரு ளைக் குடைய வீர சேகரனுர் 'மே லாண்டு நிகழும் விழாவை யா மிருந்து காணல் இலேயோ' எனத் திருக் குறிப் புரை யருளினர். அதைக் கேட்ட இராசு முதலியார் முதலிய பலர்களும் அச்ச முற்று, அங்ஙன மாயின் 'தமது திரு வுள்ளக் கருத்தின்படியே நடத்துக; யாமும் முயற்சிக் கின்றோம்' என்றனர். ஐந் தவித்தா னாற்றலுக்கு அச்ச முருதவரு முண்டு கொலோ? பிருகு முனிவர்க்குக் கூற்றுவனும் பய முற்று னென்ப தறிந்த தன்றே? இங்ஙன மாகவே நமது வீர மாதவ வித்தகர் கோமான் அந்த வைகாசி மாதம் பூர்வ பக்கச் சதுர்த்திதிதி புநர் பூச நக்ஷத்திரங் கூடிய புண்ணிய திநத்தில் திருக் களர் பாரி ஜாத வநேசர்க்கும், அமுத வல்லி யம்மைக்கும் பெரு விழா வெடுத் தற் பொருட்டு இடபக் கொடி யேற்றி யருளினர். "அவ னன்றி யோ ரணுவு மசையாது" என்றபடி யாவையுந் திரு வருட் செயலின் நிகழ்ச்சி யன்றோ? நமது வீரேசனுரிடத்துக் காணப்பட்டவைகளும் என்க.

---

## 7-வது அத்தியாயம்.

### திருக் களர் உத்சவ நிகழ்வு.

இவ்வாறு, இறைவ னருளால் உறையும் பரம பதத் துண்மைக் காலங் கண் டுணர்ந்த வீரசேகா ரிஷியானவர், உத்சவத்தைத் தொடங்க, இராசு முதலியார் முதலிய பல வன்பர்களுடன் முத லென்று படிச் சப்பரங்களிலும், இரண் டாவது திநத்தில் சூரியப் பிரபை சந்திரப் பிரபைகளிலும், மூன் ருவது திநத்தில் பூதன் பூதகிகளிலும், நான் காவது திநத்தில் நந்தி யர்நங்களிலும், ஐந்

தாவது திநத்தில் வெள்ளி யிடபங்களிலும், ஆறாவது திநத்தில் கற்பக தரு காம தேநுக்களிலும், ஏழாவது திநத்தில் திருக் கல்யாணத் தன்று யானை பூப் பல்லக்குகளிலும், எட்டாவது திநத்தில் கைலாச பர்வதம் குதிரை வாகநங்களிலும், சோமாஸ்கந்த மூர்த்தி முதலிய பஞ்ச மூர்த்திகளையும் வீதி யுலா விழாக் கோலஞ் செய்து, ஒன்பதாவது திநத்தில் பஞ்ச மூர்த்திகளையும் பஞ்ச மகா இரதங்களில் எழுந் தருளச் செய்து, அவ் விரதங்களை இராசு முதலியார் முதலிய பல தலைவர்களைக் கொண்டு, பல் லாயிர மாட்களைத் திரட்டிச் சேர்த்து வீதியி லிழுக்கும்படி செய் தருளினர். தாமும் அந்தத் தேர் வடத்தைத் திருக் கரம் பற்றி யிழுத் தருளினர். அன்று இரதம் புரப்பட்டுக் கீழ வீதியின் தென் மூலை சென்று தங்கி விட்டது. அது கண்ட வீர மகரிஷியானவர் அன்று திநமே திரு வுலா வந்து நிலை யடி வராமை கண்டு, மநதிற் சிந்தித்து, இரதத்தி லெழுந் தருளி யிருக்கும் சுவாமி அம்மை முதலிய மூர்த்திகளைத் தரிசித்து வணங்கிக் கொண்டு அங் குள்ள தமது திரு மடத்திற் செழுந் தருளினர்.

---

## 8-வது அத்தியாயம்.

### திருக் களிரி னிகழ்ந்த வருட் குறிப்புகள்.

இங்ஙன மாக, உய்யும் பரிசி னுண்மை யுணர்ந்த வொரு பெரும் ரிஷியாகிய வீர சேகரப் பெருமானார் தமது மடாலயத்திற் றங்கி யிருக்குங்கால், அன் றிரவின்கண் அவரது மாணாக்கரும், அவர்பால் வேதாந்த பாடங் கேட்டவரும், குரு பக்தி அடியார் பக்திகளிற் சிறந்தவரும், சிவ புரித் திருப் பணி செய்தவரு மாகிய கோட்டையூர், க. வீ. சொ. வீ. என்னும் விலாச முள்ள அழகப் பய்யா என்னுந் தந வைசியோத்தமரை அருகி லழைத்து, அவர் பால் 'அன்ப! நாம் சிதம்பரம் நட ராஜப் பெருமானுக்கு வைரக் காதுத் தோடு முதலிய திரு வாபரணஞ் செய்து வைத் திருப்பதுந் தவிர ஏற்படுத்த வேண்டும் எனக் கருதிய, அந்நப் பாவாடைக் கட்டளையை



கானாடு காத்தான், சா. ராம. மு. இராம சாமி செட்டியார் என்னும் தந வைசியத் தலைவரிடம் கோவிலூர் மடாலயத்தில் முறைப்படி பாடங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து எஞ்சாது பழகி அஞ்சா தவைக்கண் மஞ்சு போல் வேதாந்த மொழியும் 'பஞ்சாக்ஷரய்யா' என்னும் வைசியப் பெரியாரைக் கேட்டு வரச் சொல்லி அநுப்பியதற்கவர், 'அதை நடத்துவது சிரம சாத்தியம்' என்று கூறி விட்டமையின், இப்போதே சிதம்பரம் சென்று, அங் குள்ள நமது சிவ காம சுந்தர தீக்ஷதரைக் கண்டு, கோவிலூர் மடாலயத் திருந்து, 'ஏதாகினுமோர் கட்டளை அவசியம் வைத்தல் வேண்டும்' என, 'வார்த்தை யாடிக் கொண்டு வருகுதி' என்று ஆக்ஞாபித் தருளினர். அந்திய நிலைக்கண்ணு மரனாரிடத் துள்ள அநந்ய பக்தியி னருமை தான் என்னே? என்னே?

மற்றும், அங் கிருந்த பூவ னூர் இராசு முதலியா ராகிய சிவ பக்திச் செல்வரை அன் றிரவின்கண்ணே யருகி லழைத்து, 'அன்பு மிக்கீர்! இனி மேல் நீவிரே தேவாலயத் திருப் பணிகளையுந் திரு விழாக்களையும் முறைப்படியே நடத்திக் கொண்டு வருவீராக' என்று திரு வாய் மலர்ந்தருளினர். அதைக் கேட்ட அவ் வன்பர் தவ வலி அருள் வலி ஞாந வலி பொருள் வலி முதலிய பல வாற்றல்களையுடைய தமது திரு வுளப் பாங்கின்படி ஊழியஞ் செய்தற்கு மாத்திரம் அடியேன் உரித்தானவ னன்றி, மற்றும், இத்தகைய செயல்கள் செய்வதற்கு ஆற்ற லில்லேன் அத்தகைய என்பால் இவ்வண மருளிச் செய்வ தழகோ?' என்று போற்றினர். அரு ளவதாரத்திற்குத் தோற்றுங் கருத்து மருளர் மநத்திற் கெட்டுமோ? சிவன் செய லறியாப் பவ பந்தர் போன்று மயங்கினர். மற்றும், 'ஈண்டுக் கற் பூரம் எவ்வள விருக்கின்றது? மிகுதியாக வேண்டற் பாலதாம்' என்று அவர்பால் வினவ, அதற் கவர், 'போதிய கற்பூர மிருக்கின்றது' என்றனர். அதைக் கேட்டு மகிழ்ந் திருந்தனர். என்னை? கால வரை யுணர்ந்து உளத்திற் கொண்ட குறிப் புரை

யன்றே? இவ் வீரேசரது அருட் டோற்றமும், பொரு ணாட்டமும், இரு ளோட்டமும் இருந்த வா றென்னே? யென்னே?

அஃ தன்றியும், அத் தருணத்திலே தாம் முன்னர் கருத்துட் கொண்ட அவ் வாலயத்தின் ஈசான திசைக்க ணுள்ள பூமியை பரிவர்த்தனை செய்து தமது மடத்திற்கே சொந்த மாக்குவித் தருளினர். என்னை? பின்னர் 'தமது திரு மேனியை யடக்கஞ் செய்தற் குரிய பூமி' யென் றன்றே முன்னரே திரு வுள்ளத்திற் றோற்றி யிருந்தது. இவரது பிற் கால நிகழ்ச்சிப் பெருமையும் என்னே? யென்னே?

அதைத் தவிர்த்தும், பல தினமாய்ப் பால் கொடுத்து வரும் 'கிருஷ்ணன்' என்னும் யாதவனிடம் "பணியாள! இன்னும் இரண் டொரு தினந் தான் பால் கொடுக்க வேண்டும்; நீ சுத்தப் பாலாகச் சமயத்தி லீகுவை" என அவனுக்கு ஆஞ்ஞை யளித் தருளினர். இவரது அருட் டோற்ற வியப்பு அடங்கி யிருந்த வா றென்னே? "பாலிற் பால் போல் சிவத்தொடு சிவமாய்க் கலப்பேம்" என் றிருந்த திரு வுளக் குறிப்பின் சிறப்புத் தான் என்னே? யென்னே?

அது கழித்தும், திருக் களரில் பெரு விழா நடக்குங்கால், பாரி ஜாத வனேசருக்குத் தெப்ப வுத்சவஞ் செய்யக் கருதி, அதற்கு வேண்டிய சாமக்கிரிகளையுந் தேடி வைத்துக் கொண் டிருந்த சிவாவ தாரச் செல்வ ராகிய வீர ஞானேசர், இந் நிலைமையை யுணர்ந்து, பின்னர் அன்பர்கள் 'தெட்போத்சவம் என்றைக்குச் செய்யலாம்?' என வினவ, 'அன்பர்காள்! இவ் வருடம் அவ் வுத்சவத்தை நிறுத் தினேம்' என் றருளினர். என்னை? இது காறும் வீர மாதவர் எடுத்த காரியங்களை நடத்தி முடித்து வந்து கொண் டிருக்க, இந்தச் சிறிய காரியத்தைத் தொடங்கித் தாமே நிறுத்தியதும் தந் நிலை யுணர்ந்த தன்மையானே யென்பதினு மையப்பா டாமோ? இன்றேல் 'ஆல முண்டவ னவன்பினே திரிகுவன்' என்றபடி தமக் கொரு துணையாகத் தனி முதற் சிவனே சாந்நித்தியமாய்



நிற்கத் தா மெடுத்த காரியந் தடைப்படுங் கொல்லோ? பிற் செயல்களை முற் செய லாக்கியும், முற் செயல்களைப் பிற் செய லாக்கியும், முருகக் கடவுள் போன்று திரு விளையாடல் காட்டிய வீர மாதவர் திருச் செயல்களு மருட் குறிப்புகளு மிருந்த வா றென்னே? யென்னே?

'இரவில் ரதத்தி லிருந்த ஆபரணங்கள் யாவும் அங்ஙனமே அணியப் பெற்றிருக்குக, அதனை எடுத்து வரல் வேண்டாம்' என்ற ஆஞ்ஞையும் அறியற்பாற்றும்.

இஃ திருக்கவும், முத னுள் தமது மாணாக்கர்கள்பால், 'சீடர் காள்! நாளைக்குப் பூ மாலைகட்குச் செலவு வரும்; ஆதலின், சில மாலைகளை வைத்துவிப்பீர்களாக' என ஆஞ்ஞாபித் தருளினர். என்னை? பா மாலை சாத்தும் பக்குவிகட்கும் 'பூ மாலை சாத்தல் ஒரு தலையா வேண்டற்பாலதே' என்னுந் திருக் குறிப்பின் வலியானும், திரு வாக்கின் றிறத்தானும் என்க. பின்னருந் தமது அதிட்டா னத்தில் சிவ லிங்க வடிவாய் எழுந் தருளிய தமக்கு, தாம் இளமை யில் நட ராஜப் பெருமானுக்குச் சாத்தியதன் பயனாய் இடை யறாது நித்ய குரு பூசை போன்று, பூ மாலைகள் புனைந்து சாத்தப்பட்டு வருகின்றது. அந்தோ! இவரது அற்புதக் குறிப்பி னருள் வலிப் பாடு தான் என்னே? யென்னே?

இவை யல்லாமலும், திருக் களர் சிவாலயத்தினின்றும் ஈசான்ய திசைக்கண் தாம் முன்னர்க் கருத்துட் கொண்டு மடத்திற் காக்கிய பூமியின்கண் சிவ திருப் பணியின் பொருட்டுக் கொண்டு வந்து போட்ட வெள்ளைக் கற்களை இராசு முதலியார் முதலிய பலர்களுந் 'திருப் பணிக் கெடுக்க வேண்டு' மென்று ஆஞ்ஞை கேட்க, 'அந்தக் கற்கள் அவ் விடத்திற் றானே கிடக்குக; பின் பொருகா லொரு பணி யுண் டதற்கு' என்ற திருக் குறிப்பு மொழி யைத் திரு வாய் மலர்ந் தருளினர். என்னை? பின்னர்த் தமது

திரு மேனியைப யடக்கஞ் செய்புங்கால் 'அந்தக் கற்களை யெடுத்து
அடக்கக் குகை கட்ட வேண்டும்' என்னும் அருட் குறிப் பிருந்த
மையின் அவ் வண்ணமே அந்தக் கற்களே அப் பணிக்கே யுபயோ
கிக்கப்பட்டன. அந்தோ! இவ் வீரசேகரப் பெருமானுர் சிவாலயத்
திருப் பணி முதலியவைகளில் எண்ணித் துணிவது போன்று
தமது நிர்யாண காலத்தும் பின் வருபவைகளையு மோர்ந்து தம்
பெருந் தவ வலியால் முன்பு செய்து கொண் டருளினர். இவரது
விவகார வழக்கின் விளக்கந் தான் என்னே? என்னே? வைதிக
மார்க்க நிலைமைகளின் மதி வலி யிருந்த வாறே இலௌகிக மார்க்க
நிலைமை யுணர்வு வலியு மிகுத் திருந்த வாறும் வியப் பன்றோ?
நிட்டையில் சநகாதிகள் போன்றும், விவகாரத்திலும் தத்துவ
ஞாநத்திலும் சநகரைப் போன்றும், சாத்திரத்தில் வியாத முனிவ
ரைப் போன்றும், துறவில் பட்டிநத் தடிகளைப் போன்றும், சிவப்
பணியிலு, மன்பிலும் திரு வாத வூ ரடிகளைப் போன்றும், குரு
பக்தியில் தத்துவராய ஸ்வாமிகளைப் போன்றும், நிர்யாண
தசையில் சம்பந்த சுவாமிகளைப் போன்றும் விளங்கிய நமது வீர
சேகரேசப் பெருமானுர், புகழை விரித்தலும் நாயேற்கு மெளி
தாமோ? இங்ஙனம் விரித்தது அவரது பாத தாமரைப் பாவனை
வலியால் உணர்ந்த வா றுள்ளதாம். இஃதோ வீரசேகரனுர் புக
ழாகிய கடலில் ஒ ரணுத் திவலையா மென் றுணர்க. உள்ள வாறு
புசழக் கள்ள வைம்புலன்கள் வென்ற வெள்ள வேணிப் பெருந்
தகையா ரடியார்க் கன்றோ முடியும். எமது மும் மல நிறைந்த
மந தெங்கே? பெருந் தகையாரது மும் மல மொழிந்த அருள் விளை
யாட் டெங்கே? என்னை? 'அவனரு ளாலே யவன்றாள் வணங்கி'
என் றுங்கு ஈண்டுச் சிறிது மாத்திரம் விரித்தாம்.

---



## 9-வது அத்தியாயம்.

### வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் விதேக முத்தி.

இங்ஙனங் கூறி வந் தாங்கு, மா தொரு பாகனு ராகிய எல்லாம்
வல்ல விறைவன் வடிவ வீர சேகரேசப் பெருமானே, உலக முய்ய
ஒப் பற்ற வீர சேகர ஞாந தேசிக ராக வந் தவதாரஞ் செய்து,
சிவனே குகனுய் வந்தது போன்று, பல திரு விளையாடல்களைத்
தம தருள் வலியால் விளையாடி முடித்துக் கொண்டு, தமது அருண்
மேனியைத் தாமே லயஞ் செய்து கொள்ளு மாறு ஒடுக்கிக் கொள்
ளவும், முருகக் கடவுளே திரு ஞாந சம்பந்தப் பிள்ளை யாக வந் தரு
ளிச் சைவ சமயத்தை நாட்டிச் சிவ ரூப மானது போன்று, தத்துவ
ஞாநப் பிள்ளையா ராக வந்து, வேதாந்த மதத்தை நிலை நாட்டிச்
சிவ ரூபமே யாவதற்கும், சங்கரரே சங்கராசாரியராய் வந்து அத்
வைதத்தைத் தாபித்து உலகத்தை யுய்விக்கச் செய்து, கைலாசத்
திற்கு வெழுந் தருளியது போன்று, தமி ழுலகத்தில் வேதாந்த
தத்துவ ஞாநந் தழைக்கச் செய்து, எண் ணிலாப் பக்குவிகளை
யீ டேற்றி யருளித் தமது அரு ளுரு வாகிய கரு மேனியைக்
கழித்துத் தமது சுவரூப மாகிய சைதந்ய ரூபத்தைப் பெறவும்
திரு வளங் கொண்டு, அந்தத் திருக் களர் உத்சவத்தின் பத்தாவது
திநத்தின் காலையில் இராசு முதலியார் முதலிய பல வன்பர்களிடம்,
"அன்பர்காள்! இன்றைக்கு அவசியம் இரதங்கள் தமது நிலை யடிக்
கண் வந்து விடல் வேண்டு மாதலால் முன் போல் பல கணங் கணங்
களாக ஆட்களைச் சேர்த்து இழுக்கும்படி செய்வீர்க" ளெனத்
திரு வாய் மலர்ந் தருளினர். அவ் வாறே யிழுக்கத் தொடங்குங்
கால் சிவ பணியில் மிக வன்பு கொண்ட வீரசேகரனும் இரதங்க
ணிற்கும் திரு வீதிக் கெழுந் தருளித் தமது திருக் கரங்களால் தேர்
வடத்தைப் பற்றி யிழுக்கத் தொடங்கவும், இரதம் எழுந்து சென்
றோடியது. அதைக் கண் ணுற்ற வீர மாதவனுர் பே ரானந்த முற்று

மலர்ந்த முகத்துடனும், உணர்ந்த குறிப்புடனும், சிறிய நடையுடனும் அங்குள்ள தமது திரு மடாலயத்திற் செழுந் தருளினர். அங்கு வந்து சிறி திளைப் பாறி, அருளாகிய நீராடி, பேரூகிய நீறிட்டுச் சிவாநந்தச் சிற்றுண்டி யுண்டு, பாரிஜாத வநேசர் தேரூர்வதில் நேரிலா வாநந்தம் பொங்கச் சம்பந்தப் பெருமானுர் திருமணத்திற்குச் சென்றது போன்றும், வாதவூரர் மன்றத்திற்குச் சென்றது போன்றுஞ் சென் றருளினர். செல்லுங் கால், இலயக் குறிப்பைக் காட்டுவதாக விரத மானது தெற்கு வீதியின்கண் துர்வாச மா முநிவர்க்கு பாரிஜாத வநேசர் அருள் சுரந்து ஆநந்தத் தாண்டவங் காட்டி யருளிய நட ராஜப் பெருமான் சந்நிதியும், பிரஹ்ம தீர்த்தக் கரையும் ஆகிய முத்தி ஸ்தாநத்தில் சென்று விட்டது. வீர சேகர ஞாந தேசிகப் பெருமானும் சாந்தோக்கிய வுபநிஷதத்தானும், சங்கராசாரியரானும், 'ஆதிப் பரம னடிய ரறுபான் மூவர்' எனப் பெரியாரானும், விதந் தோதப்பட்டது மாகிய அறுபத்து மூன்று நாயன் மார்களின் தொகை யாகியதும், இவரது அறு பத்து மூன்ருவ தாண்டு நிறைவுமா யுள்ளதும் ஆகிய அத்தகைய, கலி நிதுயிங-க்கு விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் உயஎவ சுக்கிர வாரம் விசாக நக்ஷத்திரம் சுக்கில பக்ஷம் திரயோதசி திதி உச்சிப் போ தாகிய சுப திநத்தில் பாரிஜாத வநேசர் இரதத்திற்கு முன் சென்று, பல் லாயிரஞ் சநங்கள் சூழச் சொல்லா மறை யொலி கோஷிக்க, எல்லா வாத்தியங்களு முழக்கத் தமிழ் வேத வொலிகளுந் தழைக்கப் பஜனைக் கோஷ்டி வோசை சப்திக்கச் சிவ நாம வொலியுஞ் சிறக்க, அவ் விரதத்தின் வலப் பக்கத்தினின்று 'ஹரஹர மஹாதேவ' எனப் பன் முறை புகன்று, ஆநந்தக் கூத் தாடிக் கொண்டு, இரண்டு திருக் கரங்களையுஞ் சிரசின் மேற் குவித்துக் கொண்டு, இவ் வுடலை நீத்து, ஜோதியுட் கலந்து சிவமே யாயினர். அத் திரு மேனியானது பூமியிற் சாயும் போது அருகி னின்ற வந்தணர்கள் தாங்கிக் கொண்டனர். கீழ் விழுந்த தர்மங்களைத் தாங்குபவர்கள் அந்தணர்களே யென்னுங் குறிப்புப் போலும், தமக்குப் பின் தமது குரு ஸ்தாநத்தை யிவ் வண்மே 'யாராவது ஏற்றுக் கொள்வர்' என்னுங் குறிப்பு மாம். இத் தகைய அற்புதமான நிர்வாண மாதலி னன்றே அந்தரி யாமி யாகிய பரமாத்மா சிருங்க கிரி செகத் குரு பீடம் சிவாபிநவ நரசிஹ்ம பாரதி சுவாமிக ளவர்கள்பால் 'இன்று நமது மரபை வளர்க்கும் பெரியார் விதேக முத்தி யெய்துவர்' என் றுணர்த்துவித்தது. செகத் குருவிற்கும் இவர்பா லிருந்த அன்பு தான் என்னே? யென்னே?



இந்த விதேக முக்தியினை, "திருக்கள ரீசன் றிருவரு ளதனுற் றேரினிற் றிருவுலாப் போந்தே, மருக்கிளர் மருங்கிற் சென்றிரு ஞான்று மகிழ்மகா தேவவென் றிறைஞ்சுங், குருக்குண வீர ஞாநதே சிகனைக் குலவுவை காசிவெள் ளியினிற், பெருக்குவை சாக வுடுவி னிற் றமது பேரொளிப் பிழம்பில்வைத் தனனே" என்னும் சுப்பய்ய ஸ்வாமிகள் இயற்றிய செய்யுளானும், "சீராருந் திருக்களரில் விரோதிகிரு தெனுமாண்டிற் றிங்க ளாகும், போராரும் வைசாகம் பிரதோஷம் புகர்வாரம் பிறந்த நாளிற், றேரோரு மெர்தை யரன் றென்வீதி தனில்ஹரமா தேவ வென்னு, மோராருஞ் சத்தமுடனிருவினையுங் களைந்துபத மெய்தி ஞனே", "எய்தியவ னியாரென்னி லிசைத்திடுவன் றிருக்கழநி யெனுமூர் தன்னில், வைதிக நன் னெறிசைவ நெறிவிளங்க வந்துவளர் மணிவி ளக்கா, மெய்திகழு முத்திரா மேசகுரு வழியதனை விளக்க வவ்வூ, ரெய்திவளர் வீரசே கரஞாந தேசிகனு மிறைவன் மாதோ" என்னும் காரைக் குடி அருணசலம் செட்டியார் இயற்றிய செய்யுளானும் அறிக.

# 10-வது அத்தியாயம்.

## வீர சேகர ஞான தேசிக சுவாமிகளின் வியோகத்திற் கிரங்கல்.

இங்ஙனம், வீர சேகரேச ராகிய பரம சிவன் உலக முய்விக்கத் தமது அருட் சத்தியாற் கொண்ட வீர சேகர ஞான தேசிகரது தேகம் நீங்கிய பின்னர் அங் குள்ள பல் லாயிரஞ் சனங்களும் இவ் வீர சேகரனாரின் அற்புதச் செய்கைகளைக் கண்டு, வியப் புற்றவ ராய்த் "திருக் களரையு மாள வந்த சிவாவதாரச் செல்வரே! யாங்கள் பன் னாட் செய்த முன்னைத் தவத்தின் பயனா லன்றோ? ஈண் டெழுந் தருளி வந் தருளினீர். தேவரீர் இன்னுஞ் சில போ திருந்து எங்களை யீ டேற்ற லின்றி உழுந் தருளும் போதில் பாரி ஜாத வநேசர் தமது பணிக் குறையும் நோக்காது பாதத்திற் சேர்த்துக் கொண்டனரே! கையிற் கிடைத்த கநதந மணியையும் இழந்தோமே! அந்தோ! இந் நாடு செய்த பாக்கியக் குறைவும், யாங்கள் செய்த புண்ணியச் சிதைவும் என்னே? எங்கள் நாட் டையும், எங்களையு மீ டேற்ற வந்த எந்தாய்! இணை யிலாத தவச் செல்வ மருட் செல்வ முடைய துணையோய்! இந்தத் திருக் களர் க்ஷேத்திரமே அப்பர்க்குத் திரு வை யாறு போன்று, எங்கட்குக் கைலாச மென் றிருந்தோமே, இது சிவ னில்லாக் கைலாசம் போ லானதே! தேவ னில்லாத் திருக் கோயில் போ லானதே! தலைவ னில்லாத் தரு மனை போ லானதே! தலை யில்லாத் தருப் போ லானதே! இந்தப் பாரிஜாத வநேசரு மிவ்வணஞ் செய்யலாமோ? எங்கள் துர்ப்பாக்கிய மென்னே? என்னே?" என்று பல வாறுகப் பிரலாபித்தார்கள் ஒருசாரார்.

பாரிஜாத வநேசர் சீ ரருள் விளையாட்டையும், வீர சேகர ஞான தேசிகனார் பே ரன்பின் தேட்டத்தையும் நினைந்து நினைந்து நெஞ்ச ரெக் குருகி 'ஹரஹர சிவ சிவ' என்று சிவ நாமஞ் செய்தார்க ளொருசாரார்.



"இத்தகைய தெய்வீகத் திருப் பணியை இனி மேல் யாவர் இங்ஙனம், அன்போடும் அருளோடும் பொருளோடும் தெய்வச் சிற்பி போன்று அமைப்பவர்கள். அந்தோ! அந்தோ! எங்கள் பாவத்தின் றிறமும், தவத்தின் குறைவு மிருந்த வா றென்னே? நமது வினைப் பயன் யாரை நொந் தென்ன" என்று அழுத கண்ணீருடன் தொழுத கையராய் வீர சேகரர் திரு மேனியைப் பார்த்துப் பார்த்துக் கதறினார்க ளொருசாரார்.

"பண்டைக் காலத்துப் பரமாசாரியர்களான திரு ஞான சம்பந் தர் முதலியோர்கள் பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்து கொண்டு, அருள் விளையாட லாடி, அவநியை யுய்வித்து அரு னுருவே யாயினர்" என்பதன் உண்மையை நூலா லுணர்ந்தோம். அதனை உண்மை யென்று தெரிவிக்க வீர சேகர ஞான தேசிகரின் அருள் வலியா லடையும் திரு வருண் முத்திப் பேற்றைக் கண் ணாரக் கண்டோம். "இத்தகைய அருள் வைபவத்தைக் காணப் பெற்ற நமது சென்மங் கடைத் தேறியது" என்று மகிழ்க் களிப்புடன் கநத்த வுரைகள் சொல்லிக் கொண்டு கடவுளைச் சிந்தித்தார்க ளொரு சாரார்.

தே ரிழுப்பதை விட்டு விட்டு, திரு ஞான சம்பந்தர் திரு மணத்தில் தீண்டாதவருந் திரண்டு சென்று சிவ மானாற் போல அதை யிழுத்த பஞ்சமர் முதலிய பல தீண்டாப் பெற்றியோர்களும், "கடவுளே! எங்கட்கு மிச் சமயம் இத்தகைய காட்சி காட்டிய எம தாண்டவர் எங்கு மறைந்தனரோ? இன்னு மொருதரமேனும் எம தாண்டவர் முன்னிலையில் இத் தேரை யிழுக்கும் பாக்கியத் தைப் பெற்றிலேமே! அந்தோ! யாஞ் செய்த பாக்கியம் எம தாண் டவரை எப்போது காண்போமோ" என்று பஞ்சமர்கள் பன் னூற்றுக் கணத்தவர்களுங் கட லொலி யெனக் கதறினார்கள். இயல் புணரார்க்கு மித்தகைப் பக்தி வந்த வா றென்னே? வீர மாதவரின் விமல வருட் செய்கையினால் என்க.

'இராசு முதலியார்' என்னும் பக்த சிரோமணி யாகிய முக்த வழிபாடுள சுத்த மனமார் தொண்டர், தண்டம் போல் வீர ஞான தேசிகர் அருட் டிரு மேனியி னடிக் கமலத்தில் வீழ்ந்து, "என்னை யாள வந்த எந்தாய்! எமது சொல்லுக் கிசைந்த வன்னாய்! எங் குறை தீர்க்க வந்த செல்வ! இனி யான் செய்வது என்னே? என்னே? கண் ணிலாக் கருத்த னானேன்; உயி ரிலா வுடல் போ லானேன்; இருந்து மில்லாதவ னானேன்; எமது குறையைத் தீர்ப்பவரு முமைப் போன்று மூன் றுலகத்து முண்டோ? கேட்டது மில்லையே! அந்தோ! அந்தோ! எமது துரதிர்ஷ்டம் உமது பேரதிர்ஷ்டம் இப்போது என்னையு மும்முடன் கூட்டிக் கொண் டருள்வீர்" என்று புலம்பி மண்ணிற் புரண் டழுதனர். நமது வீர சேகர னாரின் உண்மையைக் கண்ட உண்மைத் தொண்ட ரன்றோ? இவரது அன் பிருந்த வா றென்னே? என்னே? 'எவரேனுந் தாமாக' என்னுந் திரு மறை யுரைப்படி மனங் கசிந்த உண்மைச் சைவ ரன்றோ? இவர், அது பற்றி யன்றோ இவரது உள்ளப் பாவனையே வீர சேகரனார் இங்கு வரக் காரண மானது. என்னை? இத்தகைய வீர சேகரப் பெருமானாகிய கடலைத் தமது அன் பெனுங் காத்தி லடக்கிய தன்மைய ராதலின் என்க.

மற்றும், கோவி லூர் மதுரை திரு வண்ணாமலை சிதம்பரம் சிக்கல் திரு வாரூர் வளவ னூர் சாக் கோட்டை புனல் வாசல் திரு வையாறு பசுபதி கோவில் மான மதுரை மழு வாடி முதலிய பல வேதாந்த ஆதீனங்களி லிருந்து வந்த பல பெரியோர்களும், பல ஊர்களிலு மிருந்து வந்த அள வற்ற தன வைசியர்களும், வீர சேகர னாது மாணாக்கர் குழாங்களும், ஆவைப் பிரிந்து வருங் கன்று போன்றுந் தாயைப் பிரிந்த தகுஞ் சேய் போன்றும், பதியைப் பிரிந்த பத்தினி போன்றும், இரு கண்ணிலும் பெரு நீர் வழியத் தழு தழுத்த வாக்கராய், மிக்க கசிந்த மனத்தராய், "எங்களை யாண்ட எந்தாய்! எந்தாய்! அந்தோ! அந்தோ! வலிதிற் றடுத் தாண்ட வள்ளால்! அறிவைக் கொடுத் தாண்ட வண்ணால்! பவத்தைப் பறித்



தாண்ட பரம! யாங்கள் இனி யென் செய்வோம்? யாரைத் தரிசிப் போம்? யாரைச் சரண் புகுவோம்? அந்த மிட்டு வளர்த்த அரசே! ஆடை கொடுத்துக் காத்த அரியோய்! பாலகற்குப் பாலகனாய்ப் பரமற்குப் பரமனாய் ஆசாரியற்கு மாசாரியனாய் அன்னைக்கு மன்னை யாய்த் தந்தைக்குந் தந்தையாய் உயிர்க்கும் உயிராய்க் கண்ணுக்குக் கண்ணாய் அறிவுக்கு மறிவாய் கலந் திருந் தாண்ட கருணைக் கடலே! சின் முத்திரையோ டிருந்து உபதேசித் தருளுந் திரு மேனித் திற மெங்கே? மறு பிறப்பிற்கு மருந் தாகிய உமது திரு வாக் கெங்கே? அருளோடு நோக்கும் திரு நோக் கெங்கே? எங்கள் வேண்டுகோளைக் கேட்கும் திருச் செவி யெங்கே? யாங்கள் தொழுது முகத்தோ டணைத்த திருப் பாத மெங்கே? ஓ! பாரிஜாத வனேச! எங்களைத் தவிக்க விட்டு எமது எந்தையா ரவர்களைச் சொந்த மாக்கிக் கொண்டனையோ? எங்களைப் புறம் பாக்கிக் கழித் தனையே? உமது மறக் கருணை என்னே? என்னே? அமுத வல்லி யம்ப! உமது கருணை யித்துணை தானோ? அமுத மாயின் நினது கருணை, எமது எந்தையார் திரு மேனியும் நிலைத் திருக்காதோ? வஞ்சித்தனையோ?" என்று பல வாறு இரங்கினர்கள். என்னை? இவர்களது ஆசிரியரின் சத்பாவப் பணியின் அருமை. இவ் வணம், பல் லாயிரம் பேர்களும் சொல்லாற் பல சொல்லியும் நினைத்தும் கசிந்தும் பணிந்தும் விழுந்து புரண்டும் ஆடியும் பாடியும் தேடியும் பிரலாபித்த வொலியானது, கட லொலியினும் மேம்பட்டது. அன்று தான் திருக் களர் களரி (நடன சபை) யாகவே யிருந்தது. துருவாசர் போன்றவர்க்குக் களரி யாதல் பொருத்த மன்றோ? அன்றியுங் கைலாச மான தெனினு மொக்கு மென்க.

———

## 11-வது அத்தியாயம்.

### அண்ணாமலை ஞாந தேசிக சுவாமிகள் வர லாறும், வீர மா முநிவர் திரு மேனி அடக்கமும்.

இங்ஙனம், தூர்வாச முநிவர் போன்று வந்து அருள் வலியால் அடைந்தார்க் கருளும் பாரிஜாத வநேசப் பெருமானுக்கு அரிய பெரிய வளவில் பணிகள் செய்து, வாத வூ ரடிகள் போல் சித் வடிவத் திலய மாகிய வெந்தை மாதவரின் திரு வடியை யடைந்து, பல வடியர்களிலும் தலைமையராய் இரண்டா முறை பாடம் போதித்துக் கொண் டிருந்தவரும், தேனி பட்டியிற் றோன்றிய அண்ணாமலை ஞாந தேசிகர் என்பவரும் ஆகிய பெரியாரை வீர ஞாந முநிவர் முன்பு அருளியபடி வெள்ளி யங்கிரிச் சுவாமிகள் முதலிய வடியார்களும், தேவி கோட்டை சித. முரு. முருகப்ப செட்டியார் முதலிய வைசிய கனவான்களும் கோவிலூர் மடாலயத்திற்கு ஆசாரி யாராக இருக்கும்படி வேண்டிக் கொள்ள, அதற்கு உடன்பட்டு ஆசாரிய ஸ்தாநத் திருந்தனர். இவரே முன்னர் மாணாக்கர் கணங் களிலுங் கூறப்பட்ட தேனி பட்டி அண்ணாமலைச் சுவாமிக ளாவார்கள்.

இவ் வணர் தலைமை பெற்ற வீர மா முநிவரின் மாணாக்கராகிய அவ் வண்ணாமலை ஞாந தேசிகர், அந்த வரு ளவதார மாகிய திரு மேனியைப் பீடத்தின் மே லிட்டுப் பல் லாயிரம் அடியார் கணங் களும், தந வைசியர் கணங்களும், அன்பர் கணங்களுஞ் சூழப் பல வித மான வாத்திய கோஷங்க ளொலிக்க, வேதாகம விதிப்படி அள வற்ற பால் தயிர் நெய் இள நீர் கருப்பஞ் சாறு தேன் பஞ்சா மிருதம், மற்றும், பல பழ வகைச் சாறுகள் கொண்டு, திரு மஞ்சந மாட்டி ஆடை சந்தநம் புஷ்பம் முதலியவைகளால் அலங்கரித்துப் பல நைவேத்தியங்களுடன் சோடசோபசார பூசை செய்து யாவரும் போற்றி வணங்கிப் புஷ்ப விமாநத்தி லேற்றிப் பல வைபவங்களுடன் வீதி யுலாச் செய்ய நிச்சயித்த போது, அதி



சமயம் இராசு முதலியார் வந்து "இரதங்கள் ஐந்தும் தெற்குவீதியில் இருக்கின்றமையின் வீதி உலாச் செய்வது தடைப்படும்" என்று கருதி, வீரேசர் சந்நதியில் தண்டம் போல் விழுந்து நமஸ்கரித்து, "தாங்கள் உள்ளபடி மகானா யிருப்பின் தங்களை வீதி யுலாச் செய்ய இந்த இரதங்கள் ஐந்தும் உச்சிப் போதுக்குள் தத்தம் நிலைக்கு வந்துவிடல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அதன் பின் சென்று, இரதங்களை ஆட்களைக் கொண்டு இழுக்கச் செய்தனர். உடனே வீரேசருடைய கிருபையினால் தம் நிலைக்கு வந்தன. அதன் பின் யாவரும் அள விலா ஆநந்த முடையராய்ச் செந் தூள் பறக்கக் கூத் தாடிக் கொண்டு, வீதி யுலாச் செய்து கொண்டு வந்து, கீழ் புரம் பஞ்ச ரதங்களுக்கும் முன் கொண்டு வந்து, நேர் முகமாக வீர சேகாருடைய திரு மேனி விமாநத்தினை நிற்கச் செய்து, இரதத்தி லிருக்கும் பாரிஜாத வநேசர் முதலிய பஞ்ச மூர்த்திகட்கும் கற்பூர ஆராதனைசெய்யும் சமயம் பாரிஜாதவநேசர் இரதத்தி லிருந்து உபய கெருடன் வீர சேகா ருடைய திரு மேனி விமாநத்திற்குள் வந்தது. இதனால், "பாரிஜாத வநேசரும், அமுத வல்லி யம்மையும் உபய கெருட வடிவு கொண்டு, வீர சேகா ருடைய திரு மேனியைப் பரிசித்துப் போயினர்" என்றே நம்மனோர்க்குத் தோன்றுகின்றது. பின் நான்கு வீதியும் சுற்றி வந்து, முன்னரே முநிவானர் திரு வுளங் கொண் டிருந்த திருக் களரின் சிவாலய ஈசாந திசைக்க ணுள்ள பூமியில் ஆகம விதிப்படி முன்னர்க் குறித்த வெள்ளைக் கற்களா லமைக்கப்பட்ட வடக்கக் குகையில் அடக்கஞ் செய்து பல விதமான பொன் தங்கம் வெள்ளி இரத்திநங்கள் அதி லிட்டு விபூதி கற்பூரம் மஞ்சள் செந் தூள் முதலியவைகளால் பந்தநஞ் செய்து பல வித மான ஆராதனை செய்து வணங்கிப் போற்றினர். அன்று, வாநவர் பூ மாரி பொழிவது போன்று வான் றுளி வீழ்ந்து கொண்டே யிருந்தது. திரு மேனிக்கு அபிஷேகம் செய்த தீர்த்தம் முழுதினை யும் வந்தோர் யாவரும் தத் தம் ஊருக்குக் கொண்டு சென்றனர்.

---

## 12-வது அத்தியாயம்.

### திருக் களரில் வீர சேகரருக்கு அண்ணாமலை ஞாந தேசிக சுவாமிகள் ஆலய நிர்மாணமும், கும்பாபிஷேகமும்.

அதன் பின்னர், அவ் வண்ணாமலை ஞாந தேசிகர் மூன்றாவது தினத்தில் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து "மோக்ஷ தீப" மென்னும் பத்தாங் கிரியையும் பல வகையான அடியர் கணங்கள் சூழ .அள விலாத வபிடேக வாராதனைகளுடன் செய்து மகேசுர பூசை செய்து வந்திருந்த வடியார்களுக் கெல்லாம் வஸ்திரம் விபூதிப்பை முதலிய வளித்துப் பல வைபவங்களுடன் செய்து முடித்தனர்.

மற்றும், பலர்கள் சிவ லிங்க வடிவ மாகிய நமது வீர சேகரப் பெருமானார்க்குத் தீப மிடல் மா விளக் கிடல் வலம் வால் காணிக்கை யீதல் அர்ச்சித்தல் முதலிய பல விதமாக வழிபட்டுத் தத்தமது மநோபீஷ்டத்தையு மடைந்தனர். இவரது பாதுகையினை மாணாமதுரையில் சதா சிவ சாமிகள் வைத்துப் பூசித்துவருகின்றனர்.

பின்னர், சில மாணாக்கர்களாலும் தந வைசியர்களாலுஞ் சேகரிக்கப்பட்ட திரவியத்தைக் கொண்டு, இவ் வண்ணாமலை ஞாந தேசிகர் வீர மா முநிவர் அதிட்டாநத்திற்குக் கர்ப்பக் கிருகம் அர்த்த மண்டபம் மகா மண்டபம் சோபாந மண்டபம் தூபி கோபுரங்கள் முதலியவை அரியதும் அழகு வாய்ந்ததும் பெரியது மாகிய கற்றிருப் பணி செய்து, கலியுக ௫௲௰௬-க்குச் சரியான ஆநந்த வருஷம் தை மாதம் ௨௰௧வ புதன் கிழமை சதுர்த்தி திதி உத்திர நட்சத்திரம் அமிர்த சித்த யோகம் மீந லக்கிநத்தில் கும்பாபிடேகமும் பற் பல வைபவங்களுடன் செய்து முடித்து இரண்டு கால பூசையு நடாத்தி வந்தனர். முன்னர், திருக் களர் ஆண்டவராகிய வீர மா முநிவரால் நடத்தப் பெற்ற பாரிஜாத வநேசர் ஆலயத்திற்கு பூஜை முதலியவற்றிற்கு வேண்டிய விளை நிலம் வாங்கி வைத்துச் சிறப்பாகச் சிவாலய காரியங்களையும் நடத்தி வந்தனர்,

---



## 13-வது அத்தியாயம்.

### அண்ணாமலை ஞாந தேசிக சுவாமிகள் விதேக கைவல்யமும், மஹா தேவ ஞாந தேசிக சுவாமிகள் வர லாறும்.

இவ் வணமாக, அண்ணாமலை ஞாந தேசிகர் வேதாந்த போதகாசாரியரா யிருந்து, சிவாலய மடாலயங்களை விருத்தி செய்து, பல பக்குவர்களை முத்தி யடையு மாறு உபதேசித்துக் கொண்டு, ஆசிரியர் மணியா யிருந்து, எட் டாண்டு கழித்துத் தமது தேக வியோகந் தெரிந்து, தேவி கோட்டை நகரத்தி லுதித்தவரும், 'மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள்' என்பவரும் வீர மா முநிவர் மாணாக்கரென முற் கூறப்பட்டவரு மாகிய அப் பெரியாரைக் கோவிலூர் மடாலயத்திற்கு ஆசாரியராக ஏற்படுத்தி விட்டு, கலி ௫௲௨௰௧ சித்தார்த்தி வருடம் வைகாசி மாதம் ௮வ திங்கட் கிழமை கிருஷ்ண பக்ஷ சஷ்டி திரு வோண நக்ஷத்திரத்தில் விதேக கைவல்ய மடைந்தனர்.

அதன் பின்னர், மகாதேவ ஞாந தேசிக ஸ்வாமிகள் கோவிலூர் மடாலயத் தலைமையை யேற்றுக் கொண்டு, தம் ஆற்றல் அளவிற்குத் தக்க பல வாறு விருத்தி செய்து கொண்டு, வேதாந்த போதகாசாரியரா யிருந்து வருவதுடன் தமது ஆசிரிய ராகிய வீர மா முநிவர் அதிஷ்டாநத்திற்குத் திருப் பணி செய்யக் கருதிப் பிராகார மண்டபம் உத்சவ மூர்த்திக்கு ஆலயம் ராஜ கோபுரம் முன்னர் பதினாறு கால் மண்டபம் முதலிய பல திருப் பணிகளை அரிய பெரிய வுரிய நய மிக்க கற் பணி யாக்கிப் பல வகைத் தீபங் களின் அழகு வாய்க்க வலங்கரித்துக் கண்டார்க்குக் கைலாசமென்னவும், பணிந்தார்க்குப் பரம பத மென்னவும், சிவாலயம் போன்று சிறக்கச் செய்து, பல விதமான வைபவங்களுடன் முன்னர்த் திருக் களராண்டவர் சிவபிரானுக்குச் செய்து வந்த வணத்தையும் நடத்திவருகின்றனர்.

---

## 14-வது அத்தியாயம்.

### வீர சேகரர் ஆலயத்தில் நடந்து வரும் வைபவமும், சரித்திர சிரவண பலனும்.

மற்றும், பல தந வைசியர்களும், தந வைசிய மாதர்களும் வெள்ளி விமாநம் பொன் முடிகள் இரத்திந ஆபரணங்கள் வெள்ளி அங்கிகள் வெள்ளித் திரு வாசிகை வெள்ளிப் பாத்திரங்கள் முதலிய வைகளுஞ் செய்விக்கப்பட்டு வருஷ ஆராதனை (குருபூசை)த் திநத்தில் வீர சேகர முநிவருடைய திரு வுருவ விக்கிரகத்தினை வெள்ளி விமாநத்தில் எழுந்தருளச் செய்து, பாரிஜாத வநேசர் கூட வீதி யுலா வந்து, வீர சேகரப் பெருந்தகையார் விதேக கைவல்ய மடைந்த விடத்தில் பல விதமான நைவேத்தியங்கள் செய்து, விநியோகம் பண்ணப்பட்டுப் பல வைபவங்களுடன் திருக் கோயி லடைந்து, ஆராதனைகள் செய்யப்பட்டு வருகின்றது.

மற்றும், பல தந வைசியர்களும், தந வைசிய மாது சிரோன் மணிகளும், பருப் பந்நம் சர்க்கரை யந்நம் கற்கண் டந்நம் பால் சுண்டல் கற் பூரம் மாதக் குரு பூசை முதலிய கட்டளைகளு மேற் படுத்தி வீரேசப் பெருமானுர்க்கு நடத்தி வருகின்றனர்.

இஃ தன்றியும், மேலும் பல வகையான தங்க வங்கிகள், வெள்ளி யங்கிகள் மண்டப முதலிய திருப் பணிகளும் தந வைசியச் செல்வர்கள் நடத்துவார்கள். இவ் வதிஷ்டாநம் சிவாலயம் போற் சிறந்து விளங்கி வரு மென்று திரு வருளாற் றெரிகின்றது.

இஃ தன்றியும், மற்றும், பல எண் ணிறந்த வன்பர் கணங்கள் காணிக்கை யிடல், குரு வாரம் நோன் பிருந்து தரிசித்தல், வலம் வரல், மா விளக் கிடல், நெய்த் தீப மிடல், பிரார்த்தித்துக் கொண்டு தந தாந்யாதிகளில் தமக்கு இடை யூறுவரின் அது தீரும் வண்ணம் சிகை வாங்கல், (முடி யிறக்கல்) தல வாசம் பண்ணல் முதலிய பல வழிபாடுகள் செய்து வருகின்றனர்.



இந்த அதிஷ்டாநச் சிறப்பைக் கூற வும்பராலும் முடியாது. யா னெவ்வணங் கூறுதற்காம். தெரிசிப்பார் மநந் தெளி வடை கின்றது. சிந்திப்பார் மந மந்தந் தீருகின்றது. வந்திப்பார் மநம் வாத்தை யடைகின்றது. போற்றுவார்கள் புக ழடைகின்றார்கள். பணிவார்கள் பய னடைகின்றார்கள். அறக் குறைவும் நிறை வாகின்றது. ஆபத்துஞ் சம்பத் தாகின்றது. திருக் கள ராண் டவர் நிகழுங் காலத்தில் எத்தகைய வநுக்கிரக மிருந்து வந்ததோ, அத்தகைய வநுக்கிரகம் அருண் மேனியாற் செய்து வருகின்றனர். ஆண்டவர் இருக்குங்கால் கண்டார்க்கு அச்சமும், தொண்டு செய் வார்க்குத் தூய்மையும், அடைந்தார்க்கு அருளும், படிந்தார்க்குப் பயனு மளித்த வண்ணம் இன்றும் அதிஷ்டாநத்தில் நடந்து வருகின்றது. இப் பெரியாரது அதிஷ்டாநத்தைத் தெரிசிப் பவர்க்கு 'இந்த வீரேசரது அருட் செய்கைகள் முன் னிருந்தன' வென்பதும், இம் மகான் 'சிவாவதார' மென்பதும், 'ஆசார்ய வரன்' என்பதும், சமய குரவர்கள் போன்று 'திவ்யச் செய்கைகள் நிறைந் திருந்தன' ரென்பதும், 'தத்துவ ஞாநி' யென்பதும், கலி யுகத்தி லோர் கரை யற்ற 'தவ சிரேஷ்டர்' என்பதும் முன்பு கண்டு முழுது முணரார்க்குந் தெற் றென விளங்கும்.

முன்னர் எமது பிரானுர் திருக் களரை யாண்டு, திருக் கள ருக்குத் தலைமையா யிருந்தது போல், இப்போது சிவ லிங்க வடிவ மாய்த் திரு வுருக் கொண் டெழுந் தருளி அவ் வணமே நிகழ்ந்து வருகின்றனர். மேலும், எக்காலும் இவ் வணமே நிகழ்வர்.

இங்ஙன மாக, சிவாவதார வடிவ வீர மா தவ முநிவரின் அருட் சத்தியானது, தமது அதிஷ்டாநத்திலும் விளங்குகின்ற மையினு லன்றோ 'பள்ளத் தூர்' என்னும் வைசிய நகரத்தி லுள்ள சு. சு. சித. விலாசம் உள்ள 'சிதம்பரஞ் செட்டியார்' என்னும் அன்பர்பால் கநவிற் சென்று, "அன்ப! சிவபெருமானுக்குச் சோ

வேண்டிய புஷ்பத்தினை எமக் குபயோகப்படுத்தி வருவது நலமா? நீ விரைவில் வேறு நந்தந வந மொன்று செய்வை" எனத் திரு வாய் மலர்ந் தருளினமை கண்டு, அவர் அப்படியே நந்தந வநம் உண்டு பண்ணிப் புஷ்பக் கட்டளை யேற்படுத்தி நடந்து வருகின்றது.

இஃ தன்றியும், இவ் வீரேசரது மாணாக்க ராகிய பழையூர்ப் பட்டி அருணாசல சுவாமிகளி னுடைய அன்ப னொருவன் பால் கநவிற் சென்று, "அன்ப! அருணாசலம் நிலம் வாங்கி வைப்ப தாய்ச் சொன்னான்; இது வரை வாங்கி வைக்கக் காண்கிலம்" எனத் தெரிவித் தருள, அவர் உடனே அந்த அருணாசல சுவாமிகளிடந் தெரிவிக்க, அவ்வாறே அவர் ஐந் நூறு ரூபாய் கொண்டு வந்து, தமது ஆசிரிய ராகிய திருக் கள ராண்டவருக்குச் சமர்ப்பித்துப் பிரசாதம் பெற்று, அங்கேயே விதேக கைவல்ய மடைந்தனர்.

இத் தன்மைய சிறப்பு வாய்ந்த "திருக் கள ராண்டவர்" என்னும் வீர சேகர ஞாந தேசிகரின் புராணத்தைப் படித்தவர்களும், கேட்டவர்களும், சொன்னவர்களும், உட னிருந்தவர்களும், அண்மை சேய்மைகளி லிருந்தவர்களும், எல்லா நன்மையையு மடைவார்கள். மற்றும், வருட ஆராதனை யாகிய குரு பூஜா திநத்தின் முன்னர், பத்து நாளாயினும், ஐந்து நாளாயினும் இப் புராணத்தை, திருக்கள ராண்டவரின் உத்சவ மூர்த்திக்கு அபிடேக வலங்கார வாராதனை முதலிய சோடசோபசார பூசை செய்து, விரத மிருந்து, "குருவே தெய்வம்; குருவே மும் மூர்த்திகள்; குருவின் வாக்கியமே மந்திரம்; முக்தி மூலங் குரு கிருபை" என்று அநந்ய பக்தியுடன் சந்நிதியில் பீடத்தில் வைத்து, வீர மாதவரைத் துதித்து, நியதமாய்ச் சிரத்தையுடன் படித்து முடித்து, குரு பூசா திநத்தில் ஆண்டவரது உத்சவத்தையுங் கொண்டாடிப் பாரிஜாத வநேசர் அமுத வல்லி யம்மை திரு வருளையும் பெற்று, வீர சேகர ஞாந தேசிகரின் அநுக்கிரகமும் பெற்று வாழக் கடவர்கள்.



இந்தப் புராணத்தை வீர சேகர ஞாந தேசிகரின் மாணாக்கர்களும், அவர்களின் மாணாக்கர்களும், அவர்களின் மாணாக்கர்களும், மற்றும், பரம்பரையாய் "அவ னருளைத் தேசங் குலவ வளர்ப்போன் சற் சீடன் றெரிந்திடினே" என்றபடி, இவ் வீரேசரது பெருமையை உலகெலா முணர்த்தி யுய்விக்கக் கடவர்கள்.

## வாழ்த்து.

வாழ்க வேதம்வே தாந்தம கிழ்பொருள்
வாழ்க சோதிமா லாதிம ரபதும்
வாழ்க கோவிலூர் மாண்புவ ளமெலாம்
வாழ்க வீரஞா நேசனும் வாழ்கவே.

## 'திருக் களர் ஆண்டவர்' என்னும்

## வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் புராணம்




வீர சேகர ஞாந தேசிகர் திரு அடி வாழ்க.

சர்வம் சிந்மயம்.

ஓம் தத் சத்.



# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 5 | ஆகாயக் | ஆகாய |
| 4 | 6 | உறை விடமும் | உறை யிடமும் |
| 5 | 8 | சிரார் | சிறார் |
| 6 | 8 | அளகை | அழகை |
| ,, | 15 | தன்மை | தண்மை |
| 8 | 21 | பொருட் டேடிச் | பொருடேடி |
| 10 | 23 | அளகை | அழகை |
| 11 | 11 | உருவின்றியவாயும் | உருவினறிவாயும் |
| 15 | 1 | மடற் | மடல் |
| ,, | 17 | பெயர்த் தரித்த | பெயர் தரித்த |
| 21 | 8 | நூற் | நூல் |
| ,, | 20 | வேந்த னாகிய | வேந்த ராகிய |
| ,, | 22 | வருவையேல் | வருதிரேல் |
| 22 | 15 | அடியேன் | அடியேம் |
| ,, | 23 | நூற்களைப் | நூல்களைப் |
| 23 | 14 | நிமிர்த்தம் | நிமித்தம் |
| 24 | 8 | தோறு யுகர் | தோறும் யுகர் |
| 26 | 12 | தளைத் | தழைத் |
| ,, | 19 | இடும்பிற் | இரும்பிற் |
| ,, | 22 | முனிவானுக்குத் | முனிவருக்குத் |
| 27 | 6 | போலும் | போன்றும் |
| ,, | 22 | துதிக் கொண்டு | துதித்துக் கொண்டு |
| 28 | 9 | ஐயா வாள் | ஐயா அவர்கள் |
| 29 | 4 | பதிற் | பதில் |
| 29 | 11 | மடாலயத்தில் | மடாலயத்திற் |
| ,, | 14 | பாங் குடையனாய்ச் | பாங் குடையராய்ச் |
| ,, | 15 | மொழித்தான் | மொளித்தான் |
| ,, | 24 | வழைத்துக் | அழைத்துக் |
| ,, | 25 | அரிஞ | அறிஞ |
| 30 | 3 | பிரார்த்தித்தற் | பிரார்த்தித்ததற் |
| ,, | 16 | பக்குவிகட்டு | பக்குவிகட்கு |
| ,, | 21 | யிருந்து | யிருந்தும் |
| ,, | 22 | வந்து | வந்தும் |
| ,, | 25 | செய்தருளவும் | செய்தருள |
| 31 | 2 | பாதச் | பாத |
| ,, | 11 | வெழியாம் | வெளியாம் |
| ,, | 20 | வீர சேகரத் | வீர சேகர |
| 32 | 6 | ரிரையையும் | ரிறையையும் |
| 33 | 12 | நியாச யென | நியாசி யென |
| 34 | 23 | தாணுடையா | தாளுடையா |
| 35 | 24 | நல்லதம்பிச் | நல்லதம்பி |
| 36 | 11 | நீ ரொழுக | நீ ரொழுகத் |
| ,, | 17 | செய் | செய்யு |
| 38 | 9 | வரநின் | வானின் |
| 39 | 2 | வா னாய்த் | வா ராய்த் |
| ,, | 3 | பேறாய்ப் | போறாய்ப் |
| 40 | 24 | சதுசாசமஅ க்குச் | சதுகூாசமஅ க்குச் |
| 41 | 6 | என்பவரும் | என்பவர் |
| ,, | 15 | நாவல | நாவலர் |
| ,, | 24 | பேரூர் | பேரூர்ச் |
| 42 | 11 | வித்யாரண | வித்யாரண்ய |
| ,, | 24 | பூச | பூர |
| 43 | 9 | வன்போடு | யன்போடு |
| ,, | 21 | கட்டுபடி | கட்டுப்படி |
| ,, | 28 | நெறியாண | நிரியாண |
| 44 | 1 | விளா | விழா |
| ,, | 16 | முதலிய | முதலியவைகளைப் |
| 45 | 17 | கோவிலூர் | கோவிலூர்ச் |
| 46 | 14 | மிக்கவுப | மிக்குப |
| ,, | 20 | பெருமானாரும் | பெருமானார் |
| 50 | 21 | என் னாட்டினுஞ் | எங் நாட்டினுஞ் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 51 | 4 | வைதீக | வைதிக |
| ,, | 7 | தான் | தாம் |
| ,, | 16 | பிரார்த்திக்க | பிரார்த்திக்கவும் |
| 52 | 19 | மந | மநச் |
| 54 | 5 | தான் | தாம் |
| 56 | 3 | நூறு | நூற்றுக் |
| ,, | 9 | பாலங்களை யிய | பாலங்களையு மிய |
| ,, | 12 | தடாகத்துக்கு கல் | தடாகத்துக்குக் கல் |
| 57 | 29 | முநிவரும் | முநிவர் |
| 61 | 25 | ஸ்நாத | ஸ்தாந |
| 62 | 5 | வாராணசி | வாரணசி |
| ,, | 8 | நூற்களைப் | நூல்களைப் |
| ,, | 23 | என்னும் | முதலிய |
| 63 | 4 | அநேக ஸ்தோத்திரச் செய்யுள் | அநேக |
| 65 | 14 | பணிவிடைகளிற் | பணிவிடைகளைப் |
| 66 | 10 | பராபவ | விசுவாவசு |
| 67 | 16 | முதலிய உரை யியற்றியும் | முதலிய இயற்றியும் |
| 68 | 21 | நூற் | நூல் |
| ,, | 22 | வாராணசி | வாரணசி |
| 69 | 3 | வில்லாத | வில்லாத வென் |
| ,, | 4 | சொல்லுவேன் | சொல்லுகேன் |
| ,, | ,, | சொல்லுவேன் | சொல்லுகேன் |
| ,, | 10 | வகை கற்ற | வகை வந்த |
| 70 | 15 | இயாவரும் | யாவரும் |
| 80 | 19 | கோவிலூருக்கு | கோவிலூருக்கு வந்து |
| 85 | 11 | மநக் | மநங் |
| 87 | 18 | செயலின | செயலின் |
| 88 | ,, | திருக் களிரி | திருக் களரி |
| 93 | 19 | திரு வளங் | திரு வுளங் |
| 103 | 12 | திங்கட் | புதன் |
| ,, | 13 | சஷ்டி | ஷஷ்டி திதி |

---

☞ இப்புத்தகத்தின் வெளி டைட்டில் பேஜும், உள் டைட்டில் பேஜ் முதல் 4 பக்கங்களும், தேவநாகர எழுத்துள்ள பக்கம் முதல் 10 பக்கங்களும் மதுரை ராஜேஸ்வரி பிரசிலும், மற்றவை மதுரை மீனலோசனி அச்சியந்திரசாலையிலும் பதிப்பிக்கப்பெற்றன.

திருப் பூவண மடாதிபதி,

**காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,**

இயற்றியன.

| | | |
|---|---|---|
| 1. | நைஷ் கர்ம்ய சித்தி. | **0-8-0** |
| 2. | ஸ்வாராஜ்ய சித்தி. | **0-8-0** |
| 3. | வியாச தாத்பரிய நிர்ணயம். | **0-8-0** |
| 4. | மண்டல பிராஹ்மணோப நிஷத் ராஜ யோக பாஷ்யம். | **0-4-0** |
| 5. | வேதாந்த சஞ்ஞா. | **0-2-0** |
| 6. | ஈசாவாஸ்யோப நிஷத் சங்கர பாஷ்யம். | **0-4-0** |
| 7. | சீடாசாரம் பாலபோதினி உரை. | **0-4-0** |
| 8. | பக்தி(வைராக்ய) சதகத்தோத்திர உரை. | **0-3-0** |
| 9. | கைவல்ய நவநீதம். பாக்கெட் சைஸ் | **0-3-0** |
| 10. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி. | **1-0-0** |
| 11. | கீதாத்திரயம் (ஈசுவர கீதை, பகவற் கீதை பிரஹ்ம கீதை) பாக்கெட் சைஸ். | **1-0-0** |
| 12. | விசாரசாகரம். | **2-0-0** |
| 13. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. | **2-0-0** |